# தமிழ் வளம்

முத்தமிழ்க் காவலர்
முனைவர் கி. ஆ. பெ. விசுவநாதம் அவர்களின்
கதிர் விழா வெளியீடு






பதிப்பாசிரியர்கள்:

முனைவர் கு. திருமேனி, எம்.ஏ., பிஎச்.டி.
முனைவர் தமிழண்ணல், எம்.ஏ., பிஎச்.டி.,
முனைவர் அ. காமாட்சிநாதன், எம்.ஏ., பிஎச்.டி.






திருநெல்வேலி, தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட்.
79, பிரகாசம் சாலை (பிராட்வே), சென்னை-108.

1985

THE SOUTH INDIA SAIVA SIDDHANTA WORKS
PUBLISHING SOCIETY, TINNEVELLY, LIMITED.

கிளைகள் :

திருநெல்வேலி-6 மதுரை-1 கோயமுத்தூர்-1
கும்பகோணம்-1 திருச்சிராப்பள்ளி-2

கழக வெளியீடு: ௧௭௯௦

முதற் பதிப்பு: சூலை 1985






# THAMIZH VALAM

(MUTHTHAMIZHK KAAVALAR
MUNAIVAR K. A. P. VISVANATHAM AVARKAL
KATHIR VIZHA VELIYEEDU)

அப்பர் அச்சகம், சென்னை-108. (1/-)

# கதிர்விழாக் கண்ட
# முத்தமிழ்க்காவலர் கி. ஆ. பெ. விசுவநாதம்



## கதிர்விழா வாழ்த்து

முத்தமிழ்க் காவலன் மூத்த தமிழ்த்தலைவன்
சித்த மருத்துவச் செம்மலான்—ஒத்த
புலவர் குழுக்கண்டான் பொய்யில் அறிஞன்
நிலவரை வாழ்க நிறைந்து. —முனைவர் வ. சுப. மாணிக்கம்

# பதிப்புரை

முத்தமிழ்க் காவலர்க்கு எண்பத்தைந்து ஆண்டு நிறைவுற்ற காலை; 1983 இல் தமிழகத்திலும், பிற மாநிலங்கள் பலவற்றிலும் கதிர்விழா எடுக்கப்பெற்றது. அவ்விழாவினைப் போற்று முகத்தான் 85 ஆராய்ச்சிக் கட்டுரைகள் கொண்ட பெருந்தொகுப்பொன்றைக் கதிர்விழாக் கையுறையாகக் காவலர்க்கு வழங்குவதென மேற்கொண்ட முயற்சி, 33 கட்டுரைகள் மட்டுமே கொண்டதாக 1985 இல் வெளிவருகிறது. எதிர்பாராது நேர்ந்த பல தடைகளைக் கடந்து இத் தொகுப்பை வெளியிட நேர்ந்ததில் எங்கட்கு மகிழ்ச்சியே. 1973ல், எழுபத்தைந்து அகவை நிரம்பிய நம் முத்தமிழ்க்காவலர்க்கு முத்துவிழாவெடுக்கப் பெற்றது, எனினும் 1981 இல்தான், எட்டு ஆண்டுகளுக்குப் பிறகு, முத்துக்கோவை வெளிவந்தது. கால இடை வெளியில் முத்துக்கோவையை முந்திக்கொண்டதில் இக் கதிர்க்கோவைக்கு மகிழ்ச்சியேற்படுவது இயற்கையே அன்றோ?

இக் கதிர்க்கோவை இலக்கணம், மொழியியல் இலக்கியம், ...ய்வு, சமயம், சிற்பம், கலை, அறிவியல், பதிப்புக்கலை, அறம், ... புகுத்தோதத்தக்க பல துறைகளில் அழுத்தம் வைத்து, ... கட்டுரைகளைக் கொண்டுளது. அதனால் தமிழ் ...கதிர்க்கோவைக்குக் காரணப் பெயராயிற்று. ...ணிக்கையாக்குதற்குத் 'தமிழ்வளத்தினும்' ...தன்றோ அவர் நாளும் விழைவது; ...ரகள் எழுதியளிக்குமாறு விடுத்த ... கட்டுரையாசிரியர்கள் தத்தம் ...வினர். அவர்கட்கு எம்

தமிழ... ...த் தொண்டாற்று வதில் தளராத நெ... ...டைய செம்மல் வ. சுப மா. அவர்கள் ... ...கோவையை ஒளிபெறச் செய்துள்ளார்கள். ... ...நளாளர் மேதகு கி. ஆ. பெ. வி. சிவராம... ...லரின் ஒளிப்படம் அனுப்பியுதவினார்கள், ... ...ர்ந்த ...ன்றியறிதலைப் புலப்படுத்திக்கொள்க.

தமிழகத்தில் நூல்கள் வெளியிடுவது ஒரு கலை. அதற்கு அருந்திறன் மட்டுமன்றிப் பெருந்துணிச்சல் வேண்டும். தமிழன் மேடையேறி வெறும் சொற்பொழிவாற்றியே தமிழை வளர்த்து விடலாம் என்று கனவு காண்பவன், சிலபோது கவிதைகளில் தமிழை வாழ்த்தியும் பாராட்டியும் எழுத்திலே தமிழை வளர்த்து விடலாம் என்று நினைப்பவன், அவனிடம் செயற்பாடு என்பது எட்டுணையும் இல்லை. குசராத்திலும், வங்காளத்திலும் கேரளத்திலும் விற்குமளவு இங்குத் தமிழ் நூல்கள் விற்பதில்லை. ஓரிருவரைத் தவிரச் சொந்தமாக நூல்கள் வாங்கும் தமிழர்களைக் காண்பதே அரிதாகி விட்டது. இந் நிலையில் நூல்களை வெளியிடப் பெருந் துணிச்சலும், இழப்பைத் தாங்கும் பேராற்றலும் தேவைப்படுகின்றன.

சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் முற்கூறிய அருந்திறனும், பெருந்துணிச்சலுமுடைமையாலேதான் செவ்விய தமிழ் நூல்களை, அதிகம் வாங்கிக் கற்பாரிலாத அரிய தமிழ் நூல்களைத் தொடர்ந்து வெளியிட்டு வருகிறது. அதன் ஆட்சித் தலைவர் இரா. முத்துக் குமாரசாமி அவர்கள் முத்தமிழ்க் காவலர்பாற் கொண்ட பேரன்பினால், எம் வேண்டுகோட்கிணங்கி, இத் 'தமிழ் வளர்...
வெளியிட இசைந்தார்கள் இப்போது, இதனை
அச்சிடச் செய்து, தமிழுலகுக்குப் பயன்படு...
அன்னார்க்கும் அவருக்கு உறுதுணைய...
முறையில் இதனைப் பதிப்பித்துத் தங்...
கழகப் புலவர்கட்கும் தமிழகப் புல...
யைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

தமிழகம் இத் 'தமி...
தமிழாய்வு வளர ஆக்க...
காவலர் கி. ஆ. ...
செய்யக்கூடிய நன்...

நம் முத்... ...லும் பல்லாண்டு
பல்லாண்டு... ...காணிக்கை நூல்களைத்
தமிழக... ...வகவும் இறையருள் பாலிப்
தாக... ...ழுதுகிறோம்,

பதிப்பாசிரியர்கள்

# அணிந்துரை

எண்பத்தைந்தாண்டுக் கதிர்விழாக்கண்ட முத்தமிழ்க்காவலர் பெருமகனுக்கு அவர் தோற்றிய தமிழகப் புலவர் குழு 'எங்காவலர் நூறாண்டு வாழ்க' என்று வாழ்த்தித் 'தமிழ் வளம்' எனப் பெயரிய இவ்வறிவு நூலைச் சூட்டுகின்றது.

தமிழகத்தில் வேறுவேறு தொண்டுகட்குத் தலைவர்கள் உளர். ஐந்து கோடித் தமிழினத்துக்கோ, ஐம்பதினாயிரம் ஆண்டுத் தொன்மைத் தமிழுக்கோ தொண்டு செய்ய முன்வரும் தமிழ்த் தலைவர்கள், என்ன புதிரோ வரவர அருகிவிட்டனர். அடிமைக் காலத்து வளர்ந்த தமிழுணர்வும் தமிழுரமும் தமிழ்ச் செம்மையும் ஏனோ இவ்வுரிமைக் காலத்து வளராத தேய்பிறையாயின. இந் நிலையில் பலர் தாங்கிய தமிழ் நுகத்தடியை ஒருதான் தாங்கும் உரவோர் ஆக நம்மிடை வாழ்கின்றார் முத்தமிழ்க்காவலர்.

கதிர்விழாக்கண்ட காவலர் ஈழத்தமிழினத்தின் அழிநிலை பொறாது அகங்கொதித்து வெயில் ஓங்கிய தில்லித் தலைநகரில் நெடுந்தொலை நடந்து சென்று நடுவணரசிடம் குறைவேண்டி முறை யிட்டார் என்பதனைக் கண்டோம்.

ஒழுக்கம், தமிழ், எழுத்து, சொல்வன்மை, உறுதி, தொண்டு, உண்மை என்ற எழுதூணரண் உடையவர் நம் முத்தமிழ்க்காவலர். தமிழுக்கும் தமிழினத்துக்கும் ஒரு சிறு இடர் என்றாலும் நம் கண் நோக்கும் திசை திருச்சிராப்பள்ளியன்றோ. அங்குதான் தமிழ்ப் பண்பின் தாயுமானவர் நெடுந்தகையாக வாழ்கின்றார்.

பல்வேறு துறைகளில் ஆய்வுக் கட்டுரைகள் வழங்கிய புலவர் பெருமக்கட்கும் தமிழ் வளத்தை உருவாக்கிய பதிப்பாசிரிய

அறிஞர்கள் திருமேனி, தமிழண்ணல், காமாட்சிநாதன் மூவர்க்கும் நன்றியுடையோம்.

தாமரைச் செல்வர் தமிழ்ச் செம்மல் சுப்பையா பிள்ளையின் தூய தமிழ்நெறியைத் திண்ணிதாகக் கடைப்பிடித்துவரும் கழக ஆட்சியர் உயர்திரு இரா. முத்துக்குமாரசாமி எம். ஏ., பி. லிப்.. அவர்கள் புலவர் குழுவின் வேண்டுகோளை ஏற்றுக் கழகப் பதிப்பாகத் தமிழ்வள நூலினை வெளியிடுகின்றார். அவர் செய் தொண்டுக்குத் தமிழகப் புலவர் குழுவின் வாழ்த்தும் நன்றியும் நிரம்ப உண்டு.

*க. வைகாசி*
*தி. வ. ஆண்டு உ0கசு*
*14—5—1985*
*கதிரகம், காரைக்குடி.*

**வ. சுப. மாணிக்கம்**
*தலைவர். தமிழகப் புலவர் குழு*

# உள்ளுறை

பக்கம்

இலக்கணம், மொழியியல்

1. தொண்டு
—அறிஞர் சி. சுப்பிரமணியன் 1

2. மூன்றாம் வேற்றுமை யுருபு
—பேராசிரியர் ஆ. சிவலிங்கனார் 5

3. தொல்காப்பியஞ் சொல்லும் உள்ளுறை இயல்
—தமிழறிஞர் ஆபிரகாம் அருளப்பன் 9

4. மூன்றும் நான்கும்
—புலவர் வி. அரங்கசாமி 17

5. 'புரைதீர் கிளவி'
—அறிஞர் 'தமிழண்ணல்'
இராம. பெரியகருப்பன் 24

6. ஆசிரியர்
—'கவிஞர்கோ' கோவை இளஞ்சேரன் 29

7. எள்ளும் தைலமும்
—அறிஞர் அ. காமாட்சிநாதன் 47

8. மொழியியலும் மொழிப் பொதுமைகளும்
—அறிஞர் கி. அரங்கன் 53

9. சிவபுராண யாப்பு
—பேராசிரியர் அடிகளாசிரியர் 65

## II. இலக்கியம், திறனாய்வு

10. சங்க இலக்கிய உவமை
—புலவர் சி. செல்வத்தாண்டவன் 80

11. பத்துப்பாட்டுள் ஒன்றாகிய முல்லைப் பாட்டின் சொல் அழகும் பொருள் அழகும்
—பெரும்புலவர் கா. நயினார் முகம்மது 88

12. அதியமான் நெடுமானஞ்சி
—அறிஞர் இரா. சாரங்கபாணி 94

13. காப்பியக் கலை நலன்
—அறிஞர் தா. ஏ. ஞானமூர்த்தி 101

14. கவிஞன்—ஓர் உளவியல் அறிஞன்
—பேராசிரியர் செ. இர. செயச்சந்திரன் 110

15. பாரதியாரின் கவிதைகளில் அக்காலச் சமுதாயப் போராட்டங்களின் பாதிப்பு
—பேராசிரியை இரத்தினாவதி ஜான் 116

16. சில தமிழ் முடிச்சுகள்
—புலவர் வி. சிவக்கொழுந்து 128

## III. சமயம், சிற்பம்

17. இருளும் ஓர் உள்பொருளே
—பேராசிரியர் க. வெள்ளைவாரணனார் 135

18. ''தெய்வத் தமிழ்''
—பேராசிரியர் மா. சண்முகசுப்பிரமணியன் 145

19. தேம்பாவணியில் சூசையின் இறையனுபவம்
—அறிஞர் வி. மி ஞானப்பிரகாசம் 153

20. எட்டுத்தொகை—இறைவணக்கம்
—பேராசிரியர் ரம்போலா மாஸ்கரேனஸ் 162

21. இலிங்கத் திருமேனிகள்
—பேராசிரியர் ஆ. சுப்பிரமணியன் 169

22. இவர்தாம் அவரோ
—பேராசிரியர் கே. எம். வேங்கடராமையா 178

23. மதுரை நாயக்கர்களும் கோயில் திருப்பணிகளும்
பைந்தமிழ்ப்பாவலர் அ. கி. பரந்தாமனார் 184

IV. கலை, அறிவியல்

24. முல்லைப் பெரும்பண் எது ?
—அறிஞர் வீ. ப. கா. சுந்தரம் 194

25. ஓலைச்சுவடி பற்றிய சில குறிப்புகள்
—பேராசிரியர் மு. சண்முகம் பிள்ளை 207

26. சங்க காலத்தில் கலைவளம்
—அறிஞர் மெ. சுந்தரம் 223

27. தமிழ் இலக்கியங்களில் அறிவியல் கூறுகள்
—பேராசிரியர் கு. சுந்தரமூர்த்தி 237

28. சங்க இலக்கியக் காலமுறைப் பதிப்பு
—டாக்டர் வ. சுப. மாணிக்கம் 244

29. நாட்டு அமுக்கிராக் கிழங்கின் பண்புகள்
—பேராசிரியர் ஐ. சாதிக் 253

V. அறம், வாழ்வு

30. திருக்குறட் சிதறல்
—அறிஞர் கு. திருமேனி 261

31. எது அறம்?
—பேராசிரியர் அ. மு. பரமசிவானந்தம் 266

32. "வாழ்வு"— ஒரு பூஞ்சோலை
—தமிழ்நாவலர் புலவர் சி. அரசப்பனார் 278

33. கதிரின் கதிர்
— பேராசிரியர், அறிஞர் ந. சஞ்சீவி 285



# தமிழ் வளம்

## 1. தொண்டு

[அறிஞர் சி. சுப்பிரமணியன்]

எல்லா மொழிகளால் வாழ்வோர்க்கும் எண்ணும் எழுத்தும் இரு கண்களாகும். இவற்றின் எளிமையும், அமைப்பும் ஒலியில், வரியில் சில ஒழுங்கிற்குட்பட்டிருக்குமாயின் நடைமுறைப் பயிற்சிக்குப் பழக்கத்திற்கு நற்பயன் தருவதாகும். இது கருதியே பல மொழிகளில் இவற்றின் சீர்திருத்தத்தை அறிவியல் முறையில் மேற்கொள்ள விழைகின்றார்கள். இவ்வடிப்படையில் தமிழில், வரி வடிவில் ஐகாரத்தைச் சில எழுத்துகளோடு இணைத்தெழுதுவதில் ஒரு சிறிய மாற்றத்தைக் கொண்டுவந்துள்ளனர். இது போன்ற மாற்றம் எண்ணிலும் தேவைப்படுமாயின் அதனைக் கொணர்வதும் ஆன்றோர் கடனாகும்.

தமிழெண்களில் ஆயிரம், கோடி தவிர எல்லா எண்களும் உகரத்தில் முடிவதும், பப்பத்தாகக் கூட்டல், பெருக்கலில் வகை தொகையாக அமைந்திருப்பதும் கருதத்தக்க பெருமையுடையதாகும்.

இத்தகைய அமைப்பில், நடைமுறையில் காலில் முள் குத்துவது போல் யாவரையும் திகைக்கவைக்கின்ற, மயக்கத்தை உண்டு பண்ணுகின்ற எண் ஒன்பதும், அம்முறையில் அதன் மேலினமாக வரும் அதன் கூட்டல், பெருக்கல் நிலையிலுள்ள எண்களுமாகும். அது, தவறு அல்லது ஏனைய செல்லுகின்ற முறைக்கு மாறு என்று தெரிந்திருந்தும் வழி வழியாக வருகின்ற வழக்காற்று மரபால் அதனை அவ்வாறே பின்பற்றி வருகின்றோம். இதனால் எண் நிலையில் பல இடர்ப்பாடு, அறிவியல் நிலையில் ஆகாதது.

தமிழில், ஒன்று முதல் பத்து வரையுள்ள எண்களைக் கற்று விட்டால் போதுமானது. இவைகளே நூறு, ஆயிரம், கோடி யோடு, கூட்டல், பெருக்கல் நிலையில் மீண்டும் மீண்டும் வரு மியல்பால். ஆயின் இந்நிலையில் ஒன்பது தரும் துன்பம் எண்களின அறிவியலமைப்பைக் கெடுத்துப் பழக வராது அறிவியலையும் அலைத்துவிடுகின்றது.

ஒன்று முதல் பத்து வரையாகவும் ஒரு சொல்லாக விருக்க, ஒன்பது மட்டும் இரு சொற்கூட்டாக இருப்பதும், ஒன்றாவது நிலை யில் பத்தாவது வருவதும், ஒன்றாவது நிலையில் ஒன்பதுக்கு ஒரு சொல்லில்லாதிருப்பதும், இதன் மேல்நிலை எண்களில் இதனால் இடர்ப்பாடு காண்பதும் பயில்வாரைச் சிந்திக்க வைக்கின்றது. மாணவர்கள் இளமையில் இவ்வொன்பதால் படுந் துன்பம் ஒன்பதின் மடங்கிலுமாம். பத்து முதலாக ஒருபது, இருபது, முப்பது என்று வரவேண்டியிருக்க அவ்வொரு பதின்முன் ஒன்பது நிற்பது, கழுத் திலும் தலையிருப்பதாகும். அன்றியும் இருமுறை அடுத்தடுத்துப் பது, பத்து என்று ஒலிப்பதும் ஒவ்வாதாகும். இது, ஒன்பதனைக் கூட்டிச் சொல்கின்ற பத்தொன்பது, இருபத்தொன்பது முதலிய கூட்டுத்தொகையிலுமாகும்.

இனிப் பெருக்குத் தொகையாகச் சொல்லும்போது அதன் இடர்ப்பாடும் பெருகிச் செல்கின்றது,

ஒருபது முதலாக எழுபது, எண்பது என்ற சொன்முறையில் வரவேண்டியது தொண்பது என்பது போல் பத்தில் முடியக்கூடிய சொல்லாயின் பதட்டமிருக்காது. ஆயின் அது, தொண்ணூறு என்று நூற்றில் முடிவது ஏன் என்று நம்மையே நாம் கேட்கத் தோன்றுகின்றது. இவ்வாறே பெருக்கல் நிலையில் நூற்றின் முன் நூறு வருவதும், பத்தினிடத்தில் வருவதும், ஆயிரத்தின் முன் ஆயிரம் வருவதும், நூற்றினிடத்தில் வருவதும் எண் முறையில் ஏற்பட்ட ஏதோ ஒரு தவறுண்டு போலும் என எண்ணத் தோன்று கின்றது. இந்நிலை, எண்ணிலையில் பயில்வார்க்கும் பழகுவார்க் கும், ஏனைய எண் முறைக்கு முரண்பட்டிருப்பதால் முறை கெட்ட ஒரு பழக்கத்திற்கு வழி வகுக்கின்றது. முதல் நிலையில், ஒன்பது.

இதனை மாற்றின், பழமுறை கருதிச் செயல்படின் எண் முறைக் கொரு குறை வாராது எடுத்துக் கற்கப், பழக முடிவதாகும்.

இத்தகைய குழப்பத்தால் எல்லா இலக்கண ஆசிரியர்களும் ஒன்பது, அதன் எண்முறை வரும்போது சொற்றொடர் நிலையில் குழப்பமடைகின்றனர். அறிவியலுக்கு அப்பாற்பட்ட இலக்கணங் கூறுகின்றனர்.

ஒன்பது + பத்து > தொண்ணூறு

ஒன்பது + நூறு > தொள்ளாயிரம்

எனச் சேர்க்கையில் ஆய்விட்டனவாகச் செயற்கையான, அறிவுக் கொவ்வாத விதி கூறுகின்றனர்.

தொண்ணூறு, தொள்ளாயிரம் என்பனவற்றில், தொண் தொள் என்னும் முதனிலை அல்லது வேர்ச்சொற்கள் நம்மை சிந்திக்கத் தூண்டுகின்றன. தொள் > தொண் என நூறு வரை ஆயிருக்குமோ எனவும் எண்ண வைக்கின்றது.

நள் + து > நண்டு (நள்ளி)

கொள் + து > கொண்டு

ஆள் + து > ஆண்டு

மீள் + து > மீண்டு

நீள் + து > நீண்டு

என்பன போலத்,

தொள் + து > தொண்டு என்றாயிருத்தல் கூடாதோ எனவும் எண்ணத் தோன்றுகின்ற தோற்றத்துத் துணையாகத் தொல்காப்பி யத்தில்,

*"தொண்டு தலையிட்ட பத்துக்குறை"* —*செய்.* 100

எனவும்,

பரிபாடல் 3இல்

"............................................ஒன்றென
இரண்டென மூன்றென நான்கென வைந்தென
ஆறென வேழென வெட்டெனத் தொண்டென
நால்வகை யூழியெண் ணவிற்றுஞ் சிறப்பினை"

எனவும், ஒன்பது, தொண்டு என்னும் சொல்லால் குறிக்கப்படுவதனைக் காணலாகும். பரிபாடலில் எட்டுக்கு அடுத்த எண்ணாகத **தொண்டு** என்பது குறிப்பிடப்பட அஃது ஒன்பதின் இடத்தில் அக்காலத்தில் பயன்படுத்தப்பட்டு வந்ததாகத் தெளிவாகத் தெரிகின்றது.

எனவே, எண் முறையில் ஒன்பதாவதனிடத்தில்,

தொண்டு (9),

| | | | |
|---|---|---|---|
| எண்பது | (80) | தொண்பது | (90) |
| எண்ணூறு | (800) | தொண்ணூறு | (900) |
| எண்ணாயிரம் | (8000) | தொள்ளாயிரம் | (9000) |

எனவொரு சீர்திருத்தத்தை எண் முறையில் கொண்டுவரின் எளிமையும் பழையவமைப்புமுடையதாகும் என்பதனை ஆன்றோர் சிந்தனைக்கு விட்டு வைப்போமாக.

யாவற்றையும் பழக்கஞ் செய்யும்.

# 2. மூன்றாம் வேற்றுமை யுருபு

[பேராசிரியர் ஆ சிவலிங்கனார்]

மூன்றாம் வேற்றுமையுருபாக 'ஒடு' என்பதொன்றே கூறினர் ஆசிரியர் தொல்காப்பியர். அது வினைமுதற் பொருளிலும் கருவிப் பொருளிலும் வரும் என்றார் (தொல். சொல். 73).

"ஊசியொடு குயின்ற தூசும் பட்டும்"

"நாவொடு நவிலாது"

இவற்றில் 'ஒடு' உருபு கருவிப் பொருளில் வந்துளது. ஆனால் வினைமுதற் பொருளில் வந்ததற்கு உதாரணம் உரையாளர்களால் காட்டப்படவில்லை.

அரசனொடு கட்டிய கோயில், வாளொடு வெட்டினான் என்பனபோலத்தான் தொல்காப்பியர் காலத்துக்கு முன்னர் வழங்கி யிருத்தல் வேண்டும். அவ் வழக்கு அவர் காலத்தில் அருகி 'ஆன்' உருபு பெருகியிருத்தல் வேண்டும்.

'ஒடு' உருபை முதலில் மூன்றாம் வேற்றுமைக்கு முன்னோர் கருத்துப்படி கூறியவர் உடம்பொடு புணர்த்தலால்,

"ஓம்படைக் கிளவிக்கு ஐயும் ஆனும்" (தொல். சொல். 97)

எனவும்,

"கு ஐ ஆன் என" (தொல். சொல். 108)

எனவும் 'ஆன்' உருபைக் கூறினார். அன்றியும் 'ஒடு' உருபின்பால் சார்த்தப்படும் பொருள் கூறத் தொடங்கும்போது, 'அதனின் இயறல்' (சொல். 74) என 'ஆன்' உருபின் பொருளதாய்க் கூறினார்.

"அதனாற் செயற்படற் கொத்த கிளவி"

(தொல். சொல். 110)

என்று தாமே சுட்டுப் பெயரில் 'ஆன்' உருபைச் சேர்த்துக் கூறினார்.

'ஒடு' உருபைக் கூறியது முதல் நூலாசிரியர் கருத்தைக் கூறியதாகவும், 'ஆன்' உருபைச் சேர்த்தது தாம் வழிநூல் செய்தலின் வழிநூலாசிரியர் மதம்பற்றிக் கூறியதாகவும் கொள்ளலாம்.

'ஒடு' உருபு உடன்நிகழ்ச்சிப் பொருளில் வருவதைத் தொல்காப்பியர்,

அதனொடு மயங்கல் (எள்ளொடு விராய அரிசி)

அதனொ டியைந்த ஒருவினைக் கிளவி (ஆசிரியனொடு மாணாக்கன் வந்தான்)

அதனொ டியைந்த வேறு வினைக் கிளவி (மலையொடு பொருத யானை)

அதனொ டியைந்த ஒப்பல் ஒப்புரை (பொன்னோ டிரும் பனையர்)

என நான்கு பிரிவில் கூறினார். இவை நான்கும் 'உடன் நிகழ்ச்சி' என ஒன்றாகும்.

இன்று 'ஒடு' உருபு உடனிகழ்ச்சி ஒன்றிலேயே அடங்கி விட்டது. அதனால் 'நாவொடு நவிலா' என்றவிடத்தில் 'ஒடு' தன் பொருளை விட்டு 'ஆன்' என்பதன் பொருளில் வந்ததாகவும் கூறினர்.

'ஒடு' என்பது 'ஓடு' எனவும், 'ஆன்' என்பது 'ஆல்' எனவும் பின்னர்த் திரிந்தன 'ஒடு' உருபு வற்புறுத்தற் பொருட்டும், உறுதிப் படுத்தற் பொருட்டும் 'ஓடு' எனத் திரியும். 'அவனோடு வா' எனப் பேச்சு வழக்கில் காணலாம். இதுவே செய்யுளில் இசையின்பம் கருதி நீளலும் உண்டு.

"வன்கண் குடிகாத்தல் கற்றறிதல் ஆள்வினையோடு
ஐந்துடன் மாண்ட தமைச்சு." (குறள். 632)

என்னும் குறட்பாவில் 'ஆள் வினையோடு' என்பது 'ஆள்வினை யோடு' என நீண்டது காண்க. இங்கு 'ஓடு' என்பது உம்மைப் பொருள் தருவதோர் இடைச் சொல்லாயினும் சொல் ஒப்புமை காண்க அதனால் இக்காலத்தில் பேச்சு வழக்கில் 'ஓடு' என்பதே நிலைப்பதாயிற்று; 'ஒடு' என்பது செய்யுளோடு நின்றது.

'ஆன்' உருபு தொல்காப்பியர் காலத்துக்குப் பின்னர் 'ஆல்' எனத் திரிந்தது. 'ஆல்' உருபு செல்வாக்குப் பெற 'ஆன்' உருபு உலக வழக்கொழிந்து செய்யுளளவில் நின்றது. அதற்குக் காரணம் 'ஆன்' என்பதொரு சாரியை வந்ததே என்னலாம்.

'பரணி நாளில் கொண்டான்' என்ற பொருளில் 'பரணியான் கொண்டான்' என்ற தொடர் வழங்கப்பட்டது. இதில் 'ஆன்' என்பது சாரியை. 'பரணியான்' என்பது ஏழாம் வேற்றுமைப் பொருளது. இதில் 'ஆன்' என்பது மூன்றாம் வேற்றுமையாயின் 'கொண்டான்' என்ற வினைக்குப் பரணி கருவியாகாது. எனவே இதில் உள்ள 'ஆன்' மயக்கத்திற்குரியது. ஆதலின் அதனைப் போக்க நாளடைவில் 'ஆல்' என்பதனை உருபாகக் கொண்டனர் என்னலாம். உலக வழக்கில் 'ஆல்' உருபு உண்டே தவிர 'ஆன்' உருபு இல்லை.

எனவே இன்று மூன்றாம் வேற்றுமை உருபுகளாக 'ஓடு' என் பதும் 'ஆல்' என்பதும் அமைந்தன. நன்னூலாரும் 'ஆல் ஆன் ஒடு ஓடு' (நன். 297) என வரிசைப்படுத்தினர்.

'ஒடு' என்பது 'உடன்' எனவும் வரும். 'உடன்' என்பதில் 'அன்' என்பதே 'ஆன்' என்றாகியது. வாளொடு வந்தான், வாளுடன் வந்தான், வாளொடு வெட்டினான், வாளுடன் வெட்டி னான் என வழங்கிப் பின்னர், 'வாளுடன் வெட்டினான்' என்பது 'வாளான் வெட்டினான்' என மாறியிருக்க வேண்டும்.

'ஒடு'வின் மூலம் 'உடு' ஆகலாம். உகரம் ஒகரமாகத் திரியும். உடம்பு—ஒடம்பு, உயரம்—ஒயரம், துடை—தொடை, துளை—

தொளை துளைத்தல்—தொளைத்தல் எனக் காணலாம். எனவே 'உடு' என்பது 'ஒடு' ஆகியது. 'உடன்' என்றது உடு+அன் எனப் பிரிந்து 'உடு' 'ஒடு' ஆகியபின்னர் 'அன்' என்பது 'ஆன்' ஆகியிருத்தல் வேண்டும். 'ஒடு' பெருவழக்காக 'ஆன்' மறையும் நிலையில் இருந்த காலம் தொல்காப்பியர்க்கு முற்பட்ட காலம். அதனால் 'ஒடு' ஒன்றை மட்டில் மூன்றாம் வேற்றுமையுருபு என்றார். அவர் காலத்தில் 'ஆன்' தனித்து 'வாளான்' என்பதுபோல வழங்கினமையின் அதை உடம்பொடு புணர்த்தலாற் சேர்த்தார்.

இவ் வகையில் 'உடன்' என்பதே உடு+அன் எனப் பிரிந்து 'உடு' 'ஒடு' ஆகி ஒடுவும், 'அன்' 'ஆன்' ஆகி ஆனும் மூன்றாம் வேற்றுமையுருபுகள் ஆயின. 'உடன்' என்ற சொல்லைச் சொல்லுருபு எனக் கொண்டனர் பிற்காலத்தார்.

'வாள் கொண்டு வெட்டினான்' என வரும் வழக்கை வைத்துக் 'கொண்டு' என்பது கருவிப் பொருளுக்குச் சொல்லுருபாக வரும் என்பர். 'மண் வைத்துக் குடம் செய்தான்' என்றும் வழக்குண்மையால் 'வைத்து' என்பதும் சொல்லுருபு என்னலாம். 'வாள்கொண்டு' என்னும்போது 'வாளைக் கொண்டு' என்று விரிதலின் 'கொண்டு' என்பதை உருபாகக் கொள்வது கூடாது. உருபு மேலும் ஓர் உருபை விரிக்குமாறு அமையாது. அதனால் மூன்றாம் வேற்றுமைக்குச் சொல்லுருபு கொள்ளுதல் பொருந்தாது. 'அவனுடன் இவன் வந்தான்' என்றதில் 'உடன்' என்பது சொல்லுருபு என்னலாம். ஆயினும் அது சொல் நிலையில் இன்றி 'ஒடு' என்பதுபோன்று உருபு நிலையிலேயே இருப்பதாகக் கொள்ளுதல் வேண்டும்.

**குறிப்பு: இக் கட்டுரை, சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ் மொழித்துறை 13—11—1980இல் நடத்திய சிறப்புக் கருத்தரங்கில் படிக்கப்பட்ட "வேற்றுமை யுருபுகள்" என்னும் கட்டுரையிலிருந்து எழுதப்பட்டது.**

# 3. தொல்காப்பியஞ் சொல்லும் உள்ளுறை இயல்

[தமிழறிஞர் ஆபிரகாம் அருளப்பன்]

தமிழ்ப் பெரும்புலமை முதிர்ந்து கனிந்த தலையிடைச் சங்கச் சான்றோருடைய சிறந்த இலக்கியங்களிற் கண்ட விழுமிய பழக்க வழக்கங் கெழுமிய வாழ்வியற் கருத்துகளையும், தம்மின் முன்னை இலக்கண மரபுகளையும் மெய்பெற நாடி, நுட்பம் திட்பம் நிறை அறிவுத் தெளிவொடு தொல்காப்பியர் அகப்பொருள் இலக்கணம் வகுத்துள்ளார்.

அகப்பொருள் மாந்தராகிய தலைவன், தலைவி, தோழி, செவிலி போன்றோருடைய கூற்று வெளிப்படையாக அமைதலே பெரும் பான்மை; சிறுபான்மை குறிப்பு வகையாக அமைதலும் உண்டு. குறிப்புநிலைக் கூற்றின் கருத்து உள்ளுறைப் பொருளாகப் பெறப் படுதலை உள்ளுறை யிலக்கணங் காட்டுகின்றது. (உள்ளுறை என்னும் மொழி அடையடுத்த தொழிலாகு பெயராய் உள்ளே குறிப்பு நிலையில் அடங்கிய பொருளை உணர்த்துவது.)

அகப்பொருள் இலக்கியத்துக்கு உரிய முதற் பொருள், கருப் பொருள், உரிப் பொருள் என்ற மூன்றினுள்,

> ''தெய்வ முணாவே மாமரம் புள்பறை
> செய்தி யாழின் பகுதியொடு தொகைஇ
> யவ்வகை பிறவுங் கருவென மொழிப.''
>
> —(*அகத்திணையியல்,—20*)

—தெய்வமும் உணவும் விலங்கும் மரமும் பறவையும் முரசும் தொழிலும் யாழிசையொடு கூடி அவ்வகைப்பட்ட (ஊரும் நீரும் பூவும் போன்ற) பிறவுங் கருப்பொருள் என்பர் புலவர். இவற்றுள்,

''உள்ளுறை தெய்வ மொழிந்ததை நிலனெனக்
கொள்ளு மென்ப குறியறிந் தோரே.'' —(அகத். 50)

—தெய்வம் நீங்கலாக (உணவு, விலங்கு) முதலியவற்றை நிலமாகக் கொண்டு உள்ளுறை யென்பது தோன்றும் என (அகப்பொருள்) இலககணம் அறிந்த புலவர் கூறுவர் என்று தொல்காப்பியர் கூறுகின்றார்.

''உடனுறை யுவமஞ் சுட்டுநகை சிறப்பெனக்
கெடலரு மரபி னுள்ளுறை யைந்தே.'' (பொருளியல், 46)

—குறையில்லாத முறைமை உடையதாகிய உள்ளுறைப் பொருளானது உள்ளுறை யுடனுறை எனவும், உள்ளுறை யுவமம் எனவும், உள்ளுறைச் சுட்டு எனவும், உள்ளுறை நகை எனவும், உள்ளுறைச் சிறப்பு எனவும் தெளிவாக ஐந்து வகையாகக் கூறப்படும்.

(க) உள்ளுறை யுடனுறை :

குறுந்தொகை 207 இல்

''கல்வரை யயலது தொல்வழங்கு சிறுநெறி
நல்லடி பொறிப்பத் தாஅய்ச்
சென்றெனக் கேட்டநம் ஆர்வலர் பலரே.''

—கற்களையுடைய மலைப் பக்கமாகப் பலரும் நடக்கும் சிறிய வழியில் (நம் தலைவரும்) தம் மெல்லிய அடிகள் சுவடு செய்யத் தாவிச் சென்றார் என்று கேட்ட நம் தோழியர் பலரே எனத் தலைவி வருந்திக் கூறுகின்றாள். இக் கூற்றில், உடனுறையாகும் உள்ளுறைப் பொருள், 'தோழியர் யாரேனுந் தலைவரைத் தடுத்து நிறுத்தவில்லையே' என்பது. அதுவே அவள் வருந்துவதற்குக் காரணம்.

(உ) உள்ளுறை யுவமம் :

''உள்ளுறுத் திதனோ டொத்துப்பொருள் முடிகென
உள்ளுறுத் துரைப்பதே யுள்ளுறை யுவமம்'' —(அகத். 51)

—மனத்துட் கருதிக்கொண்ட பொருளானது உள்ளடங்கி உவமேய மாக நிற்க, அதற்கு உரிய உவமமானது, உணவு, மா, மரம், புள் முதலிய கருப்பொருள் இடமாகத் தோன்றி உவமேயத்தோடு ஒத்துப் பொருள் முடியும் முறையில் உரைக்கப்படுவது உள்ளுறை யுவமம் ஆகும். அஃதாவது, குறிப்புப் பொருளாய் உள்ளடங்கி நிற்கும் உவ மேயத்துக்கு கருப்பொருள்களின்மேல் வெளிப்படையாக அமையும் உவமமே உள்ளுறை யுவமம் எனப்படுவது. எனவே, தான் உவம மாக நின்று. தன்னுள் அடங்கிய குறிப்புப் பொருள் உவமேயமாகப் புலப்படுதற்குத் துணையாவது உள்ளுறையுவமமாகும்

இது வெளிப்படையாக நிற்கும் உவமேயப் பொருளுக்கு வரும் உவமம் போல்வது. ஆதலின் தொல்காப்பியரின் முன்னை இலக் கணப் புலவர் இதனை உவமப்போலி எனக் குறிப்பிட்டு, இஃது ஐந்து வகைப்படும் எனக் காட்டியதாகத் தொல்காப்பியம் உவம வியல் உரைக்கின்றது :

''பிறிதொடு படாது பிறப்பொடு நோக்கி
முன்ன மரபிற் கூறுங் காலைத்
துணிவொடு வரூஉந் துணிவினோர் கொளினே'' —(23)

''உவமப் போலி யைந்தென மொழிப.'' —(24)

—(23) உவமேயம் பிறிதொன்று கொள்ளாமல், கருப்பொருள் களின் மேல் தோன்றிய உவமத்துக்கு உவமேயமாக அடங்கி நிற்கும் உள்ளுறைப் பொருளுடன் பொருத்தி அதனைக் கூறுதற்குங் கேட் பதற்கும் உரியார்க்கு ஏற்கும் முறைப்படி உரைக்கும்போது, இதற்கு இஃது உவமம் எனத் துணிவினோர் துணிவாற் பெறப்படும் (24) உவமப்போலி என்னும் உள்ளுறையுவமம் ஐந்து வகைப்படும் எனக் கூறுவர் புலவர்.

''தவலறுஞ் சிறப்பினத் தன்மை நாடின்
வினையினும் பயத்தினு முறுப்பினு முருவினும்
பிறப்பினும் வரூஉந் திறத்த வென்ப.'' —(25)

—உவமப்போலியினது குறையற்ற சிறப்புடைய இயல்புகளை ஆய்ந்து காணின், (1) வினையுவமப்போலி, (2) பயனுவமப்போலி,

(3) உறுப்புவமப்போலி, (4) உருவுவமப்போலி, (5) பிறப்புவமப் போலி என ஐந்து வகையினவாகும் என்பர் புலவர்.

எனவே, உள்ளுறையுவமமானது (1) உள்ளுறை வினையுவமம் எனவும், (2) உள்ளுறைப் பயனுவமம் எனவும், (3) உள்ளுறை உறுப்புவமம் எனவும் (4) உள்ளுறை உருவுவமம் எனவும், (5) உள்ளுறைப் பிறப்புவமம் எனவும் ஐந்தாகப் பாகுபடும்.

**(1) உள்ளுறை வினையுவமம் :**

"கரும்புநடு பாத்தியிற் கலித்த வாம்பல்
சுரும்புபசி களையும் பெரும்புன லூர" —(ஐங். 65)

—கரும்புச் செடி நடப்பட்ட பாத்தியிற் செழித்து வளர்ந்த ஆம்பலானது வண்டுக்குத் தேன் அளித்து அதன் பசியை ஆற்றுவதும், பெரிய மருதவள நீரைப் பெற்றதுமாகிய ஊருக்குத் தலைவனே! என்பது இதன் பொருள்.

இப் பாடலில், ஆம்பலானது சுரும்பின் பசியைக் களைதலை உவமமாகக் கொண்டு, 'தன்னிடம் வரும் விருந்தினரைத் தலைவி உணவளித்துப் பேணுதல்' என்னும் உள்ளுறைப் பொருளை உவமேயமாகப் பெறக் கூடுமாதலின், இஃது உள்ளுறை வினையுவமம், அல்லது வினையுவமப் போலியாகும்.

**(2) உள்ளுறைப் பயனுவமம் :**

"கரைசேர் வேழங் கரும்பிற் பூக்குந்
துறைகே ழூரன்..." (ஐங்குறுநூறு-12)

—கரையில் வளர்ந்த பேய்க்கரும்பு, வயலில் விளைந்த தீங்கரும்பு போலப் பூத்துப் பயன்படும் நீர்த்துறைகள் பொருந்திய ஊருக்குத் தலைவன் என்பது இதன் பொருள்.

இங்கு, இழிந்த பேய்க்கரும்பு சிறந்த தீங்கரும்புபோலப் பயன்படுதலை உவமமாகக் கொண்டு, 'இழிந்த பரத்தையர் தலை

வனுக்குப் பயன்படும் நிலையில், சிறந்த தலைவியைப் போல்வர்' என்னும் உள்ளுறைப் பொருளை உவமேயமாகக் காணலாம். ஆதலின் இது உள்ளுறைப் பயனுவமம், அல்லது பயனுவமப்போலியாகும்

(3) உள்ளுறை உறுப்புவமம் :

"பொருகளிறு மிதித்த நெரிதாள் வேங்கைக்
குறவர் மகளிர் கூந்தற் பெய்ம்மார்
நின்றுகொய மலரும் நாடன்" —(குறுந்தொகை, 208)

—பொருத களிறுகளால் மிதிக்கப்பட்டு நெரிந்த கிளையையுடைய வேங்கை மரம், குறமகளிர் தம் கூந்தல்களில் அணியும்பொருட்டு, நின்றவாறே பூக்களைக் கொய்துகொள்ளும்படி மலருகின்ற நாட்டுத் தலைவன் என்பது இதன் பொருள்.

இப் பாடலில், கிளை நெரிந்த வேங்கை மரம் குறை உயிரோடு மலர்ந்து நிற்றலை உவமமாகக் கொண்டு, 'தலைவி குறை உயிரோடு வாழ்கின்றனள்' என்னும் உள்ளுறைப் பொருளை உவமேயமாகக் கொள்ளலாம். ஆதலின், இஃது உள்ளுறை உறுப்புமவம், அல்லது, உறுப்புவமப் போலி (அல்லது மெய்யுவமப் போலி)யாகும்.

(4) உள்ளுறை உருவுவமம் :

"......பைந்தாது படீஇய
ருழவர் வாங்கிய கமழ்பூ மென்சினைக்
காஞ்சி யூரன்......" —(குறுந்தொகை, 10)

—பசிய பூந்தாதுக்கள் தம் மேலே படும்படி உழவர் வளைத்த கமழ்கின்ற பூக்களைக் கொண்ட மெல்லிய கிளைகளையுடைய காஞ்சி மரம் வளரும் ஊர்க்குத் தலைவன் என்பது இதன் பொருள்.

இங்கு, பசிய பூந்தாதுக்கள் உழவர்மேல் பட்டுள்ளமையின் அவர்கள் சினையை வாங்கியமை புலப்படும் என்பதை உவமமாகக்

கொண்டு தலைவன் உடம்பிற் காணப்படும் சந்தனத்தால் அவனது பரத்தைமை உணரப்படும் என்னும் உள்ளுறைப் பொருளை உவமேயமாகக் காணலாம். ஆதலின், இஃது உள்ளுறை உருவுவமம், அல்லது உருவுவமப் போலி யாகும். (உரு-நிறத்துரு).

(5) உள்ளுறைப் பிறப்புவமம் :

"பொய்கைப் பள்ளிப் புலவுநாறு நீர்நாய்
வாளை நாளிரை பெறூஉ மூர!" —(ஐங்குறு, 63)

—பொய்கையிடத்து வாழும் நீர்நாயானது அங்குப் புதியதாய் வந்து சேர்ந்த வாளை மீனை அன்றை இரையாகப் பெறுகின்ற ஊர்க்குத் தலைவனே! என்பது இதன் பொருள்.

இங்கு, நீர்ப் பொய்கையில் உயர் வாழ்வுடைய நீர்நாய் இழி பிறப்புடைய புதிய வாளை மீனை விரும்பியதை உவமமாகக் கொண்டு, 'உயர் பிறப்புடைய தலைவியைத் தலைவன் விரும்பாமல் இழி பிறப்புடைய புதிய பரத்தையை விரும்பினான்' என்னும் உள்ளுறைப் பொருளை உவமேயமாகக் காணலாம். ஆதலின் இஃது உள்ளுறைப் பிறப்புவமம், அல்லது பிறப்புவமப் போலி.

(௬) உள்ளுறைச் சுட்டு :

"கொன்னே செய்தியோ யரவம்......
..............................
குறமகள் காக்கு மேனற்
புறமுந் தருதியோ வாழிய மழையே." —(அகம்-188)

—இதனுள், கொன்னே செய்தியோ அரவம் என்றதனால், 'பயனின்றி அலர் விளைத்தியோ', என்னும் உள்ளுறைப் பொருளும், ஏனற் புறமுந் தருதியோ, என்றதனால், 'வரைந்து கொள்வையோ', என்னும் உள்ளுறைப் பொருளும் தெளிந்து, தலைவனை மழைமேல் வைத்துக் கூறியமை கண்டுகொள்ளின் இஃது உள்ளுறைச் சுட்டாகும்.

(ச) உள்ளுறை நகை :

''நும்மினுஞ் சிறந்தது நுவ்வை யாகுமென்
றன்னை கூறினள் புன்னையது சிறப்பே
யம்ம நாணுதும் நும்மொடு நகையே.'' —(நற். 172)

—நும்மைவிடச் சிறந்தது நும் தங்கையாகும் எனப் புன்னையது சிறப்பை அன்னை கூறினள். ஆதலின், 'இவ்விடத்து உம்மொடு சிரித்தல் எனக்கு நாணமாகத் தோன்றுகிறது' எனத் தலைவி தலைவனை நோக்கிக் கூறுகையில், 'அவள் புன்னையைத் தன் உடன்பிறப்பாகவே உணர்ந்ததை' உள்ளுறையாக நகைப்புக் குறிப்புடன் புலப்படுத்துகிறது. எனவே, இஃது உள்ளுறை நகை யாகும்.

(ரு) உள்ளுறைச் சிறப்பு :

''புல்லிதழ்க் கோங்கின் மெல்லிதழ்க் குடைப்பூ
வைகுறு மீனி னினையத் தோன்றிப்
புறவணி கொண்ட பூநாறு கடம்.'' —(நற். 48)

—புல்லிதழொடு மெல்லிதழ் கொண்ட கோங்கம் மலர்கள், வைகறைப் பொழுதில் விளங்கும் விண்மீன்கள் போலத் தோன்றி, அதனால் அப்பக்கம் அழகு பெற்று மணங் கமழுங் காடு என்ற தோழி கூற்றில் அவளது அகக் குறிப்பாக, 'தலைவன் தலைவிபால் முகம் மலர்ந்து வாழ்தலின் இல்லறம் சிறப்பாக நிகழ்கின்றது', என்னும் உள்ளுறைப் பொருள் பெறப்படும். ஆதலின் இஃது உள்ளுறைச் சிறப்பு எனப்படும்.

உள்ளுறையானது கருப் பொருளுள் தெய்வம் ஒழிந்ததை நிலன் எனக் கொள்ளும் என்பதற்கு ஏற்ப, (க) உள்ளுறை யுடனுறை (தலைவன்) சென்றெனச் செய்தி கேட்டோரைத் தன் நிலமாகவும், (உ) (1) உள்ளுறை வினையுவமமானது கரும்பு, ஆம்பல், சுரும்பு என்பவற்றைத் தன் நிலமாகவும், (2) உள்ளுறைப் பயனுவமமானது வேழக் கரும்பையும் தீங்கரும்பையும் தன் நில

மாகவும், (3) உள்ளுறை யுறுப்புவமமானது களிறு, நெரிதாள் வேங்கை மரம் இவற்றைத் தன் நிலமாகவும், (4) உள்ளுறை யுருவுவமமானது பைந்தாது கொண்ட காஞ்சிப்பூவையும் உழவரையும் தன நிலமாகவும், (5) உள்ளுறைப் பிறப்புவமமானது நீர்நாயையும் வாளைமீனையும் தன் நிலமாகவும், (௬) உள்ளுறைச் சுட்டு என்பது ஏனற் புறந்தரும் மழையைத் தன் நிலமாகவும், (௭) உள்ளுறை நகை என்பது புன்னையைத் தன் நிலமாகவும், (௫) உள்ளுறைச் சிறப்பு என்பது கோங்கின் பூநாறு கடத்தைத் தன் நிலமாகவும் கொண்டமை ஓர்க.

[நூற்பா எண் இளம்பூரணத்தின்படி.]

# 4. மூன்றும் நான்கும்

[புலவர் வி. அ. அரங்கசாமி]

ஆன்றவிந்தடங்கிய சான்றோர், மக்கள் வாழ்வொடு படு பொருளை அகப்பொருள் புறப்பொருள் என இரண்டாக இயம்புவர். அவை அகவாழ்வு புறவாழ்வு என அறையவும் பெறும். அகவாழ் வாகிய அகப் பொருளை அகத்திணை எனப் பொதுநிலையிலும், களவியல், கற்பியல், பொருளியல் எனச் சிறப்புநிலையிலும் கூறிப் புறவாழ்வாகிய புறப்பொருளைப் புறத்திணையியல் என ஓரியலாக வும் புகல்கின்றனர் புலவோர். பொருள்களை அறிதற்குக் கருவியாகிய செய்யுளினியல்புகளை மெய்ப்பாட்டியல், உவமவியல், செய்யுளியல் என மூன்று பிரிவுகளாக மொழிந்து, மரபு பிறழாமற் காத்தற்கு மரபியல் என ஓரியல் உரைத்துப் பொருளியல் ஒன்பது பிரிவுகளாக உணர்த்த உணரும் நெறி பெற்றிலங்குவதாம்.

இனி அகத்திணை என்பது காதல் கண்ணிய ஒழுகலாறாம். காதற் காமம் காமத்துச் சிறந்தது என்ப, அதூஉம் குளகுமென்று ஆள் மதம்போல காணுநர்ப்பெறின் பாணியுமுடைத்தெனப் பகர்ப. ஒழுகலாறு என்பது இடையறாது செல்லும் நீரோட்டம் போல்வது. புறத்திணை என்பது அகவாழ்வுக்குப் புறமான மக்கள் சமுதாயத் தொடர்புடைய ஒழுக்கமாம். அகத்திணை, கைக்கிளை, அன்பினைந் திணை, பெருந்திணை என எழுதிணை ஆக இயம்பப் பெறும். இதனை ''கைக்கிளை முதலாப் பெருந்திணை இறுவாய் முற்படக் கிளந்த எழுதிணை என்ப'' என்பர் தொல்காப்பியர். அகத்திணை ஏழின் புறமாகத் தோன்றுவன புறத்திணை ஏழுமாகும். அவற்றுள் அன்பின் ஐந்திணை களவு கற்பு என இருவகைப்படும். அவற்றுள் களவென்பது பெற்றோர் மற்றோர் அறியா நிலையில் இருவர் தாமே

எதிர்ப்பட்டுக் கரந்தொழுகும் மறை ஒழுக்கமாம். கொடுப்பாரும் அடுப்பாருமின்றித் தாமே எதிர்ப்பட்டுக் கூடும் ஒப்புமையால் கந்தருவத்தோடு ஒப்பதெனக் கட்டுரைப்பர்.

இதனை,

"இன்பமும் பொருளும் அறனு மென்றாங்கு
அன்பொடு புணர்ந்த ஐந்திணை மருங்கிற்
காமக் கூட்டம் காணுங் காலை
மறையோர் தேஎத்து மன்ற லெட்டனுள்
துறையமை நல்யாழ்த் துணைமையோ ரியல்பே"

என்னும் நூற்பாவால் தொல்காப்பியர் தோற்றுவிப்பர். அதனோடும் அமையாது அன்பினைந்திணைக்கு முன்னும் பின்னும் அமைந்த கைக்கிளை பெருந்திணைகளைப்பற்றி,

"முன்னைய மூன்றும் கைக்கிளைக் குறிப்பே"

"பின்னர் நான்கும் பெருந்திணை பெறுமே"

எனவும் உணர்த்திப் போந்தனர். இவணமைந்த மூன்றும், நான்குமே கருத்து விளக்கங்கோடற்குக் காரணமாய் இலங்குவனவாம். ஈரிடங்களிலும் இயைந்த எண்ணுப் பெயர்கள் எண்ணுவார் எண்ணத்திற்கேற்ப அமைந்த கருத்துகளைக் காண்பாம்.

தொல்காப்பியருக்கு உரை கண்ட இளம்பூரணர்; முன்னைய மூன்றும் கைக்கிளைக் குறிப்பே என்பதற்கு எண்வகை மணத்தினுள்ளும் கந்தருவத்துக்கு முன்னையவாகிய அசுரம், இராக்கதம், பைசாசம் என்ற மூன்றும் கைக்கிளைப் பாற்படும் எனவும் பின்னர் நான்கும் பெருந்திணை பெறுமே என்பதற்குக் கந்தருவத்துக்குப் பின்னர் அமைந்த பிரமம், பிரசாபத்தியம், ஆரிடம், தெய்வம் என்ற நான்கும் பெருந்திணைப் பாற்படும் எனவும் கூறினர். நச்சினார்க்கினியர் அவ்விரு நூற்பாக்களுக்கும் முறையே முன்னின்ற அசுரமும் இராக்கதமும் பைசாசமும் கைக்கிளை எனற்குச் சிறந்திலவேனும் கைக்கிளை எனச் சுட்டப்படும் எனவும், பின்னர் நின்ற பிரமம்,

பிரசாபத்தியம், ஆரிடம், தெய்வம் என்னும் நான்கினையுமே பெருந்திணை தனக்கு இயல்பாகவே பெறும் எனவும் கூறினர். இரு பேருரையாளர்களும் மறையோர் கொண்ட பிரமம், பிரசாபத்தியம், ஆரிடம், தெய்வம், காந்தருவம், ஆசுரம், இராக்கதம், பைசாசம் எனும் எண்வகை மணங்களையே, முதலாகக் கொண்டு கூறியுள்ளனர் எனத் தெளிவாம். இனி மறையோர் மன்றல் எட்டனியலினையும், தமிழ்ச் சான்றோர் கொண்ட எழுதிணைகளினியலினையும் எடுத்துக்காட்டிப் பொருந்துமாறு காண்பாம்.

பிரமம்: ஒத்த கோத்திரத்தானாய நாற்பத்தெட்டியாண்டுப் பிரமசரியங் காத்தவனுக்குப் பன்னீராட்டைப் பிராயத்தாளாய்ப் பூப்பெய்தியவளைப் பெயர்த்துப் பூப்பெய்தாமை அணிகலன் அணிந்து தானமாகக் கொடுப்பது.

பிரசாபத்தியம்: மகட்கோடற்குரிய கோத்திரத்தார் கொடுத்த பரிசத்து இரட்டித் தம் மகட்கு ஈந்து கொடுப்பது.

ஆரிடம்: தக்கானொருவற்கு ஆவும் ஆனேறும் பொற்கோட்டுப் பொற்குளம்பினவாகச் செய்து அவற்றிடை நிறீஇப் பொன்னணிந்து நீரும் இவைபோற் பொலிந்து வாழ்வீர் என நீரிற் கொடுப்பது.

தெய்வம்: பெருவேள்வி வேட்பிக்கின்றார் பலருள் ஒத்த ஒருவற்கு அவ் வேள்வித்தீ முன்னர்த் தக்கிணையாகக் கொடுப்பது.

காந்தருவம்: கந்தருவ குமரரும் கன்னியரும் தம்முள் எதிர்ப்பட்டுக் கண்டு இயைந்தது போலத் தலைவனும் தலைவியும் எதிர்ப்பட்டுப் புணர்வது.

அசுரம்: கொல்லேறுகோடல், திரிபன்றி எய்தல், வில்லேற்றுதல் முதலியன செய்து கோடல்.

இராக்கதம்: தலைமகடன்னினும் தமரினும் பெறாது வலிதிற் கொள்வது.

பைசாசம்: முத்தோர், களித்தோர், துயின்றோர், புணர்ச்சியும், இழிந்தோளை மணஞ்செய்தலும் ஆடை மாறுதலும் பிறவுமாம்.

இனித் தமிழர் கொண்ட அகத்திணை ஏழனையும் முறையே கைக்கிளை, குறிஞ்சி, முல்லை, பாலை, மருதம், நெய்தல் பெருந்திணை என முறைப்பட மொழிந்துள்ளமை அறிந்து இன்புறுந் தகைத்தாம். கைக்கிளை என்பது காதல் ஒருவன்பாற் றோன்றி மற்றவரிடத்துப் பருவம் அன்மையால் பால் உணராப்பான்மையால், காமம் தோன்றா நிலையதாம். இந் நிலையில் காதலன் காமஞ் சாலா இளமையோள்வயின் தமக்கு ஏமஞ்சாலப் பெறான் எனினும், அவணலம் பேணி ஒழுகும் காதல் இயல்பினது ஆதலின் முதற் கண் வைக்கப்பெற்றது. இருபாலும் காதல் ஒத்துக் கனிந்து சிறந்த அன்பின் ஐந்திணை அதன்பின் அமைக்கப்பெற்றது. அவற்றின் பின் காதல் கண்ணாது கழிகாமப் பழி பிறங்கும் பெருந்திணையைப் பிரித்து நிறுத்தி முறைப்படுத்தினர், சான்றோர். மேலும் அகத்திணை ஏழனுள் முதலும் இறுதியுமாக நின்ற கைக்கிளை பெருந்திணை தமக்கென நிலத் தொடர்பில்லன. நடுவணமைந்த ஒத்த காதல் திணைகள் ஐந்தனுள் பிரிவாம் பாலையைப் பொதுவாக்கி ஏனைய குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் நான்கினையும் தமிழ் கூறும் நல்லுலகப் பகுதிகளில் நானிலமாகப் பிரிக்கப்பெற்ற மரபும் ஏற்றம் தருவதாகும். இம் முறை அமைந்த சிறப்பினைத் தொல்காப்பியர்,

> "கைக்கிளை முதலாப் பெருந்திணை இறுவாய்
> முற்படக் கிளந்த எழுதிணை என்ப"

> "நடுவ ணைந்திணை நடுவண தொழியப்
> படுதிரை வையம் பாத்திய பண்பே"

என்ற நூற்பாக்களால் தெளிவாக்கிச் சென்றுள்ளார். அன்பினைந் திணைகளில் ஒன்றாய பாலைத்திணை நடுவணது எனப் பெயர் பெற்றமை கருதுதற் கொன்றாம். இந் நிலைக்கேற்ப அகநானூற்றில் குறிஞ்சி, முல்லை, மருதம் நெய்தல் ஆகிய நாற்றிணைகளின் இடையே பாலை அமைந்துள்ள முறை எண்ணுதற்குரியதாம்.

தொல்காப்பியர் தோற்றுவிக்கும் கைக்கிளை என்பது காமஞ் சாலா இளமையோள்வயின் ஏமஞ்சாலா இடும்பை எய்திக் கூறுவ

தாகும். ஆயின் மறையோர் மன்றலாய அசுரம், இராக்கதம், பைசாசம் ஆகிய மூன்றும் கைக்கிளை எனற்கு எவ்வாற்றானும் பொருந்தாமை அவற்றினியலே அறிவிக்கும். கொல்லேறு கோடல் முல்லை நிலத்து மக்கள் கொள்ளும் வழக்காறு. ஆயர் கொள்ளும் கொல்லேறு கோடல் காதலிருவர் கருத்தொருமித்த களவின்வழி வந்த மணமாம். தலைவி தன்னால் காதலிக்கப்பெற்ற தலைவன், ஏற்றினை அடக்காவிடினும், அன்றி ஏற்றால் தீங்குறினும், தன்னால் காதலிக்கப் பெறா ஒருவனை மணப்பது வழக்காறன்று. தலைவி தன் காதலனைப் பெறா நிலை உளதாயின், இம்மையில் நும்மைப் பெறாவிடினும் மறுமையிலாவது நும் நெஞ்சு நேர்பவளாக, நீவிர் கணவராக அமைவதாக எனக் கூறி உயிர்விடும் ஒருமைப்பாடுளதாம். அத்தகு முல்லைநிலத்துக் கொல்லேறு கோடலை அசுரமணம் எனக் கொண்டு கைக்கிளை எனக் கழறுதல் பொருந்தாது. அன்பினைந்திணையுள் ஒன்றாகிய முல்லை நிலத்து வழக்காற்றினை கைக்கிளை எனல் இயைபுடைத்தன்றாம்.

இனிப் பெருந்திணையோ காதல் கண்ணாது கழிகாமப் பழி பிறங்கும் ஒவ்வா நிலையுடையதாம். ஒவ்வாத நோய்க்குப் பெருங்கால் பெருவயிறு பெருங்குட்டம் என்றாற்போலப் பெருந்திணை எனப் பெயரிட்டனர் தமிழ்ச் சான்றோர் என்ப நாவலர். ஆயின் உரையாசிரியர்கள் எண்வகை மணங்களுள் நான்கு மணம் பெறுதலின் பெருந்திணை எனக் காரணக் குறியிடுதல் பொருந்தாது. மேலும் நான்கு மணமும் மேன்மக்கள்மாட்டு நிகழ்தலானும், இவை உலகினுள் பெருவழக்கெனப் பயின்று வருதலானும் பெருந்திணை எனப்பட்டது எனக் கூறுவார். பின்னர் அடியோர் பாங்கும் வினைவலரும் பெருந்திணைக்குத் தலைவராதற்குரியர் எனக் கூறலின் அதுவும் பொருந்தாதாம். இன்னும் நாற்பத்தெட்டியாண்டும் பிரமசரியம் காக்கும் பிரமமணமும், வேள்வித் தீ முன்னர் தக்கிணையாகக் கொடுக்கும் தெய்வமும் தமிழ்மக்கள் வழக்காறன்றெனச் சாற்றுவர், சான்றோர். ஏனைய பிரசாபத்தியம் ஆரிடம் என்னுமிரண்டும் பெருந்திணைக்குப் பொருந்துவன அல்ல.

இனி முன்னைய மூன்றும் பின்னர் நான்கும் என்பன யாவையோ எனின் தொல்காப்பியர் கூறிய கைக்கிளை மூன்றும் பெருந்திணை

நான்கும் ஆம். அன்பினைந்திணைக்கண் நிகழும் களவின்வழி வந்த மணமே தமிழ்நாட்டார் கொண்ட தக்கதொரு மணமாம். கந்தருவர்க்குக் கற்பின்றியமையவும் பெறும், களவாயின் கற்பின்றி அமையப்பெறாது என்பதனால் களவுக்கும் கந்தருவத்துக்குமுள்ள வேறுபாடு உணரப்படும். கைக்கிளை பெருந்திணைகளுக்கும் மறையோர் மன்றல்களுக்கும் தொடர்பின்று.

இனிக் காமஞ்சாலா நிலை, காமஞ்சான்று அன்பு ஒத்த காதல் நிலை, காமஞ்சான்றும் அன்பு ஒவ்வாக் கழிகாம நிலை என்னும் நெறிமுறையிலே கைக்கிளை, அன்பினைந்திணை பெருந்திணை என முறைப்படுத்தி மொழியப்பட்டுள.

கைக்கிளை,

''காமஞ் சாலா இளமை யோள்வயின்
ஏமஞ் சாலா இடும்பை எய்தி
நன்மையும் தீமையும் என்றிரு திறத்தால்
தன்னொடு மவளொடும் தருக்கிய புணர்த்துச்
சொல்லெதிர் பெறாஅன் சொல்லி இன்புறல்
புல்லித் தோன்றும் கைக்கிளைக் குறிப்பே''

என்ற நூற்பாவால் மூன்றும் மொழியப்பட்டுள்ளமை அறியப்படும். அவை காமஞ்சாலா இளமையோள்வயின் ஏமஞ்சாலா இடும்பை எய்திக் கூறலும், நன்மையும் தீமையுமென்றிருதிறத்தால் தன்னொடும் அவளொடும் தருக்கிப் புணர்த்துக் கூறலும், சொல்லெதிர் பெறான் சொல்லி யின்புற்றுக் கூறலுமாய மூன்றுமாம். இம் மூன்றற்கும் கலித்தொகைப்பாடல் ''ஊர்க்கா னிவந்த பொதும்பர்'' எனத் தொடங்கும் செய்யுள் முதலாயவை சான்று பகர்ந்து நிற்கும்.

பெருந்திணையோ,

''ஏறிய மடற்றிறம் இளமை தீர்திறம்
தேறுத லொழிந்த காமத்து மிகுதிறம்
மிக்க காமத்து மிடலொடு தொகைஇச்
செப்பிய நான்கும் பெருந்திணைக் குறிப்பே''

என்னும் நூற்பாவால் நன்கு நவிலப்பட்டுள்ளமை அறியப்படும். மடலேறுவேன் எனக் கூறுதலின்றி, மடலேறுதலும், முதுமைக் காலத்துக் காமநுகர்தலும், இளையளாகாது ஒத்த பருவத்தினர் ஆகலும். தேற்றத்தேறாத காமத்தின் நிலையும், கழிகாமத்தால் கூடக் கருதுதலும் என்னும் நான்கும் பெருந்திணை எனற்குப் பொருந்துவனவாம். இந் நான்கற்கும் நெய்தற் கலிப்பாடல் சான்றாகும்.

முன்னைய மூன்றும், பின்னர் நான்கும் என்னுமிடங்களில் வந்துள்ள முன் பின் என்பன அன்பொத்த இருவர் தாமே கூடும் காதற் கூட்டமாகிய அன்பினைந்திணைக்கு முன்னும் பின்னும் எனக் கோடலே சாலச் சிறந்ததாம்,

# 5. 'புரைதீர் கிளவி'

[அறிஞர் 'தமிழண்ணல்' இராம. பெரியகருப்பன்]

தொல்காப்பியமும் திருக்குறளும் காலத் தொடர்பும் கருத்துத் தொடர்பும் உடையன. அல்லது இவை இரண்டும் ஒரே சமுதாயப் பண்பாட்டு நாகரிகப் பின்புலத்தினைப் பெற்றுத் தோன்றியுள்ளன. அஃதாவது அச்சமுதாய மரபு பெரிதும் மாறுதலடையுமுன் ஒன்றை யடுத்தொன்றெனத் தோன்றியனவாதல் வேண்டும். ''தெய்வம் தொழாஅள்'' என்ற குறளுக்கு, சமுதாய மரபுணர்ந்து பொருள் கூறுவோமாயின், 'பிறை தொழுகென்றல்' என்ற அகத்துறைக்கும் அதனைச் சுட்டிக்கூறும் சங்க இலக்கியத்திற்கும் இக் குறட் கருத்துக்கும் தொடர்புண்மை விளங்கும். மெய்ப்பாட்டியலில் 'தெய்வம் அஞ்சல்' எனக் கூறப்படுவது இம் மரபுவழிப் பட்டதேயாகும். 'பிறை தொழும் பெண்கள்' என்ற நூலில் இதன் விரிவான விளக்கத்தைக் காணலாம்.[1] இவண் இதனோடொத்த பிறிதொரு மெய்ம்மைச் சான்று எடுத்துக்காட்டப்படுகிறது. இவை தொல்காப்பியத் திருக்குறள்களிடையேயுள்ள கால அணிமையைக் காட்டவல்லன; அல்லது அவற்றின் மரபுத் தொடர்ச்சியை நிலைநாட்டவல்லன. அறிஞர்கள் மேலும் ஆராய்வார்களாயின் உண்மை புலப்படாமற் போகாது.

'புரை' என்ற சொல் 'மேன்மை' என்ற பொருளில் ஒரு சில விடத்தும்[2] 'குற்றம்' என்ற பொருளில் பலவிடத்தும்[3] தொல்காப்பியத்தில் ஆளப்பட்டுள்ளது.

---

1. தமிழண்ணல், 'பிறைதொழும் பெண்கள்', மதுரை, திசம்பர் 1979 பக். 22-33.

2. தொல். மெய்ப். 24.

3. தொல். களவு. 16, 24; பொருள். 15.

''அவள்விலங் குறினும் களம் பெறக் காட்டினும்
பிறன்வரை வாயினும் அவன்வரைவு மறுப்பினும்
முன்னிலை அறன் எனப் படுதல் என்று இருவகைப்
புரைதீர் கிளவி தாயிடைப் புகுப்பினும்''



(தொல். களவு. 24)

திருமணத்திற்குத் தலைவனால் தடையேற்பட்டாலும், தலைவி மெலிவு கண்டு களம் அமைத்து வெறியாட்டு முதலியன நிகழ்த்த நேர்ந்தாலும் மற்றவர் வரைய வரினும் தலைவனுக்குத் தலைவியைத் தரத் தமர் மறுப்பினும் தோழி தன் திறமையால் அதனை மாற்றித் தலைவனுக்கும் தலைவிக்கும் திருமணம் நிகழ ஆவன செய்வாள். அவள் செவிலியிடம் முன்னிலை, அறத்தொடு நிலை என்ற இரு வகைகளால் தன் கருத்தை வெளியிடுவாள். யாரையேனும் முன்னிலைப்படுத்திப் பேசுவது முன்னிலை எனப்படும். செவிலிக்குக் குறிப்பால் தலைவியின் காதலை உணர்த்துவது அறத்தொடு நிலை எனப்படும். ''என்றது புனல்தரு புணர்ச்சியும் பூத்தரு புணர்ச்சியும், களிறுதரு புணர்ச்சியும் போல்வன செவிலிக்குக் கூறி அவள் நற்றாய்க்குக் கூறுதலை நிகழ்த்துவித்தலாம்'', என்று நச்சினார்க்கினியர் இவ்விடத்தில் உரையெழுதுவார். இவை பெரும்பாலும் படைத்துமொழியப்பட்டனவாயிருக்கும். தலைவியை ஆற்று வெள்ளம் அடித்துப்போக இருந்தபோது, தலைவன் ஆற்று வெள்ளத்தில் குதித்துக் காப்பாற்றிக் கரைசேர்த்தான். அதனால் தான் காதல் ஏற்பட்டது. எனவே தலைவியை அவனுக்குத் தருவதே முறை என இங்ஙனம் விவாதிப்பதே புனல்தருபுணர்ச்சி எனப்படும். ஏனையவும் அன்ன. தலைவன் உண்மையாகவே காப்பாற்றியிருக்கவும் கூடும்: அல்லது தோழி பாதுகாப்புக் கருதிப் படைத்து மொழியவும் கூடும். அதனால்தான் அறத்தொடு நிலை பற்றிய நூற்பாவில்,

''எளித்தல், ஏத்தல், வேட்கையுரைத்தல்
கூறுத லுசா அதல், ஏதீடு,' தலைப்பாடு,
உண்மை செப்பும் கிளவியொடு தொகைஇ
அவ்வெழு வகைய என்மனார் புலவர்'' (பொருள். 12)

என்று தொல்காப்பியர் பொய்யும் மெய்யும் கலந்து கூறுதலைச் சுட்டிச் செல்கிறார். இவற்றுள் 'உண்மை செப்பும் கிளவி' என்பது பட்டாங்குக் கூறுதல். ஏனையவை கற்பனையும் கலந்தவை என் பதை இது வேறுபடுத்திக் காட்டுகிறது. இவற்றைப் 'புரைதீர் கிளவி தாயிடைப் புகுப்பினும்' என்றும் கூறுதற்குக் காரணம் ''இவை குற்றமுடையன—கற்பனையானவை—பொய் எனக் கருதற்க; திரு மணம் கருதியனவாதலின் இவை புரைதீர் கிளவியாம் (குற்றமற்ற வார்த்தை)'' என்று விளக்குவதற்கேயாம்.

தோழி தலைவனிடம் வரைவு கடாதல் ஒரு முறையும் துறையு மாம் :

''வரைதல் வேண்டித் தோழி செப்பிய
புரைதீர் கிளவி புல்லிய எதிரும்'' (களவு. 16)

வரைதல் வேட்கையைப் புலப்படுத்தித் தோழி கூறும் குற்றமற்ற கூற்றுகளைத் தலைவியும் உடன்பட்டு நின்றே பேசுவாள்; இங்கு தோழி வரைவு வேண்டித் தலைவனிடம் 'புரைதீர் கிளவி' செப்பு வாள் என்ற தொல்காப்பியர், அவள் அங்ஙனம் கூறுவனவற்றைப் பொருளியலில் வகைப்படுத்துகிறார்.

''பொழுதும் ஆறும் காப்பும்என் றிவற்றின்
வழுவின் ஆகிய குற்றம் காட்டலும்
தன்னை அழிதலும் அவனூ றஞ்சலும்
இரவினும் பகலினும் நீவரல் என்றலும்
கிழவோன் தன்னை வாரல் என்றலும்
நன்மையும் தீமையும் பிறிதினைக் கூறலும்
புரைபட வந்த அன்னவை பிறவும்
வரைதல் வேட்கைப் பொருள என்ப''
(பொருளியல்: 16)

களவு உறவு யாதோர் இடையூறுமின்றி நிகழினும் விரைவில் மணந்துகோடலே முறையாம். எனவே எவ்வகையிலேனும் தலை வனை மணம்புரிந்து கொள்ளுமாறு தூண்டுதலே அறமாம் ஆதலின் தோழி கற்பனையாகவேனும் இடையூறுகளைச் சோடித்துக் கூறு

வாள். அதனால்தான் 'புரைபட வந்த அன்னவை பிறவும்' என்று கூறுகிறார். இதற்கு நச்சினார்க்கினியர். ''என்றது, வழுப்படக் கூறினும் வரைவு காரணத்தாற் கூறலின் அமைக்க வென்றவாறாம்''. என விளக்கம் தருவர்.

''பொய் தலையடுத்த மடலின் கண்ணும்'' (களவு 21)

''பொய்யென மாற்றி மெய்வழிக் கொடுப்பினும்''
(களவு 23)

''மெய்யினும் பொய்யினும் வழிநிலை பிழையாது
பல்வேறு கவர்பொருள் நாட்டத் தானும்'' (களவு 28)

இங்ஙனம் திருமணமாகிய அறநெறியில் நிறுத்தற்பொருட்டும் கற்பு வழுவாமைப் பொருட்டும் பலரும் பொய்ம்மையைக் கையாளு தல் உண்டென அறிகிறோம் பொய்ம்மையாயினும் இவை நன்மை பயக்கும் குறிக்கோளுடையனவாதலின் மெய்ம்மையே என ஏற்கப் பட்டன. பொய்யாதலின் 'புரையுடையனவோ' (குற்றமுடைய னவோ) என ஐயுறப் படுமாதலின், 'புரைதீர் கிளவி' என அடை புணர்த்துக் கூறப்பட்டன.

திருவள்ளுவர் வாய்மைக்குப் புது இலக்கணம் வகுத்தார். அது புரட்சிகரமானது. தீமை இல்லாததே வாய்மை எனவும் நன்மை பயக்குமேல் பொய்யும் வாய்மையே எனவும் அவர் உணர்த்துகிறார்.

''வாய்மை எனப்படுவது யாதெனின் யாதொன்றும்
தீமை இலாத சொலல்'' (291)

''பொய்ம்மையும் வாய்மை இடத்த புரைதீர்ந்த
நன்மை பயக்குமெனின் '' (292)

''இவை இரண்டு பாட்டானும் தீங்கு பயவாத நிகழ்ந்தது கூறலும் நன்மை பயக்கும் நிகழாதது கூறலும் மெய்ம்மை யெனவும், நன்மை பயவாத நிகழாதது கூறலும் தீங்கு பயக்கும் நிகழ்ந்தது கூறலும் பொய்ம்மையெனவும் அவற்றதிலக்கணம் கூறப்பட்டது'' என்று இங்குப் பரிமேலழகர் விளக்கம் கூறுகிறார்.

மேலும் ''நிகழாதது கூறலும் நன்மை பயவாதாயிற் பொய்ம்மை யாம் ; பயப்பின் மெய்ம்மையாம் என்பது கருத்து'', என்ற அவரது விளக்கம் 'புரை தீர்ந்த நன்மையில்' அழுத்தம் வைப்பது காண்க.

இவ்வாறு திருவள்ளுவர் கூறுவது. முற்காட்டிய தமிழர் களவு முறைத் திருமணத்துடன் ஒப்பிட்டு நோக்கத்தக்கதாகிறது. 'ஆயிரம் பொய் சொல்லியேனும் ஒரு கலியாணத்தை முடிப்பது' என்ற பழமொழிக்கு அடிப்படைபோலக் களவைக் கற்பாக மாற்று வதற்காகத் தோழி உள்ளிட்ட அகத்திணை மாந்தர் கற்பனை கலந்த படைத்துமொழி கிளவிகளைப் பயன்படுத்தியுள்ளனர். இவ் வாழ்க்கை மரபையே தொல்காப்பியப் பொருள் இலக்கணம் சுட்டு கிறது. பொதுப்படக் கூறியிருப்பினும் திருக்குறளிலும் அதன் எதிரொலியையே கேட்கிறோம்.

தொல்காப்பியர் குறிப்பிட்ட அடைமொழியையே திருவள்ளு வரும் பயன்படுத்துகிறார். 'புரை தீர்' என்ற அவ்வடைமொழி, படைத்து மொழிதலால் குற்றமாகுமா என ஐயுற்றவிடத்து, 'அஃது அங்ஙனமன்று. நன்மை பயத்தலின் ஏற்புடையதே' என எதிர் மறுத்து மொழிவதை நினைவூட்டுகிறது.

'புரை தீர்ந்த நன்மை' என்கிறார் திருவள்ளுவர். பொய்யாக வழுப்படக் கூறுவனவற்றைப் 'புரைபட வந்த அன்னவை' (பொருளி யல் 16) எனவும் அது நன்மை பயத்தலால் 'புரைதீர் கிளவி' என வும் (களவு 16, 24) தொல்காப்பியர் வேறுபடுத்திக் கூறுகிறார். அவர் சுட்டும் சொல்லானும் மொழி நடையானுமே திருவள்ளுவர் எடுத்தாள்வது இவற்றிடையேயுள்ள உணர்வியைபினை நன்கு எடுத்துக் காட்டுகின்றதன்றோ ? தொல்காப்பியம், சங்க இலக்கியம், திருக்குறள் இவற்றிடையேயுள்ள கருத்தியைபுகள் மேலும் மேலும் நுட்பமாய் நோக்கப்படுதல் வேண்டும்.

# 6. ஆசிரியர்

## ["கவிஞர்கோ" கோவை. இளஞ்சேரன்]

ஆசிரியர் இல்லம். நண்பகல் நேரம். ஆசிரியர் உணவு உண்டு அமர்ந்துள்ளார். மாணவனுக்கு உணவு படைக்கப்பட்டது. ஆசிரியரது இல்லக் கிழத்தியார் சோறிட்டுப் பருப்பு வைத்துக் கிண்ணத்திலிருந்த நெய்யில் ஒரு கரண்டி இட்டார். மாணவன் பிசைந்து வாயில் வைக்கச் சென்றவன் 'படக்'கென்று நிமிர்ந்தான். மூக்கு மூச்சைத் தள்ளியது. முகம் சுளித்தது.

ஆசிரியர், 'என்ன பையா?' என்றார். பையன் வந்த சொல்லை விழுங்கினான் ஆசிரியர், 'சொல்லலாம்' என்றார். மாணவன் தணிந்த குரலில், 'அம்மா நெய் போடுவதற்குத் தவறி விளக்கெண்ணெயை ஊற்றிவிட்டார்கள்' என்றான். ஆசிரியர் அம்மையாரைப் பார்த்தார். அம்மையார் புன்முறுவலை அனுப்பி னார். ஆசிரியர், 'வேறு இலை போட்டுச் சோறு, பருப்பிட்டு நெய்யே போடு' என்றார்.

உணவுண்டு முடித்தான் மாணவன். 'பையா உலவிவிட்டு வா. வந்து உனது ஏடுகள், உடைகளை எடுத்துக்கொண்டு உன் இல்லத் திற்குச் செல்லலாம். படிப்பு அவ்வளவுதான்' என்றார். 'ஐயா, மூன்றாண்டுகள் கற்க வேண்டும் என்றீர்களே; ஓராண்டும் முடிய வில்லையே' என்றான். 'ஆமாம்; இதுவரை உனக்குப் படிப்பு ஒன்றில்தான் கவனம் படிந்திருந்தது. வந்தநாள் முதல் இந்த நாள் வரை உனது பருப்புணவுக்கு நெய்யாக விளக்கெண்ணெய் (விளக்கு+எள்+நெய்)தான் ஊற்றப்பட்டது. கவனமெல்லாம் கல்விச் சுவையிலும் கேள்விச் சுவையிலும் படிந்திருந்ததால் நாச்சுவை காணாமல் விளக்கெண்ணெயை உண்டுவந்தாய். இன்று நாச்

சுவையில் உன் கவனம் படிந்துவிட்டது. இனிக் கல்வி படியாது; செல்லலாம்' என்று முடித்துக் காட்டினார் ஆசிரியர்.

இ∴து அந்தக் காலத்துக் கல்விக் கதை. இந்தக் காலத்திற்குச் செல்லுபடியாகாது. ஆசிரியர் இல்லத்தில் மாணவன் தங்கிப் பயில்வது 'குருகுல முறை' எனப்பட்டது.

இக்கால மாணவரது மனப்போக்கு;

பல்கிப் பெருகியுள்ள மாணவர் எண்ணிக்கை;

வளர்ந்துள்ள பலமுனைப் பாடத்துறைகள் முதலியன 'குருகுல' முறைக்கு அப்பாற்பட்டன எனலாம். இசை, கூத்து முதலிய நுண் கலைகளுக்கு வேண்டுமானால் ஓரளவிற்கு இசைந்து வரலாம்.

மேலே காணப்பட்ட மாணவனது கதையில் ஓர் உண்மை மின்னுகிறது. 'மற்ற எதனிலும் கவனங் கொள்ளாது எடுத்த கல்வியில் ஆழ்ந்த படிவே படிப்பு' என்னும் உண்மையை மறக்க முடியாது. இவ்வுண்மை எக்காலத்திற்கும் பொருத்தமானதே. தமிழ் இலக்கண நூல்கள் கல்விப் பயிற்சிக்கு இலக்கணங்களை வகுத்துள்ளன.

நீர் வேட்கை கொண்டவன் நீரைக் கண்டால் பருகுவதற்குக் கொள்ளும் ஆர்வம் போன்று கல்வியில் ஆர்வங்கொள்ள வேண்டும். இது ''பருகுவன் அன்ன ஆர்வத்தன்'' (நன்னூல்: 40 : 5) எனப் பட்டது. செவி வாயாக நெஞ்சு கொள்ளும் இடமாகக் கேட்பவற்றை விடாது உள்ளத்தில் அமைக்க வேண்டும். நீர் பருகுவதையும் உணவு உண்பதையும் உவமையாகவும் உருவகமாகவும் எடுத்து வைக்கும் பாங்கில் மற்றொரு கருத்தையும் இலக்கண ஆசிரியர் வைத்துள்ளார். 'நாச்சுவையில் கவனங் கொள்ளக் கூடாது' என் பது அது. ''செவியிற் சுவையுணரா வாயுணர்வின் மாக்கள்'' (குறள் 420) என்று தாக்கும் வள்ளுவர் கருத்தும் இந் நோக்கில் எழுந்ததே. இவை கல்வி ஆர்வத்தைக் குறிப்பவை.

''சித்திரப் பாவையின் அத்தகவு அடங்கி''

—(நன்னூல்: 40 : 6)

இருந்து கற்க வேண்டும் என்றனர். இது மாணவன் கொள்ள வேண்டிய ஆழ்ந்த கவனத்தை வலியுறுத்துவது.

இந்த ஆர்வமும், ஆழ்ந்த கவனமும் கல்வி முறையினின்றும் பிரித்துக் காணத்தக்கன அல்ல. இவை போன்று விதிக்கப்படும் இலக்கண விதிகளுக்கெல்லாம் அந்தக் கால மாணவன் மட்டுமல்லன், இந்தக் கால மாணவனும் இலக்காக வேண்டியவனே. மாணவன் மட்டுமல்லன், கற்பிக்கும் ஆசிரியரும் இவற்றிற்குத் துணையாக வேண்டியவர். ஆசிரியரது இயல்பு இவற்றிற்குப் பெரும்பகுதி ஈடு கொடுத்து நிற்க வேண்டும். முற்காலத்து ஆசிரிய உலகம் ஈடு கொடுத்ததைப் பண்டைய நூல்களிலிருந்து காண்கின்றோம். இதன் தொடர்பில் ஆசிரியர் வரலாற்றைக் காண்பது பயனுடையதாகும்.

கற்பிப்போரைக் குறிக்க எழுந்த சொற்கள் ஆசிரியரது வரலாற்றைப் பேசுகின்றன:

ஆசான்,
ஆசிரியன்,
கணக்காயன்—என்பன முற்காலச் சொற்கள்.

உவாத்தியாயன்,
குரு,
தேசிகன்—என்பன இடைக்காலத்தில் புகுந்த வட சொற்கள்.

ஓசன்,
பணிக்கன்—என்பன இடைக்காலத்தை அடுத்த பிற்காலச் சொற்கள்.

இச் சொற்களைப் பிளந்துகொண்டு உள்ளே புகுந்தால் ஆசிரியரது வரலாற்று அடையாளங்கள் காட்சியளிப்பதைக் காணலாம்.

## ஆசான்

'ஆசு' என்னும் சொல் பல பொருள் கொண்டது. பற்றுக் கோடு, நுட்பம், குற்றம் என்னும் மூன்று பொருள்கள் இங்கு தொடர்புக்கு உரியன.

ஒளவையார் அதியமான் நெடுமான் அஞ்சியைத் தமக்குப் 'பற்றுக் கோடானவன்' என்று குறித்தார். ''ஆசு ஆகு எந்தை'' (புறம் 235) என்பது அவரது பாட்டு. இதில் 'ஆசு' என்னும் சொல் 'பற்றுக்கோடு' என்னும் பொருளைக் காட்டுகின்றது.

கல்வி அறிவிற்கும், வாழ்வியற் கருத்திற்கும் பற்றுக்கோடு ஆனவன் என்னும் பொருளில் ஆசு—ஆன் ஆசான் ஆனான். ஓர் உலோகத்துடன் மற்றோர் உலோகத்தைப் பற்றவைக்க—பொருத்த, இடையே நிற்கும் உலோகத் தூள் ஆசு—பற்றாசு எனப்படும். இது போன்று கல்வியோடு மாணவரது உள்ளத்தைப் பற்றவைத்து அறிவொளி தருபவர் என்னும கருத்திலும் 'ஆசான்' என்னும் சொல் எழுந்தது. உலோகங்களை இணைக்க இடையில் நிற்கும் 'பற்றாசு' தன் நலம் என்பதைக் கருதாது நிற்கும். அதுபோன்றே ஆசானும் தன் இன்பம் வேண்டாதவனாக இருக்கவேண்டும் என்பதை,

''ஆண் ஆக்கம் (இன்பப்புணர்ச்சி) வேண்டாதான் ஆசான்''

என்னும் சிறுபஞ்சமூலப் பாடல் (29) நினைவுறுத்துகின்றது.

ஆசான் கல்வி கேள்விகளிற் சிறந்தவன் என்பது மட்டுமன்று, இரண்டிற்கும் உரிமை படைத்தவன். ''கேள்வியிற் கிளந்த ஆசான் உரையும்'' என்னும் பரிபாடல் (2-61) அடி 'கேள்வி அறிவை வழங்குவதற்கு உரிமை படைததவனாக எடுத்து மொழியப்படுபவன்' எனக் காட்டுகின்றது.

தண்டமிழாசான் சாத்தன்,

மதுரை வேளாசான்—என்னும் புலவர்களது புலமையும், அறிவு நுணுக்கமும், அறிவுத் திறனும் 'ஆசான்' என்னும் சொற்பொருளுக்குப் பெருமைசான்ற இலக்கியமாகின்றன. நுணுக்கமானவன் என்னும் கருத்திலும் ஆசான் பெயர் வழங்கப்பட்டுள்ளது.

அரசனுக்குக் கருத்துரை வழங்கும் குழு அரசியலுக்குப் பற்றுக் கோடாகத் திகழ்ந்தது. அந்த ஐம்பெருங்குழுவில் ஒருவன் ஆசான்.

ஏட்டுக் கல்விக்கு மட்டுமன்றி இசை, கூத்து முதலிய கலைகளுக்கு அறிவுத் தந்தையாக ஆசான் விளங்கினான் என்பதை,

''ஆடற்கமைந்த ஆசான'', ''தலைக்கோலாசான்'' (சிலம்பு : 3 : 25; 30 : 20) என்னும் தொடர்கள் காட்டுகின்றன.

### ஆசிரியன்

ஆசிரியன் என்னும் சொல்லும் 'ஆசு + இரியன்' என இரு சொற்களின் கூட்டு. இங்கு 'ஆசு' என்பது குற்றம் என்னும் பொருள் கொண்டது. ''ஆசு சிறுமையும் குற்றமும் ஆகும்'' என்பது திவாகர நிகண்டு. இரியன் கலைந்து ஓடச் செய்பவன். மனக் குற்றத்தை—அறியாமைக் கசட்டை, கலைந்து—சிதறி—இரிந்து ஓடச் செய்பவன் என்னும் பொருளில் நிறைந்தவன் ஆசிரியன். கல்வி என்பது அறியாமை என்னும் கசட்டை அறுப்பது அன்றோ? எனவே, கசடு அறுத்துக் கல்வி தருபவன் ஆசிரியன் ஆனான். ''கசடு அறக் கற்க'' என்னும் குறள் (391) தொடரும் இக் கருத்தை வழிமொழிகின்றது.

தொல்காப்பியர் தம் நூலில் ஆசிரியர் என்னும் சொல்லையே கைக்கொண்டார்.

''வரைநிலையின்றே ஆசிரியர்க்க''. *(1 : 316 : 3)*

''கடிநிலை யின்றே ஆசிரியர்க்க'' *(1 : 390 : 3)*

என்னும் நூற்பா அடிகளில் ''வரைநிலை'' ''கடிநிலை'' என நீக்குதல், கடிதல் என்னும் குற்றத் தொடர்புடைய சொற்களை அமைத்து ஆசிரியன் குற்றம் நீக்கும் குறிப்பை வைத்தார்.

ஆசிரியர் குற்றம் நீக்கி நெறிப்படுத்துவதில் தலைமை ஆணையராக விளங்கியவர். பலவகைக் கேள்வித் துறையிலும் நிறைந்தவராக விளங்கி,

'பல்கேள்வித் துறைபோகிய
தொல்லாணை நல்லாசிரியர்'' *(760, 761)*

என மதுரைக் காஞ்சியிலும் பட்டினப் பாலையிலும் (169, 170) நல்லாசிரியர் எனக் குறிக்கப்பட்டார்.

மதுரையாசிரியன் மாறன், ஆசிரியர் நல்லந்துவனார், மதுரை இளம்பால் ஆசிரியன் சேந்தன் கூத்தனார் எனும் புலமைப் பெரு மக்கள் ஆசிரியர் அடைமொழி பெற்றமையால் அன்னாரை ஆசிரியத் தொழில் மேற்கொண்டவராகக் கொள்ளலாம்.

சிலப்பதிகார உரையாசிரியர் அடியார்க்கு நல்லார் தொல் காப்பியரை யாண்டும் 'ஆசிரியர்' என்றே குறித்துச் செல்லுவது இலக்கண ஆசிரியர் என்பதை நினைவுபடுததுகின்றது. மேலும் நூலாசிரியன், உரையாசிரியன், ஆடலாசிரியன், பாடலாசிரியன், யாழாசிரியன், சமயவாசிரியன் எனப் பல துறையிலும் அவ்வக் குற்றம் போக்கும் ஆசிரியர்களாகத் திகழ்ந்தனர்.

ஆசிரியன் வேறு; ஆசாரியன் வேறு. ஆசாரியன் என்பான் ஒழுக்கத்தை உணர்த்துபவன். அதன் பகுதி ஆசாரம். அஃதாவது ஒழுக்கம். சமண சமய நூல்கள் பஞ்ச பரமேட்டிகள் என ஐவரைக் குறிப்பிடும். அவ்வைவருள் ஆசாரியார், உபாத்தியாயர் என இருவரும் வேறு வேறாய்க் குறிக்கப்படுவதும் இதனைத் தெளிவு படுத்துவதாகும்.

### கணக்காயன்

கணக்கு என்றதும் இக்காலத்தில் நம் நினைவில் வருவது எண்களும் அவற்றின் கூட்டல், கழித்தல், வகுத்தல், பெருக்கலுமே. முற்காலத்தில் 'கணக்கு' என்னும் சொல் நூலை உணர்த்தியது.

"கற்றறி எழுத்தும் எண்ணும் கணக்கு எனச் சொல்லுநாமம்"

என்பது சூடாமணி நிகண்டு (10 : 31 : 1) தொடக்கத்தில் கணக்கு என்பது எழுத்தையும் எண்ணையும் குறித்தது. தமிழ் எழுத்து வரிசை 'நெடுங்கணக்கு' எனப்பட்டது. இந்த நெடுங்கணக்கைப் பயில்வது தொடக்கக் கல்வி. இக் கணக்கைக் கற்போர் பலர்கூடிக் குழுவாக—ஆயமாகக் (ஆயம்—கூட்டம்) கற்றனர். இக் கூட்டம்

கணக்கு + ஆயம் = கணக்காயம் எனப்பட்டது. கணக்காயத்திற்குக் கற்பிப்போனாக அமைந்த ஆசிரியன் கணக்காயன் எனப்பட்டான்.

''கணக்காயர் இல்லாத ஊர்............
... ... ... ...
... ... ... ...
நன்மை பயத்தல் இல''

என்னும் திரிகடுகப் பாடல் (10) கணக்காயன் இல்லாத ஊரில் நன்மை விளையாது என்று குறித்தது. இதன் வாயிலாகக் கணக்காயன் ஒவ்வோர் ஊருக்கும் இன்றியமையாதவனாக விளங்கினான் என்பதை உணரலாம்.

கடைச்சங்க நூல்கள், அடி எண்ணிக்கை அளவு எனும் கணக்குக் கொண்டு தொகுக்கப்பட்டவை. அவை பதினெண்மேல் கணக்கு (பத்துப்பாட்டு, எட்டுத் தொகை) எனவும், பதினெண் கீழ்க் கணக்கு எனவும் பெயர் பெற்றன. இவற்றில் கணக்கு என்னும் சொல் 'நூல்' என்னும் பொருள் கொண்டது. எழுத்தையும் எண்ணையும் குறிக்க எழுந்த கணக்கு ஆகுபெயராக நெடுங்கணக்கால் ஆகிய நூலைக் குறிப்பதாயிற்று. எழுத்தையும் எண்ணையும் கற்பித்த கணக்காயர் எழுத்தாம் இலக்கண இலக்கிய நூல்களையும் எண்ணாம் கணித நூல்களையும் கற்பித்தனர்.

''கணக்காயர் நூலுரைப்போர்''

எனச் சேந்தன் திவாகரம் முதலிய நிகண்டுகள் கணக்காயர் நூலைக் கற்பித்தவர் என்பதைக் காட்டுகின்றன.

கணக்காயர் தாம் கற்றவற்றை எல்லாம் மனப்பாடம் ஆக்கிக் கொண்டவர். ஏட்டில் எழுதிய பாடச்சுவடியைக் கையில் கொண்டுள்ளார். நெஞ்சில் எழுதிய நினைவுச் சுவடியையே வாயில் கொள்வர். நினைவே அவர்க்குப் பாட நூல். ''ஆசிரியரே பாடப் புத்தகம்'' என அண்ணல் காந்தியடிகளார் ஒருமுறை குறித்தமை இக் கணக்காயர்க்கு மிகப் பொருந்துவதாகும்.

பாடம் என்பதற்கு மூலச் செய்யுள் என்பது அக்காலப் பொருள்.

"பாடமே ஓதிப் பயன்தெரிதல் தேற்றாத, மூடர்"

என்னும் நாலடிப் பாட்டிலும் (316 : 1, 2) இப்பொருள் நிற்கின்றது. கருத்தைக் கொள்ளாமல் மூலபாடத்தை மட்டும் மனப் பாடம் செய்த மூடரைச் சாடும் அந் நாலடியார்,

"கற்றதூஉ மின்றிக் கணக்காயர் பாடத்தால்
பெற்றதூஉம் பேதையார் சூத்திரம்" (314 : 1, 2)

என்று கூறிக் கணக்காயர் மூல பாடத்தை உணர்த்தியதை அறிவிக்கின்றது.

கணக்காயன் என்னும் சொல்லினது பொருள் வளர்ச்சி கணக்கு—ஆயன்—நூல்களை ஆராய்ந்தவன் என்னும் பொருளுக்கு வந்தது. பெரும்புலவர் நக்கீரனாரின் தந்தையார் "மதுரைக் கணக்காயர்" எனப்பட்டவர். இவர் மதுரையில் ஈடு இணையற்ற நூல் கற்பிப்போராக—கணக்காயராக இருந்து 'மதுரைக் கணக்காயர்' என்றாலே இவரைச் சுட்டுவதாகி, அச் சிறப்புச் சுட்டாம் கணக்காயரே இவரது இயற்பெயர் போல் வழங்கப்பட்டது எனலாம்.

இவர் போன்றவரே கூரைக் கணக்காயர் என்பவர். கணக்காயனார் தத்தனார் என்றொரு புலவர் விளங்கினார். இவர் கணக்காயனார் என்பதை அடைமொழியாகப் பெற்றவர். இவர்களது பெரும் புலமையை எண்ணுங்கால் கணக்காயர், நூல்களை ஆராய்ந்த பெரும் ஆசிரியர்களாக விளங்கியிருக்கலாம் என உணர்கின்றோம்.

### உபாத்தியாயன், குரு, தேசிகன்

இம் மூன்று சொற்களும் வட சொற்கள். ஆசிரியன் என்னும் கருத்தில் தமிழில் புகுத்தப்பட்ட சொற்கள் ஆனால், இச் சொற்கள் விரிக்கும் பொருள்கள் ஆசிரியன் என்பதற்கு நேரானவை அல்ல. இவற்றில் முதலில் புகுந்தது உபாத்தியாயன் என்னும் சொல். அஃது உவாத்தியான் என மருவித் தமிழ் இலக்கியத்தில் இடம் பெற்றது.

பதினெண் கீழ்க்கணக்கு நூல்களுள் காலததாற் பிற்பட்ட ஆசாரக் கோவையின் (16)

"அரசன் உவாத்தியான் தாய்தந்தை தம்முன்
நிகரில் குரவர்இவர் ஐவர்"

என்னும் பாடலில் முதன்முதலாக இச் சொல் அறிமுகமாகின்றது.

அத்தியயாம் என்பதற்கு வேதத்தை—மறையை ஓதுதல் என்று பொருள். உப என்பதை வடமொழி இலக்கணம் உப சருக்கம், அஃதாவது அடைமொழி என்று குறிக்கும். அதற்கு இங்கே 'துணை' என்று பொருள். எனவே, உப அத்தியயாகன்—உப + அத்தியாயன் = உபாத்தியாயன், மறையை ஓதத் துணை புரிபவன் என்னும் பொருளைக் கொண்டது. மறையை ஓதுவிப்ப வனைக் குறிப்பதே இச் சொல் என்பதை மணிமேகலை விளக்கு கின்றது.

"ஆரண (மறை) உவாத்தி அபஞ்சிகன் என்போன்"
(ஆபுத்திரன்திறம் : 4)

"ஆரண உவாத்தி அரும்பெறல் மனைவி"
(ஆபுத்திரன்திறம் : 79)

"அந்தண உவாத்தியை" (ஆபுத்திரன்திறம் : 46)

—என்னும் மணிமேகலை அடிகளில் ஆரணம், அந்தணன் என்னும் சொற்கள் நின்று மறை ஓதுவித்தலைக் காட்டிக் கொடுக்கின்றன. 'உவாத்தி' என மரூஉ மொழியாகக் கூனிக் குறுகிக் காட்சியளிப் பதையும் காண்கின்றோம்.

"ஊன்பிறங் கொளிரும் வேலான்
ஓர்ந்துதன் உவாத்தி சொல்லால்
தான்புறங் காட்டப் பட்டு"

—எனச் சிந்தாமணி (1090 : 1, 2), ஆசிரியனை—அரசவை ஆசானை உவாத்தியாகக் கூறியது.

காலப்போக்கில் பல கலைகளைக் கற்பிக்கும் ஆசிரியனுக்கும் இச் சொல் பயன்படுத்தப்பட்டது.

"தவாஅக் காதலொடு தகையாழ் காட்டும்
உவாத்தி யாதலின் உறுதியும் அதுவென"

என்னும் பெருங்கதை (1 : 44 : 131) யாழ் ஆசிரியனாக அமைந்த உதயணனை உவாத்தி ஆக்கியது. இவ்வாறாக உபாத்தியாயன் என்னுஞ் சொல் ஆசிரியனை ஒட்டிக் கொண்டது.

குரு

'குரு' என்னும் சொல்லும் ஆசிரியன் என்னும் பொருளில் ஒட்டப்பட்டதாகும். மாதா, பிதா, குரு, தெய்வம் என்னும் தொடரில் ஆசிரியருக்காகக் குரு நிற்பதைக் காணலாம். அப் பொருளில் இடைக்கால இலக்கியங்களில் இடம் பெற்றது

"குருவின் வாசகம் கொண்டு கொற்றவன்"

என்றும்,

"தன்றுணைக் குருவை எண்ணி"

என்றும் கம்பர் (1 : 7 : 16 : 1) பாடுகிறார். இங்கெல்லாம் அரசவை ஆசிரியன் என்னும் கருத்தில் 'குரு' என்னும் சொல் அமைக்கப்பட்டுள்ளது.

ஆனால், 'குரு' என்னும் சொல்லினது மூலத்தோற்றம் எவ் வகையிலும் ஆசிரியரை ஒட்டும் நிலையில் இல்லை.

'சம்வருணன்' என்றோர் அரசன். அவன் மகன் பெயர் 'குரு'. அவன் பெயரால் 'சமந்தபஞ்சகம்' என்னும் நகர் 'குருச் சேத்திரம்' எனப் பெயர் பெற்றது. இவனது வழியினர் 'குருகுலத் தார்' எனப்பட்டனர். 'குரு' என்னும் மன்னன் அறிவுத் திறமை யில் விளங்கிய கரணியத்தாலோ, குருச்சேத்திரத்தில் துரோணர் அமைந்து போர்க்கலையைப் போதித்த கரணியத்தாலோ அரசவை யில் கருத்துரை நல்கும் தலைமைத் தன்மையில் அமைந்த கரணியத்

தாலோ 'குரு' என்னும் சொல் ஆசிரியரைக் குறிப்பதாயிற்று. அதனால் குருச்சேத்திரம், அதனைச் சமைத்த தேவர்க்கு ஆசிரியத் தானமாகச் சிறப்பிக்கப்பட்டது.

'குரு' என்ற சொல்லுக்குத் தனிப் பொருளாக 'ஒளி' அமைந்தது. அறிவொளி பெற்றுச் சிறந்தவர் என்னும் கருத்தில் குரு ஆசிரியப் பொருளைப் பெற்றிருக்கலாம். ஆனாலும், அச் சொல் ஆசிரியருக்குரிய ஆழ்ந்த பொருட்சிறப்பைக் கொண்டது அன்று என்பது உறுதியான உண்மை. அதனாற்றான் ஆசிரியருக்குரிய சொற்களைப் பட்டியலிடும் சூடாமணி நிகண்டு,

"........................................ஆசான்
ஊன்றுதே சிகனே ஓசன் உபாத்தியாயன் பணிக்கன்
ஏன்ற ஆசிரியன் பேர்" —(2 : 7 : 2—4)

என்று சொற்களைக் கூறி 'குரு' என்னும் சொல்லை அப் பட்டியலில் காட்டவில்லை. பிங்கல நிகண்டு வியாழனை 'சுரகுரு' என்று குறித்தாலும் 'ஆசான்' என்னும் சொல்லையும் அமைக்கின்றது. சூடாமணி நிகண்டு 'குரு என்னும் சொல்லை வியாழனுக்கமைக்காது ஆசிரியன் என்னும் சொல்லையே காட்டியது.

இவற்றையெல்லாம் ஒன்றுகூட்டி நோக்குங்கால் 'குரு' என்னும் சொல் ஆசிரியப் பொருளைக் கொண்டதாகத் தோற்றம் பெறவில்லை என்பதை உணரலாம்.

## தேசிகன்

'தேசு' என்பது 'ஒளி, அழகு' என்னும் பொருள் கொண்டது. இவ் வடிப்படையிலேயே ஆசிரியப் பொருளை ஒட்டி வழங்கப் பட்டது. "தேசிகர்ப் பிழைத்து வேறோர் நினக்கிதன் நாடி நின் றாய்" (1 : 11 : 109) என்னும் கம்பராமாயணப் பாடல் ஆசிரியனைத் தேசிகனாகப் பேசியது.

இம் மூன்று சொற்களும் மற்றொருவகை ஒற்றுமையால் கற்பிக்கும் ஆசிரியன் என்னும் பொருளினின்றும் பிரிந்து அதற் கென ஓர் அடையாளமும் பெற்றுள்ளன.

உபாத்தியாயன் மறையை ஓதுவிக்கும் அந்தணன் எனக் கண்டோம். குரு என்பது குருக்கள் ஆகிக் கோயிற் பூசை செய்வோரைக் குறிப்பதாயிற்று. தேசிகன்—தேசிகர் என்பார் ஓதுவாராகவும் காணங்களைச் செய்விப்போராகவும் அமைந்தனர். இவ்வாறு மூவரும் இரு பிறப்பாளராகப் பூணூல் அணிபவராக ஆசிரியரினின்றும் பிரிந்து நிற்கின்றனர்.

## ஓசன், பணிக்கன்

இவை இரண்டும் தமிழ்ச் சொற்களேயாயினும் திசைச் சொற்களாகக் கொடுந் தமிழ்நாட்டிலிருந்து வந்து சேர்ந்தவை.

ஓசு, ஓசம் என்னும் சொற்கள் பேரொளி, புகழ் என்னும் பொருள்களைக் கொண்டவை. ஓசு—அன்—ஓசன் ஆகி அறிவில் பேரொளியுடையவன்—புகழுடையவன் என்னும் சிறப்பில் ஆசிரியனைப் போலத் திகழ்ந்தவனைக் குறித்தது. ஆயினும், காளி கோயிற் பூசாரிக்கு அப் பெயர் அமைந்ததை நோக்கும்போது இச் சொல்லும் முழுமையாக ஆசிரியனுக்குரிய பொருட்சிறப்பைப் பெற்றதாகக் கொள்ள இயலவில்லை.

'பணிக்கம்' என்பதற்குத் 'திருத்தம்' என்றொரு பொருள். தவறுகளைத் திருத்திச் செம்மை செய்பவன் என்னும் கருத்தில் இச் சொல் ஆசிரியனைக் குறிப்பதாயிற்று. கல்வி அறிவால்—கற்பிக்கும் திறத்தால் பணிய வைப்பவன் என்னும் கருத்திலும் ஆசிரியனை அணுகியிருக்கலாம். இச் சொல் மலை ஞாலத்தில் இப் பொருட் குறிப்பில் வழங்கப்படினும் அங்கும் ஒரு காலத்தில் கோயிற் பூசாரிக்கு வழங்கப்பட்டது. கூத்துக்கலையைப் பயிற்றுவிப்பவனுக்கும், படைக்கலம் பயிற்றுவிப்பவனுக்கும் பணிக்கன் என்னும் சொல் வழங்கப்பட்டது.

"பண்புடையான் ஒரு பணிக்கன் தோன்றி"

என்னும் திருவாலவாய்ப் புராண அடியில் (35 : 1) படைக்கல ஆசிரியனாகப் பணிக்கன் நிற்கின்றான்.

மேலே விளக்கப்பட்ட செந்தமிழ்ச் சொற்கள் மூன்றும், வட சொற்கள் மூன்றும், திசைச் சொற்கள் இரண்டும் கற்பிக்கும் பணியைக் கொண்டோரது தகுதியையும் திறமையையும் வெளிப்படையாகவும் குறிப்பாகவும் அடையாளங் காட்டின.

இச் சொற்கள் நாட்டு மக்களிடையே கொண்ட வழக்காற்றை நோக்கினால் மக்களிடையே கற்பிப்போருக்கு அமைந்த பெருமையையும், நேர்ந்த சிறுமையையும் அறியலாம்.

'ஆசான்' என்னும் சொல் எழுத்து வழக்கில் அமைந்தது போன்று பேச்சு வழக்கில் இடம் பெறவில்லை. எழுத்து வழக்கில் அவரது நிறைந்த பெருமையைக் காட்டுகின்றது. தலைவன்—அதற்கு மேலும் ஒரு படி உயர்ந்து தெய்வம் போன்ற பெருமையைக் காட்டுகின்றது. ஐம்பெருங்குழுவில் ஒருவனாக அமைந்த ஆசானை மன்னவனைச் சூழலறிந்து நெறிப்படுத்தும் பெரும் பீடத்தைப் பெற்றவனாகக் காண்கின்றோம். வட நாட்டரசர் இகழ்ந்தனர் எனச் சினம் பொங்கிச் சீறி வஞ்சினம் கூறும் சேரன் செங்குட்டுவன் அவையில் மாடலமறையோன் எழுந்து,

சோழ பாண்டியரை வடவர் இகழ்ந்தனரே அன்றி

"இமய வரம்ப! நின் இகழ்ந்தோர் அல்லர்
அமைகநின் சினமென ஆசான் கூற"
(சிலம்பு : 26 : 23, 24)

மன்னன் அமைதி கொண்டதைக் காட்டுகின்றது சிலம்பு. அரசியலில் அத்துணைப் பெருமைத் தகுதி இருந்ததை 'ஆசான்' குறிக்கின்றது. இஃது இயற்றமிழில் பெருமை.

இசைத்தமிழில் காந்தாரம் என்னும் தலைமைத் தன்மை வாய்ந்த பண்ணிற்கு "ஆசான் திறம்" என்பது சிறப்புப் பெயர். இச் சிறப்பு ஆசான் என்னும் சொல்லால் குறிக்கப்பட்டது.

கூத்துத் தமிழிலும் "ஆடற்கு அமைந்த ஆசான்" பெருமை பெற்றவன்.

எனவே, ஆசான் என்னும் சொல் முத்தமிழ் ஏட்டிலும் பொன்னெழுத்துகளால் ஒளிவிடுகின்றது. ஆசானையும் பொன்னொளிப் புகழில் நிறுத்தியுள்ளது.

ஆனால், பேச்சு வழக்கில் இச் சொல் பெருமளவில் இடம் பெறவில்லை; அருகி வழங்கப்படும்போது அவரது பெருமைக்குக் கட்டளைக் கல்லாக நின்றது; நிற்கின்றது.

அடுத்துக் கணக்காயர் என்னும் சொல் பழங்கால நூல்கள் சிலவற்றில் கற்பிப்பாரது பெருமையைப் பேணிக் காத்தது. எவ்வகையிலும் அவரது பெருமையில் தொய்வை ஏற்படுத்தவில்லை. ஆனால், தற்கால வழக்கில் இச் சொல் கற்பிப்போரை உணர்த்தாமல் வரவு செலவுக் கணக்கை ஆராய்ந்து பார்ப்பவரை—கணக்குத் தணிக்கையாளரை நினைவுபடுத்தும் நிலைக்கு வந்துள்ளது. கல்வி கற்பிப்போரைக் குறிக்கும் வழக்கில் அறவே இல்லை. அதே நேரத்தில் அவரைக் குறைக்கும் நிலைமையை எவ்வகையிலும் ஏற்படுத்தாததற்கு அச் சொற்கு நன்றி கூற வேண்டும்.

'குரு' என்னும் வட சொல் கல்வி கற்பிப்போரைக் குறிக்கும் நோக்கில் எழவில்லை என்பதைக் காண்டோம். ஆனால் அச் சொல் கற்பிப்போருக்கும் வழங்கியுள்ள பெருமை மிகச் சிறப்பாகக் குறிக்கத் தக்கதாகும். ''மாதா, பிதா, குரு, தெய்வம்'' என அவரைத் தெய்வத்திற்கு அடுத்த நிலையில் உயர்த்தியது. குருநாதன் என முருகக் கடவுளை ஒட்ட வைத்தது.

'குருகுலம்' என்னும் சொல்லமைப்பு குறிக்கத்தக்க கருத்தைக் கொண்டது. இத் தொடர் 'குரு' என்னும் அரசனது குலத்தாரைக் குறிப்பதோடு கற்பிப்போர் உடன் உறைந்து பயிலும் கல்வி நிலைய அமைப்பையும் குறிப்பதாயிற்று: அதற்கு மேலும் ஒருபடி உயர்ந்து நின்றது.

'தேவ குலம்' என்னும் சொல்லமைப்பு விரிந்தால் தேவரது கூட்டம் எனப் பொருள்படும். இச் சொல்லமைப்பிற்குத் தெய்வக் கோயில் என்றொரு சிறப்புப் பொருளும் உண்டு.

''ஊரான் ஓர் தேவ குலம்''

என்ற இலக்கிய வழக்கும்,

''பாழ்மனையும் தேவ குலமும் சுடுகாடும்''

என்னும் ஆசாரக் கோவையும் (57 : 1) பிற பல பாடல்களும் தெய்வக் கோவிலைத் தேவ குலம் எனக் காட்டுகின்றன. இவற்றில் 'குலம்' என்பது 'கோவில்' என்னும் பொருளைக் கொண்டது. இது போன்றே 'குருகுலம்' என்பதில் உள்ள 'குலம்' என்னும் சொல்லும் கோவில் என்னும் பொருளில் நிற்பதாகும். குருவினது இல்லம் கோவிலாகக் கொள்ளப்பட்ட பெருமையைக் காண்கின்றோம். எழுத்தறிவித்தவன் இறைவன் அன்றோ? அந்த இறைவன் இல்லம் கோவிலாவதில் வியப்பில்லை, குரு இல்லம் கோவிலாக இருந்ததை எண்ணிய பாரதி மீண்டும் அந் நிலையைக் காணும் விருப்பத்தில் ''பள்ளித் தலமனைத்தும் கோவில் செய்குவோம்'' என்று பாடினான் போலும்.

இத்துணைப் பெருமை தந்த குரு என்னும் சொல் நாட்டு வழக்கிலும் ஓரளவில் அப் பெருமையை விளக்கியது. மிகச் சிலரது வாய் வழக்கில் நிற்கின்றது. ஆனால், பெரு வழக்காகக் குருக்கள் எனப் பரவி இந்து சமயக் கோவிற் பூசை செய்வோரையும், கிறித்துவ சமயப் பாதிரியாரையும் குறிக்கும் அளவில் நின்றுவிட்டதைக் காண்கின்றோம்.

அடுத்து, 'தேசிகன்' என்னும் சொல் எழுத்து வழக்கில் தூய்மையையும் ஆன்மீகத்தையும் தலைமையையும் உணர்த்திற்றாயினும் தற்காலத்தில் தேசிகர் என்று வழக்காகி ஓதுவார் என ஓர் இனத்தாரைக் குறிக்கும் அளவில் சுருங்கி நின்று கற்பிப்போரை எவ்வகையிலும் அணுகாது அகன்றுவிட்டது.

திசைச் சொற்களாகிய ஓசன், பணிக்கன் என்னும் இரு சொற்களும் இலக்கிய வழக்கிலும் பிற எழுத்து வழக்கிலும் மிக மிக அருகியனவே. இவையிரண்டுமே கல்வியைத் தருவோருக்குப் பெரும் பெருமையை வழங்கியதாகக் கொள்ள இயலாது. நாட்டு வழக்கில் இவையிரண்டும் அறவே இல்லாதவை. 'ஓசன்' சொல்லுதற்கே

சிறப்பான ஒலியில் அமையவில்லை. 'ஓசன்' என்னும் ஆண்பாற் சொல்லுக்குரிய பெண்பாற் சொல் ''ஓசி'' என்பது. ஓர் அகரமுதலி ''ஓசி—கல்வி கற்பிப்போனது மனைவி'' என்று பொருள் காட்டி யுள்ளது. இவ்வாறு எழுத்தறிவிக்கும் இறைவனது மனைவியை ஓசியாக்கிய ஓசன் என்னும் சொல் பெருமைக்குரிய நிலையைக் காட்டவில்லை. பணிக்கன் என்னும் சொல் மலைஞாலத்திலும் ஓர் இனத்தாரைக் குறிப்பதாகவே வழக்கில் உள்ளது.

எஞ்சி நிற்பன உபாத்தியாயன் என்னும் வட சொல்லும், ஆசிரியன் என்னும் செந்தமிழ்ச் சொல்லுமாகும்.

இவற்றுள் உபாத்தியாயன் என்னும் சொல் எழுத்து வழக்கி லேயே உவாத்தியாயன் என்று மருவிற்று. உவாத்தி என்றும் குறு கிற்று. இச் சொல் வழக்கு உபஅத்தியயநன் என்பதிலிருந்து உபாத் தியாயன் ஆகி, அது மருவி உவாத்தியாயன் ஆகி, அஃதும் உவாத்தி யான் ஆகி, உவாத்தி ஆக மாறி மேலும் தலையெழுத்துப்போய் வாத்தியான் ஆகி, அதிலும் ஆண்பால் விகுதிபோய்ப் பெண்பால் விகுதி பெற்று 'வாத்தி' என்று முடங்கி இறுதியாக நாட்டுப் பேச்சில்,

''ஊருக்கு இளைத்தவன் பிள்ளையார்கோவில் ஆண்டி;
அவனுக்கும் இளைத்தவன் பள்ளிக்கூடத்து வாத்தி''

என்று குறிப்பிடப்படுதல் மிக அவலத்திற்குரியதாகும்.

கற்பிக்கும் பணிபுரிவோர் இல்லாத ஊர், நலம் பயவாது என்று இருந்த பேச்சுப் போய் ஊருக்கு இளைத்தவனிலும் இளைத்தவனாக ஆக்கியது இச் சொல். இன்னும் இடத்திற்கு இடம் கூட்டத்திற்குக் கூட்டம் இச் சொல் அடியாளாய், போக்கிலியாய், தலைமைக் காவலராய், குத்துச்சண்டை நடிகராய் 'வாத்தியாரே' என்று அழைக்கப்படுவதைக் கேட்கும் காது ஆசிரியரை எண்ணி அவலப் படுகின்றது.

எனவே, இறுதியாக எஞ்சி நிற்கும் 'ஆசிரியன்' என்னும் சொல் ஒன்றே எல்லா வழக்கிலும் இன்றும் பெருமை குன்றாததாகக் கற்பிப்போரைக் காட்டி வருகின்றது.

எனவே, கல்வியை வழங்கும் இறைவனை அவனுக்குரிய தகுதியில் குறிப்பிட விரும்புவோர் 'ஆசிரியன்' என்ற சொல் ஒன்றையே பயன்படுத்தல் ஏற்புடையது என்பது குறிக்கத்தக்கது.

ஆசான் வழக்கில் இல்லை. கணக்காயன் வேறு வழக்காயிற்று. குரு வட சொல். தேசிகன் இனக்குறியாயிற்று. ஒசன் ஓசிச் சொல். பணிக்கன் பழக்கத்திலில்லை. உவாத்தியாயன், வாத்தியார், வாத்தி இழிவழக்காயின. தனித்த சிறப்புடன் வழங்கப்பட வேண்டியது ஆசிரியர்.

கல்வியைக் கற்பிக்கும் பணியை மேற்கொண்டுள்ள சான்றோரை 'ஆசிரியர்' என்னும் தனித்தன்மை வாய்ந்த சொல்லாலேயே குறிப்பிடவேண்டும். அது கல்விக்குத் தரும் தனிப் பெருமையும் நன்றிக் கடனுமாகும்.

ஒரு பெரியவர் அளவில் அடங்காத துலாக்கோல் ஒன்றைப் பிடித்துப் பார்த்துக்கொண்டுள்ளார். இரண்டு தட்டுகளும் சமன் செய்து நிற்கின்றன. ஒரு தட்டில் இந்த உலகத்தை வைக்கின்றார். அதற்கு ஈடாகும் சிறப்புடைய பொருளை மற்றொரு தட்டில் வைத்து உலகத்திற்குச் சமமாக்கிப் பார்க்க விரும்புகிறார். சமப் பொருள் குணத்தன்மையால், செயல் தூய்மையால், நடைமுறைச் சீரால் நிறையவேண்டும் என்பது அவர் அவா. முதலில் குணத் தன்மையுடைய ஒருவனைத் தேர்ந்தெடுக்கிறார். தட்டில் வைக் கிறார். அவன் விருந்தினன். அறுசுவைக்காகச் செல்லும் விருந் தினன் அல்லன். என்றோ புதிதாக விருந்தினன் ஆகுபவன். அவன் தன்மை விருந்து படைப்போனது இயல்பையும் இயலாமை யையும் அறியும் குணத்தன்மை. அவனை வைத்ததும், உலகத்தட்டு மூன்றில் ஒரு பங்கு உயர்கிறது. அடுத்துச் செயல் தூய்மையுடைய ஒருவனைத் தேர்ந்தெடுக்கிறார். அதே தட்டில் வைக்கின்றார். அவன் உயிர்க்கொலையைத் தடுக்கும் தூய பணியினன். உலகத் தட்டு அடுத்த மூன்றில் ஒரு பங்கு உயர்கின்றது. மூன்றாவதும் இறுதியானதுமாக நடைமுறைச் சீருடைய ஒழுக்கமுடையானைத் தேர்ந்தெடுக்க விரும்புகிறார். ஆழ்ந்து தேடுகின்றார். ஒருவன் கிடைக்கிறான். அவனைச் சுண்டிப் பார்க்கிறார். தட்டில் வைக்

கின்றார். அவன் ஆசிரியன். உலகத்தட்டு உயர்ந்து சமநிலை பெறுகின்றது.

பனை ஏட்டை எடுக்கின்றார்;

எழுத்தாணியைப் பதம் பார்க்கின்றார்;

பொன்னெழுத்துக்களைத் தீட்டுகின்றார்;

"ஒல்வது அறியும் விருந்தினனும்; ஆருயிரைக்
கொல்வது இடைநீக்கி வாழ்வானும்—வல்விதின்
சீலம் இனிதுடைய ஆசானும் இம்மூவர்
ஞாலம் எனப்படு வார்"

என்னும் பாடலைத் திரிகடுகத்தில் (26) இணைக்கிறார். இணைக்கும்போதே அவர் நெஞ்சம் நிறைவால் விம்ம முகம் செந்தாமரையாகின்றது. அவர் நல்ல அறிவின் சின்னம். அவர் பெயர் நல்ல ஆதன் (ஆதன் அறிவு படைத்தவன்) ஆசிரியர் நல்லாதனார்.

உலகத்து மூன்றில் ஒரு பங்கில் இந்த ஆசிரியர்க்கும் ஆசிரியத் தன்மை நிறைந்த அனைவருக்கும் இடம் உண்டு. வாழ்க ஆசிரியர்.

# 7. எள்ளும் தைலமும்

[அறிஞர் அ. காமாட்சிநாதன்]

வடமொழியில் எள் என்பதைக் குறிக்கத் தில என்ற சொல் அதர்வ வேதத்தில் காணப்படுகிறது. பிராகிருதம், பாலி மொழி களிலும் தில என்ற சொல் காணப்படுகிறது. பிற வட இந்திய மொழிகளில் தில, தீல், தல, தல், தலீ, திரு, தேல் போன்ற சொற்கள் காணப்படுகின்றன.

வடமொழியில் தைலம் என்ற சொல் எண்ணெய் (oil), நல் லெண்ணெய் என்று பொதுப் பொருளிலும் சிறப்புப் பொருளிலும் வழங்குகிறது. இதே போலப் பாலிமொழியில் தேல என்ற சொல் எண்ணெய், நல்லெண்ணெய் என்ற இரு பொருளிலும் வழங்கு கின்றது. பிராகிருதமொழியில் தேல, தெல்ல, தில்ல என்ற சொற்கள் எண்ணெய் என்ற பொதுப் பொருளில் மட்டும் வழங்கு கிறது. இந்தி மொழியில் மட்டும் தேல் என்ற சொல்லும் தைல என்ற சொல்லும் எண்ணெய் என்ற பொதுப் பொருளில் மட்டும் வழங்குகின்றன. தேங்காய் எண்ணெயைக் குறிக்க நாரிகாதேல் என்று இந்தியில் கூறுவர். காஷ்மீரி மொழியில் தேல் என்ற சொல் எள் என்ற பொருளில் மட்டும் வழங்குகிறது.

தகரத்தை முதலாகக் கொண்டு வழங்கும் மேற்கண்ட வட இந்திய மொழிச் சொற்களுக்கு உறவுச் சொற்கள் (cognates), வட இந்திய மொழிகளுக்கு இனமான இந்தோ ஐரோப்பிய மொழிகளான கிரீக்கு, லத்தீன் போன்றவற்றில் இருப்பதாகத் தெரியவில்லை. அதோடு இச் சொற்களின் வேர் உயிர்களில் (root vowel) ஒற்று மையும் இல்லை; ஒழுங்கும் இல்லை: தில்லதிலல தேல்லதலெ இந்த இரண்டு காரணங்களாலும் இந்தச் சொற்களின் மூலச் சொல்

லாகிய தில என்ற சொல் இந்தியாவில் வழங்குகின்ற பிறமொழிக் குடும்பத்தைச் சேர்ந்த மொழிகளிலிருந்து வடமொழி கடன் வாங்கியதொரு சொல்லாக இருக்கலாம் என்று கருத இடமுண்டு. வட இந்தியாவில் வடமொழிக்கு அருகில் வழங்கிய மொழிக் குடும்பங்களில் திராவிடமொழிக் குடும்பமும் முண்டா மொழிக்குடும்பமும் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கன. இந்த இரண்டிலும் வட மொழியுடன் முதன்முதலில் தொடர்பு கொண்டதும் வடமொழிக்கு மிகவும் அதிக எண்ணிக்கையில் சொற்களைக் கடனாகக் கொடுத்ததும் திராவிட மொழிக் குடும்பந்தான். எனவே வடமொழியில் காணப்படும் தில என்ற சொல் திராவிடமொழிக் குடும்பத்திலிருந்து கடன் பெற்ற சொல்லாக இருக்கவேண்டும் என்று ஊகிக்க இடமுண்டு.

வடமொழியில் தில என்ற சொல்லுக்கு எள் என்ற பொருள் மட்டுமன்றி "சிறிய நுணுகிய பொருள்—"small particle" என்ற பொருளும் மகாபாரதத்தில் காணப்படுகிறது. இந்தி மொழியிலும் இச் சொற்கு எள் என்ற பொருளோடு "a minute fragment" என்ற பொருளும் வழங்குகின்றது. தெலுங்கில் எள்ளிற்கு நுவ்வு என்ற பெயர் உண்டு. இந்தச் சொல் நுண்ணியது, மிக மிகச் சிறியது என்ற பொருளை உடைய நொய், நொவ்வு என்ற தமிழ்ச் சொற்களுடன் உறவுடையது. தமிழில் குருணை என்றால் முரிந்த, நொறுங்கிய அரிசிக்குப் பெயர். இது குறு + நொய் என்ற சொற்றொடரின் திரிபாகும். தமிழில் நொய் என்றாலே இடிந்து நொறுங்கிய சிறு சிறு அரிசி என்று பொருள். எள்ளை, சிறியது, நுண்ணியது போன்ற பொருளில் இலக்கியங்களிலும், புலவர்கள் பயன்படுத்தியுள்ளனர். காட்டாக 'எள்பகவு அன்ன சிறுமைத்தே' என்ற குறட்பாவை (424)க் காட்டலாம். மேற்காட்டிய சான்றுகளிலிருந்து எள்ளிற்கு எள் என்ற சொல்லே அதன் சிறிய உருவத்தைக் காரணமாகக் கொண்டு அமைந்த காரணப்பெயராகக் கருத இடமுண்டு. எள் என்ற சொல்லுக்கு உறவாக எளிமை, எளிது போன்ற சொற்களைக் கருதலாம். அவ்வாறாயின் தில என்ற வடமொழிச் சொல்லோடு உருவ ஒற்றுமை உடைய தகர முதற் சொற்கள்—சிறிய உருவத்தைக் குறிக்கும் சொற்கள் திராவிட மொழிகளில் உண்டா என்று பார்த்தல் வேண்டும். கன்னடத்தில் தெள் என்ற சொற்கு fine, thin, small என்பது பொருள்களாகும்.

தமிழிலும் மிகச் சிறிய பூச்சிகளைக் குறிக்கத் தெள்ளுப்பூச்சி, தெள்குப் பூச்சி என்ற பெயர்கள் வழங்குகின்றன. இதிலிருந்து வடமொழி யில் வழங்கும் தில என்ற சொல்லுக்கும் கன்னட மொழியில் வழங் கும் தெள் என்ற சொல்லுக்கும் உறவு இருப்பது ஓரளவு புலனாகும். இன்னும் தெளிவுபெற வேண்டுமானால் சொல்லாராய்ச்சியைச் சற்று ஆழமாக நடத்தல் வேண்டும். அப்பொழுதுதான் வடமொழி யின் தில என்ற சொல்லில் காணப்படும் இகர மாற்றத்துக்கும் ஈற்றில் காணப்படும் அகரத்துக்கும் விளக்கம் தோன்றும்.

திராவிட மொழிகளில் சகரம் தகரமாக மாறுதல் என்பது ஓர் ஒலி மாற்ற விதி. உதாரணங்கள் :—துளு : சணிலு, தணிலு (தமிழ் : அணில்); தமிழ் : சிமிழ், திமில் ; தமிழ் : சிந்து மால்டோ : துங்தெ ; வடமொழி : சிம்ஹாசனம் = தமிழ் : சிங்கா தனம் ; வடமொழி ; சேனை = தமிழ் : தானை.

இந்த ஒலிமாற்றப்படி கன்னடத்தில் காணப்படும் தெள் என்ற சொல்லும், தமிழில் காணப்படும் தெள் (தெள்ளுப்பூச்சி) என்ற சொற்களும் சகர முதற்சொல் ஒன்றிலிருந்து வந்ததாக ஊகிக்கலாம். தமிழில் தெள்ளுப்பூச்சி என்ற சொல்லுக்கு உறவாகச் செள் (செள்ளு), என்ற சொல்லும் வழங்குகின்றது. இந்தச் சொல்லும் மிக மிகச் சிறிய நுண்ணிய பூச்சியைக் குறிக்கின்றது. செள் என்ற சொல்லுக்கும் உறவாகத் தோடர் மொழியில் தோள் என்ற சொல் லும் குடகு மொழியில் செள்ளி என்ற சொல்லும் வழங்குகின்றன. இதிலிருந்து வடமொழியில் வழங்கும் தில என்ற சொல், கன்னடத் தில் வழங்கும் தெள் என்ற சொல், தமிழில் வழங்கும் தெள் என்ற சொல் ஆகியன செள் என்ற சொல்லிலிருந்து பிறந்த உறவுச் சொற்கள் என்பது ஓரளவிற்கு விளங்கும். இனி செள் என்ற சொல்லுக்கும் எள் என்ற சொல்லுக்கும் உறவு காணல் வேண்டும்.

திராவிட மொழிகளில் சகர ஒலி மறைவு என்பது மற்றோர் ஒலி மாற்றம் ஆகும். அஃதாவது சொல்முதற் சகரம் பெரும்பாலும் சொல்லிடைச் சகரம் சிறுபான்மையும் மறைதல் ஆகும். சான்றுகள் பின்வருமாறு : மால்டோ : சிலெ = பர்ஜி : சில்லெ = தமிழ் :

இல்லை ; பர்ஜி : சீ = தமிழ் ; ஈ ; கோலாமி : சுப்ப் = தமிழ், மலையாளம், கன்னடம், துளு, தெலுங்கு : உப்பு ; தமிழ் : சான்ற, ஆன்ற ; சிப்பி, இப்பி ; சிமிழ், இமிழ். இந்த சகர மறைவுப்படி, தமிழில் வழங்கும் எள் என்ற சொல் செள் என்ற சொல்லிருந்து தோன்றியதாகக் கொள்ளலாம். செள் > எள். செள் என்ற சொல் தொடக்கத்தில் எள்ளைக் குறிக்காமல், நுண்ணியது, சிறியது என்ற பொருளில் வழங்கியிருக்கவேண்டும். பிறகு அது மிக மிகச் சிறிய பொருளாகிய எள்ளை உணர்த்தத் தொடங்கியிருக்க வேண்டும். இது போன்றே எள் என்ற சொல்லும் முதலில் சிறிய பொருளை உணர்த்திக் காலப்போக்கில் மிகமிகச் சிறிய பொருளாகிய எள்ளையும் உணர்த்தத் தொடங்கியிருக்க வேண்டும். இந்தச் சொல்லிலிருந்து ஏற்பட்ட மாற்றங்களைக் கீழ் வருமாறு காட்டலாம்.




தெள் என்ற சொல்லிலிருந்து வடமொழித் தில என்ற சொல் தோன்றியிருக்க வேண்டும். இதை நிறுவத் தில என்ற சொல்லில் காணப்படும் இகரம், அகரம் எப்படித் தோன்றின என்பதை விளக்க வேண்டும். அதற்குத் தமிழ் போன்ற திராவிட மொழிகளில் ஏற்பட்ட மற்றோர் ஒலி மாற்றம் துணை செய்கிறது.

தமிழ், மலையாளம் போன்ற மொழிகளில் வேர்ச் சொற்களில் காணப்படும் நடு உயிர்கள், (எ, ஒ) அடுத்த அசையில் அகரம் வருமானால் மேலுயிர்களாக (இ, உ) மாறும் என்பது ஓர் ஒலிமாற்ற விதியாகும். சான்றுகள் :— பெறு > பிற : கொய் > குயம் ; செல் > சிவ ; வெண் > பிணை ; ஒளி > உளவு. இந்த ஒலி மாற்றத்தைப் பயன்படுத்தி வடமொழியிற் காணப்படும் தில என்ற சொல்லை விளக்கலாம்.

செள் + அ(ம்) > சிள(ம்) > திள(ம்) > தில(ம்) (வடமொழி)

நாவளைவு ஒலிகள் திராவிட மொழிகளில் அதிகமாகப் பயின்று வருவன. அவை வடமொழிக்குப் போகும்போது நாவளைவுத் தன்மையை இழத்தல் இயல்பு.

பிள்ளை > பில்லிக (வடமொழி) ;

வெள்ளி > வெல்லக (வடமொழி)



இம் முறைப்படி தமிழ் ளகரம் வடமொழியில் லகரமாக மாறி, திளம் என்பது தில(ம்) என்ற சொல்லாக வழங்குகின்றது.

வடமொழியில் வேரில் காணப்படும் சில உயிர்கள் பிற உயிர்களாக மாறுவதால் பெயராக்கங்கள் ஏற்படும். வேரில் காணப்படும் முன்னுயிர்கள் இகரம், எகரம் என்பன ஐகாரமாகவும், உ, ஓகாரங்கள் ஔகாரமாகவும் மாறுவதால் சில பெயராக்கங்கள் ஏற்படும். சான்றுகள் வருமாறு :— சிவம் > சைவம் ; விஷ்ணு > வைணவம் ; இந்திரம் > ஐந்திரம் ; கேகய > கைகேயி ; புத்தம் > பௌத்தம் , கோசல > கௌசல்யா. இந்த ஒலிமாற்றப்படி திலம் என்பது தைலம் என்றாயிற்று. இதற்கு எள்ளிலிருந்து எடுக்கப்பட்டது, தோன்றியது என்பது பொருள். தைலம் என்ற சொல்லுக்குத் தொடக்கத்தில் நல்லெண்ணெய் (sesaumum oil) என்ற சிறப்புப் பொருள் வழங்கிக் காலப்போக்கில் எண்ணெய் (oil) என்ற பொதுப் பொருள் தோன்றலாயிற்று. அதர்வ வேதத்திலேயே தைலம் என்ற சொல் sesaumum oil, oil என்ற இரு பொருள்களிலும் வழங்குகின்றது. இந்தத் தைலம் என்ற சொல்லிலிருந்து பிறந்த தேல(ம்) என்ற பாலிமொழிச்சொல் நல்லெண்ணெய், எண்ணெய் என்ற இரண்டு பொருள்களிலும் வழங்குகின்றது. ஆனால் பிராகிருத மொழியில் தேல, தெல்ல, தில்ல என்ற சொற்கள் எல்லாம் எண்ணெய் என்ற பொதுப் பொருளிலேயே வழங்குகின்றன. அதுபோல இந்தியில் உள்ள தேல் என்ற சொல்லும் எண்ணெய் என்ற பொதுப்பொருளில்தான் வழங்குகின்றது. இதோடு தமிழில் வழங்கும் எண்ணெய் என்ற சொல்லின் வரலாறும் ஒப்பிடத்தக்கது. எண்ணெய் என்பது எள் + நெய் என்பதிலிருந்து தோன்றியது. இந்தச் சொல் தொடக்கத்தில் நல்லெண்ணெய் என்ற சிறப்புப்

பொருளைத் தந்தது. காலப்போக்கில் ஆயில் என்ற பொதுப் பொருளை உணர்த்தத் தொடங்கி இன்றும் அப் பொருளிலேயே வழங்கி வருகின்றது. ஆனால் வடமொழிச் சொல்லாகிய தைலம் என்ற சொல் வடமொழியில் நல்லெண்ணெய், எண்ணெய் என்ற பொருளை உணர்த்தித் தமிழ் முதலிய திராவிட மொழிகளில் மருந்தெண்ணெய்—அஃதாவது மூலிகை எண்ணெய் என்ற சிறப்புப் பொருளில் மட்டும் வழங்கி வருகின்றது.

# 8. மொழியியலும் மொழிப் பொதுமைகளும்

[அறிஞர் கி. அரங்கன்]

மொழியை நாம் இருவிதங்களில் அணுகலாம், மொழியைப் புற நடத்தைகளில் (Behaviour) ஒன்றாகப் பார்ப்பது ஒருவித அணுகுமுறை ; இன்னோர் அணுகுமுறை அதை அறிவாகப் (Knowledge) பார்ப்பது. மொழியை ஆராயும் மொழியிய லாளர்கள் இவ்வணுகுமுறைகளில் வேறுபட்டு வித்தியாசமான கோட்பாடுகளை நிறுவுகிறார்கள். அமைப்பு மொழியியலாளர்கள் (Structural Linguists) புற நடத்தைகளில் ஒன்றாக மொழியைக் கருதுகிறார்கள். பலவகையான பழக்கங்களுள் (Habit) ஒன்றாகப் பேச்சையும் இவர்கள் கருதுகிறுர்கள்[1]. 'செந்தமிழ் நாப் பழக்கம்' என்று நம் பெரியவர்கள் குறிப்பிட்டதை நாம் இப்பொழுது நினைவு கூரலாம். அமைப்பு மொழியியலாளர்கள் மொழியை வாய்மொழிக் குறியீடுகள் என்றும் இவற்றின் மூலம் ஒரு சமுதாயக் குழு ஒத்துழைக்கிறதென்றும் இக் குறியீடுகள் இடுகுறித் தன்மையன என்றும் குறிப்பிடுகிறார்கள்[2].

மொழியை அறிவாகப் பார்ப்பது மேலே குறிப்பிட்ட அணுகு முறைக்கு முற்றிலும் மாறானது. ஒரு மொழியைப் பேசுகின்ற மக்களது மொழிஅறிவை விளக்குவதுதான் மாற்றிலக்கணம் என்பது இவர்கள் கூற்று[3]. மாற்றிலக்கணம் (Transformational Generative Grammar) மொழியை முற்றிலும் மாறுபட்ட இக் கோணத்திலிருந்து பார்க்கிறது. மொழி என்பது எண்ணிறந்த வாக்கியங்களைக் கொண்டது. இவ் வாக்கியங்கள் ஒரு குறிபபிட்ட எண்ணிக்கையுள் அடங்கும் விதிகளைக் கொண்டு உருவாக்கப்

படுகின்றன. புதிய புதிய சூழலில் புதிய புதிய வாக்கியங்களை நாம் படைக்கிறோம். அதே போல் புதிய புதிய வாக்கியங்களைப் புதிய புதிய சூழ்லல்களில் கேட்கும்பொழுது அவற்றைப் புரிந்து கொள்ளவும் செய்கிறோம். இந்த ஆற்றலைத்தான் மொழியின் படைப்பாற்றல் (Creative Power) என்று மாற்றிலக்கணக்காரர்கள் (Transformationalists) குறிப்பிடுகிறார்கள். இந்த ஆற்றல்தான் மொழியின் தனித் தன்மையாகவும் மற்றைய செய்திப் பரிமாற்ற முறைகளிலிருந்து வேறுபடுத்திக் காட்டுகிற தன்மையாகவும் விளங்குகிறது.

மாற்றிலக்கணப் போக்கில் மொழியின் தன்மையை ஆராய்ந்து அஃது எழுப்புகிற பிரச்சினையைக் குறிப்பிடுவோம். மொழியில் எண்ணிறந்த வாக்கியங்கள் உள்ளன என்று நாம் முன்பே கூறினோம். இக் கருத்தை மேலும் ஆராய்வோம். மொழி அமைப்பைப்பற்றிப் பேசுபவர்கள் மொழியில் உள்ள வாக்கியங்களைச் சில அமைப்பு வரைகளாகப் (Patterns) பிரித்து விடலாம் என்று கூறுவார்கள்.

வாக்கியத்தின் நீளத்தை நிர்ணயம் செய்தால்தான் வாக்கியங்களைச் சில அமைப்புவரைக்குள் அடக்க முடியும். மொழியில் எந்த ஒரு வாக்கியத்தையும் சுட்டி இதுதான் மொழியில் நீளமான வாக்கியம் என்று கூற முடியாது. அந்த வாக்கியத்தை மேலும் நீட்டிக்க முடியும். வாக்கியம் (1)ஐ எடுத்துக் கொண்டு இக் கருத்தை விளக்க முயற்சி செய்வோம்.

(1) கண்ணன் நேற்று என்னைப் பார்த்தான்

இதை

(2) சென்ற தேர்தலில் வெற்றி பெற்ற கண்ணன் என்னைப் பார்த்தான்

என்றும்,

(3) சென்ற தேர்தலில் வெற்றி பெற்ற கண்ணன் வீட்டில் சோகமாயிருந்த என்னைப் பார்த்தான்.

என்றும் நீட்டிக்க முடியும். இவ்வாறு நீட்டிப்பதற்கு ஒரு வரன்முறை கிடையாது. இதை நாம் ஆங்கிலத்திலும் பார்க்கலாம்.

(4) Chomsky opposed Skinner

(5) Chomsky who revolutionised linguistics opposed Skinner

(6) Chomsky who revolutionised linguistics opposed Skinner the author of verbal behaviour

இதுபோன்று வாக்கியத்தை நீட்டிக்கொண்டே செல்லலாம். ஆனால் நாம் இயல்பாகப் பேசும்பொழுது பயன்படுத்துகின்ற வாக்கியங்களின் நீளத்தையும் எழுதுகின்ற வாக்கியங்களின் நீளத்தையும் குறிப்பிட்டுக் கூறிவிடலாம். நீண்ட வாக்கியங்களை நம் நினைவில் இருத்திப் பொருள் கொள்வது கடினமாகையால் சிறு சிறு வாக்கியங்களை நாம் பேசுகிறோம். ஆனால் எழுதும் பொழுது பேசும் பொழுது தோற்றுவிக்கிற வாக்கியங்களின் நீளத்தைவிட நீண்ட வாக்கியங்களை உருவாக்குகிறோம். நினை வாற்றலின் தன்மையைக் கருதி நாம் மிக நீண்ட வாக்கியங்களை உருவாக்குவதில்லை. வாக்கியத்தின் அளவை நாம் நினைக்கும் அளவிற்கு நீட்டிக்க முடியும். ஒரு முழு நூலைக்கூட ஒரே வாக்கியத்தில் எழுத முடியும். வாக்கியங்களை உருவாக்கவேண்டி யிருக்கிற திறனை நாம் முதலில் பிரித்தறிய வேண்டும். இம் மொழித் திறனை (Linguistic Competence) வாக்கியங்களைப் பயன்படுத்தும் மொழியின் செயலோடு (Linguistic Performance) குழப்பக் கூடாது. இவை இரண்டும் வெவ்வேறானவை.

மொழியில் மொழித் திறனை ஆராய வேண்டும். ஒரு மொழியைப் பேசும் மக்களின் மொழி அறிவை விளக்குவதுதான் மொழியியலின் மையப் பொருள். மொழி அறிவு அல்லது மொழித்திறன் என்பதை முதலில் நாம் விளக்குவோம். மொழியில் எண்ணிறந்த வாக்கியங்கள் உள்ளன என்று நாம் முன்பே சுட்டினோம். ஒரு மொழியைப் பேசும் மக்கள் அம் மொழியில் உள்ள வாக்கியங்களைப் படைக்கும் திறன் படைத்தவர்கள். மொழிக்கு எழுதப்படும் இலக்கணமும் இத்தன்மை உடையதாயிருக்க வேண்டும். வாக்கியங்களுக்கிடையே உள்ள தொடர்பை அம்

மொழி பேசும் மக்கள் உணர்கிறார்கள். இத் தொடர்பையும் இலக்கணம் சுட்டவேண்டும். கவர் பொருள் உணர்த்துகின்ற வாக்கியங்களையும் அம்மொழி பேசும் மக்கள் உணர்கிறார்கள். இத்தகைய வாக்கியங்களுக்கும் இலக்கணம் விளக்கம் அளிக்க வேண்டும். வாக்கியத்திற்கும் அதன் உறுப்புகளுக்குமிடையே உள்ள தொடர்பையும் அவ் வாக்கியத்தின் உறுப்புகளுக்கிடையே காணப்படும் தொடர்பையும் இலக்கணம் விளக்க வேண்டும். மொழி பேசும் மக்கள் இத்திறன் அனைத்தையும் பெற்றிருக் கிறார்கள். மொழியில்—குறிப்பாக மாற்றிலக்கணக் கோட்பாடு— மொழி பேசும் மக்களின் இம் மொழித் திறனை முழுமையாக விளக்க வேண்டும் என்று வற்புறுத்துகிறது[4].

உலகின் பல்வேறு மொழிகளை ஆராய்ந்து மாற்றிலக்கணக் காரர்கள் மொழிகளில் பல பொதுமைகளைக் கண்டார்கள். குறிப்பாக, மாற்று விதிகள் (Transformational Rules) பின்பற்றும் கட்டுப்பாடுகள் (Conditions) பல்வேறு மொழிகளின் தொடரியலையும் ஆராயும்பொழுது தெரிய வருகின்றன. நீக்கல்விதி (Deletion Rule) வாக்கியத்தின் உறுப்பை நீக்கும் பொழுது அத்தகைய உறுப்பு அக அமைப்பில் உள்ளதா என்பதை அடிப்படையாக வைத்துத்தான் செயல்படுகிறது. சான்றாக வாக்கியம் (7)ஐ எடுத்துக் கொள்வோம்.

(7) நேற்றுப் பாடிய பாட்டு நன்றாக இருந்தது. இதன் அக அமைப்பைப் படம் (8) காட்டுகிறது.



புதை வாக்கியத்தில் உள்ள **பாட்டு** என்ற பெயர்த் தொடரை (Noun Phrase) நீக்கல்விதி முதல் வாக்கியத்தில் உள்ள **பாட்டு** என்ற பெயர்த் தொடரை அடிப்படையாகக் கொண்டு நீக்குகிறது. இது தமிழ்மொழிக்கு மட்டுமின்றி மற்ற மொழிகளுக்கும் பொருந்தும். இன்னொரு முக்கிய விதி இயக்கு விதி (Movement Rule). இவ் விதியும் பல்வேறு கட்டுப்பாடுகளைப் பின்பற்ற வேண்டியிருக்கிறது. இவற்றுள் ஒன்றை நாம் இங்கு விளக்குவோம். இணை வாக்கியக் கட்டுப்பாட்டை (Coordinate Structure Constraint) எடுத்துக்கொள்வோம். உறுப்பு வாக்கியங்களுக்குள் இருக்கும் எந்த உறுப்பையும் இயக்குவிதி அவ் வாக்கியங்களின் பரப்பைத் தாண்டி நகர்த்த இயலாது என்பது இக் கட்டுப்பாடு.[5] வாக்கியங்கள் (9-10)ஐ எடுத்துக் கொள்வோம்

(9) அமிர்தலிங்கமும் **அவருடைய தோழர்களும்** இந்திரா காந்தியுடன் பேசினார்கள்.

(10) தி. மு. க.வும் **அ. தி. மு. க.வும்** கடை அடைப்பில் கலந்து கொண்டன. மேலே கூறிய கட்டுப்பாட்டை மீறியதால் வாக்கியங்கள் (11)ம் (12)ம் வழுவாகின்றன.

*(11) அமிர்தலிங்கமும் இந்திரா காந்தியுடன் **அவருடைய தோழர்களும்** பேசினார்கள்.

*(12) தி. மு. க.வும் கடை அடைப்பில் **அ. தி. மு. க.வும்** கலந்து கொண்டன. இஃது ஆங்கிலத்திற்கும் பொருந்தும்.

(13) John was taking *bread and butter*

(14) *What* was John taking ?

*(15) What was John taking bread and— ?

இதுபோன்ற கட்டுப்பாடு பல்வேறு மொழிகளிலும் செயற்படுவதை மாற்றிலக்கணக்காரர்கள் சுட்டிக் காட்டியிருக்கிறார்கள்.

இப் பிரச்சினையை மேலும் தொடர்வதற்குமுன் கோட்பாட்டின் தன்மையைப்பற்றிய வேறுபாட்டைக் குறிப்பிடுவோம். கோட்பாடு என்பது ஒரு பொருளை அல்லது நிகழ்வை (Phenomenon) புரிந்து கொள்ளப் பயன்படும் கருவி மட்டும்தான் என்று பார்ப்பது ஒருவிதப் பார்வை. கோட்பாடு என்பது பொருளை அல்லது நிகழ்வை அறிந்துகொள்ளப் பயன்படும் கருவி மட்டுமன்று; இது மனத்தோடும் தொடர்புடையது என்பது மற்றொரு பார்வை. மாற்றிலக்கணம் விளக்கும் கோட்பாடு மனத்தோடு தொடர்புடையது. வேறு முறையில் சொன்னால் நாம் மேலே குறிப்பிட்ட கட்டுப்பாடுகள் எல்லாம் மனத்தோடு சம்பந்தப்பட்டவை. நம்முடைய மொழி அறிவைப் பிரதிபலிப்பவை மாற்றிலக்கண விதிகளும் கோட்பாடுகளும்.

அமைப்பு மொழியியலாளர்களுள் சிலர் தாங்கள் மொழியின் அமைப்பை விவரிக்கப் பயன்படுத்தும் மொழியியல் கருத்துகளும் கோட்பாடுகளும் கருவி போன்றவை என்று கருதுகிறார்கள். மொழியின் அமைப்பைப் புரிந்துகொள்ளப் பயன்படுபவை இவை. இவற்றிற்கு இதற்கு மேல் எவ்வித உளவியல் முக்கியத்துவமும் இல்லை என்பது இவர்கள் வாதம். ஆனால் மாற்றிலக்கணக் காரர்கள் இக் கருத்தை ஏற்றுக்கொள்வதில்லை. மாற்றிலக்கணத்தின் கோட்பாடுகளும் கண்டுபிடிப்புகளும் உளவியலோடு தொடர்புடையவை என்று இவர்கள் வாதிடுகிறார்கள். சோம்ஸ்கி ஒரு படி மேல் சென்று மொழியியலை உளவியலின் (Cognitive Psychology) ஒரு பகுதி என்றே குறிப்பிடுகிறார். மொழியியலுக்கும் உளவியலுக்கும் உள்ள உறவை இது தெளிவுபடுத்துகிறது.

சோம்ஸ்கியின் கருத்தை நாம் முழுமையாக ஏற்றுக்கொண்டால் ஏற்படும் விளைவுகளை நாம் இப்பொழுது பார்ப்போம். மாற்றிலக் கணக்காரர்கள் சில பொதுமையான கட்டுப்பாடுகளை (Universal Constraints) மாற்று விதிகள் பின்பற்றுவதாக உலகின் பல்வேறு மொழிகளை ஆராய்ந்து சுட்டிக்காட்டிக்கொண்டிருக்கிறார்கள். மாற்றிலக்கணம் சுட்டுகின்ற பொதுமைகளையும் இப் பொதுமைகள் மனத்தோடு தொடர்புடையவை என்ற கருத்தையும் நாம் ஏற்றுக் கொண்டால் ஏற்படும் விளைவுகளை இப்பொழுது விளக்குவோம். அனுபவ அடிப்படையில் நாம் மொழியைக் கற்கிறோம் என்ற

கருத்தை ஏற்றுக்கொண்டால் சில பிரச்சினைகளுக்கு விளக்கம் கொடுப்பதில் சிக்கல் ஏற்படும். உலகின் பல்வேறு மொழிகளிலும் பொதுவாகக் காணப்படும் கட்டுப்பாடுகளை நாம் எப்படிக் கற்றோம்? ஆங்கில மொழியைக் கற்கின்ற குழந்தையும் தமிழைக் கற்கின்ற குழந்தையும் ஜப்பானிய மொழியைக் கற்கின்ற குழந்தையும் எவ்வாறு சில பொதுமைக் கட்டுப்பாடுகளைக் கற்றன? ஒவ்வொரு மொழியைக் கற்கின்ற குழந்தைக்கும் ஒவ்வொரு விதச் சூழலும் அனுபவமும் கிடைக்கின்றன. இருப்பினும் காணப்படுகின்ற பொதுமைகளுக்கு மொழியியல் அளிக்கும் விளக்கம் என்ன? இப் பொதுமைகளைக் குழந்தைகளுக்கு யாரும் கற்றுக்கொடுப்பதில்லை. பல்வேறு சூழல்களிலும் அனுபவத்திலும் பலவகைப்பட்ட மொழிகளைக் கற்றவர்களுக்கிடையே காணப்படுகின்ற மொழிப் பொதுமைகளுக்கு நமக்குக் கிடைக்கும் விளக்கம் என்ன?

அமைப்பு மொழியியலாளர்கள் ஒவ்வொரு மொழியும் அதற்கதற்கென்று ஓர் அமைப்பைக் கொண்டுள்ளது என்று கூறுகிறார்கள். இரு மொழிகளுக்கிடையே ஒற்றுமை சில காணப்பட்டால் அவற்றைப் பின்வரும் இரு முறைகளில் ஏதேனும் ஒன்றின் மூலம் விளக்கலாம். சான்றாக பர்ஜி (Parji) என்ற மொழிக்கும் கோயா (Koya) என்ற மொழிக்கும் சில மொழியியல் கூறுகள் ஒன்றாக இருந்தால் அவற்றை மொழி இன அடிப்படையில் விளக்க இயலும். இவ்விரு மொழிகளும் திராவிட இனத்தைச் சார்ந்ததால் இவற்றிற்கிடையே ஒற்றுமை காணப்படுகிறது. மொழிகள் ஓர் இனத்தைச் சார்ந்தவையாக இருக்கும் பொழுது சில பொதுமைக் கூறுகளை அவை பெற்றிருக்கும் என்பது இதனால் தெளிவாகும். ஒரே இனத்தைச் சாராத மொழிகளுக்கிடையேயும் சில மொழியியல் கூறுகள் ஒன்றாக இருப்பதை நாம் பார்க்க முடியும். கன்னட மொழிக்கும் மராத்தி மொழிக்கும் சில மொழியியல் கூறுகள் ஒன்றாக இருப்பதை நாம் காணலாம். இவ்வாறே தமிழுக்கும் சௌராட்டிர மொழிக்கும் ஒற்றுமைகள் இருப்பதை மொழியியலாளர்கள் சுட்டிக் காட்டியிருக்கிறார்கள்[7]. கன்னடமும் மராத்தியும் ஒரே இன மொழிகள் அல்ல. தமிழும் சௌராட்டிர மொழியும் வெவ்வேறான இனத்தைச் சேர்ந்தவை. தமிழும் கன்னடமும் திராவிட இனத்தையும் மராத்தியும்

சௌராட்டிர மொழியும் இந்தோ-ஆரிய இனத்தையும் சேர்ந்தவை. இம் மொழிகளுக்கிடையே காணப்படும் மொழிக் கூறுகளில் காணப்படும் ஒற்றுமையை விளக்குவது எப்படி ?

இரு வேறு இனத்தைச் சார்ந்த மொழிகளைப் பேசும் மக்கள் அருகருகே வாழ்வதை நம் நாட்டின் பல்வேறு இடங்களில் காணலாம் கர்நாடக மாநில எல்லைப்புறத்தில் கன்னட மொழி பேசுகின்ற மக்களும் மராத்திய மொழி பேசும் மக்களும் அருகருகே வாழ்கிறார்கள். இவர்களிடையே தொடர்புண்டு. தமிழகத்தில் சௌராட்டிர மொழி பேசும் மக்கள் தமிழ் பேசும் பெரும் பான்மை மக்களுடன் வாழ்கிறார்கள். ஆகையால் இவர்கள் பேசும் சௌராட்டிர மொழியில் தமிழ்மொழியின் கூறுகள் சில காணப் படுகின்றன. மொழிகள் வெவ்வேறு இனத்தைச் சேர்ந்தவையாக இருப்பினும் அவற்றைப் பேசும் மக்கள் ஒரே நிலப்பரப்பிலோ அருகருகே வாழும் பொழுதோ ஒரு மொழியின் கூறுகள் இன்னொரு மொழியில் காணப்படுவதுண்டு என்பது இதனால் தெளிவாகும். மொழிகள் பேசும் மக்களின் தொடர்பால் மொழிக் கூறுகள் ஒரு மொழியிலிருந்து இன்னொரு மொழிக்குச் செல்வதுண்டு. மொழிகள் ஒவ்வொன்றும் அதற்குரிய அமைப்பை உடையவாயினும் இரு மொழிகள் அருகருகே பேசப்படும் பொழுது ஒரு மொழியின் கூறுகள் இன்னொரு மொழியில் காணப்படுவதுண்டு. அமைப்பு மொழியியலின் கோட்பாட்டு வரம்பிற்குள் இவ்வொற்றுமைகளுக்கு விளக்கம் அளித்துவிட முடியும்.

மாற்றிலக்கணத்தின் விதிகள் சில பொதுவான கட்டுப் பாடுகளை எல்லா மொழிகளிலும் பின்பற்றுகின்றன என்று குறிப் பிட்டோம். தமிழும் ஆங்கிலமும் இணை வாக்கியக் கட்டுப்பாட்டைப் பின்பற்றுவதை முன்பு குறிப்பிட்டோம். தமிழ் திராவிட இனத்தைச் சேர்ந்த மொழி ; ஆங்கிலம் இந்தோ-ஐரோப்பிய இனத்தைச் சேர்ந்த மொழி. இன அடிப்படையில் இம் மொழிகளுக்கிடையே ஒற்றுமை யிருப்பதாகக் கூற முடியாது. தமிழ் பேசும் மக்களும் ஆங்கிலம் பேசும் மக்களும் நிலப்பரப்பால் அருகருகே இல்லை. இவ்விரு மொழிகளும் பின்பற்றும் பொதுவான கட்டுப்பாட்டை அமைப்பு மொழியில் கோட்பாட்டு வரம்பிற்குள் விளக்குவது எப்படி ?

தமிழும் பிரெஞ்சு மொழியும் பொதுவான கட்டுப்பாட்டைப் பின்பற்றுவதை எப்படி விளக்குவது ?

அமைப்பு மொழியியலின் கோட்பாட்டு வரம்பிற்குள் விளக்கம் அளிப்பது கடினமாக அமைகிறது. மொழிகளைப் பல்வேறு சூழல்களில் பல்வேறு சமுதாயப் பின்னணியில் கற்றுக்கொள்ளும் குழந்தைகள் பொதுவான கட்டுப்பாடுகளைக் கற்றுக்கொள்வது எப்படி ? மொழி கற்றல் என்பது பிறவற்றிலிருந்து வேறுபடுகிறது. குழந்தை மொழியைக் கற்பதற்கு எவ்விதச் சிரமமும் மேற்கொள்வதில்லை. அஃது எந்தச் சமுதாயத்தில் வளர்கிறதோ அச்சமுதாயத்தின் மொழியை எளிமையாகக் கற்றுக்கொள்கிறது. குழந்தை தனது ஒன்றரை வயதில் மொழி கற்பதைத் தொடங்கி ஐந்து வயதில் மொழியைப் பெரும்பாலும் கற்றுவிடுவதாகச் சில உள மொழியியலாளர்கள் கருதுகிறார்கள். ஐந்து வயதை எட்டுகிற குழந்தை கற்ற மொழி மூலம் தான் உணர்த்த விரும்புவதைத் தங்கு தடையின்றி வெளியிடுகிறது. தன்னைச் சுற்றியுள்ள தன் வயதையொத்த குழந்தைகளிடமோ தன்னோடு சம்பந்தப்பட்ட பெரியவர்களிடமோ மொழிமூலம் தான் நினைப்பதை உணர்த்துகிறது. அதுபோல் அவர்கள் வெளியிடுகின்ற கருத்தை எளிதில் புரிந்து கொள்ளவும் செய்கிறது. அச் சூழலில் குழந்தைக்கு மொழி இயற்கையாக வருகிறது. மற்ற அறிவுத் துறைகளைக் கற்பதிலிருந்து மொழி வேறுபடுகிறது.

குழந்தைகள் மொழி கற்பதில் ஓர் ஒழுங்குமுறை இருப்பதாக உள மொழியியல் அறிஞர்கள் (Psycholinguists) ஆராய்ந்து கூறியிருக்கிறார்கள். மொழியைக் கற்பது என்பது மொழியின் சொற்களைக் கற்பது என்று பொருள் அல்ல. குழந்தை மொழியைக் கற்கிற ஒவ்வொரு நிலையிலும் ஓர் இலக்கணம் உருவாகிறது. குழந்தையின் மொழி கற்றல் வளர வளர இவ்விலக்கணமும் மாற்றம் அடைகிறது. ஐந்து வயதை நெருங்குகிற குழந்தையின் இலக்கணம் பெரியவர்களின் இலக்கணத்தோடு பெரும்பகுதி ஒத்திருக்கிறது. பல்வேறு மொழிகளில் பல்வேறு நிலைகளில் குழந்தைகள் உருவாக்குகின்ற இலக்கணங்களுக்கிடையே ஒற்றுமைகள்

காணப்படுவதாக உளமொழியியல் அறிஞர்கள் குறிப்பிடுகிறார்கள். இதை ஏற்றுக்கொண்டால் பல்வேறு மொழிகளைப் பல்வேறு சூழல்களில் கற்ற குழந்தைகளின் இலக்கணங்களிலும் இலக்கண வளர்ச்சிகளிலும் காணப்படுகின்ற பொதுமைகளுக்குக் கொடுக்கும் விளக்கம் என்ன? அமைப்பு மொழியியல் அடிப்படையில் இங்கு விளக்கம் கொடுப்பது கடினமாக ஆகிவிடுகிறது.

மாற்றிலக்கணக்காரர்கள் இதற்கு உள்ளுறை அறிவை (Innate knowledge) அடிப்படையாகக் கொண்டு விளக்கம் அளிக்கிறார்கள். மொழிப் பொதுமைகளாகக் (Language Universals) காட்டப் படுபவை சூழல் அடிப்படையில் கற்கப்பட்டவை அல்ல என்று நாம் முன்பு கூறினோம். இதை விளக்க எவ்வகையான கருதுகோளை முன் வைப்பது? மாற்றிலக்கணக்காரர்கள் மனித உடலமைப்பை அடிப்படையாகக் கொள்ளலாம் என்று கூறுகிறார்கள். குழந்தை பிறக்கும்பொழுதே அம் மொழிப் பொதுமைகளை அறிந்திருக்கிறது என்று இவர்கள் கூறுகிறார்கள். நரம்பியல் அடிப்படையிலான விளக்கத்தைத் தேடுவதோ மூளையின் அமைப்போடு இவற்றைத் தொடர்புபடுத்தி ஆராய்ச்சியை மேற்கொள்வதோ பயனுள்ளதாக அமையும் என்று மாற்றிலக்கணக்காரர்கள் நம்புகிறார்கள். இங்கு மொழியியல் மட்டும் எவ்வித முடிபுகளையும் அறுதியிட்டுக் கூற முடியாது. மொழி வழியே உடலியல் (Biology) சம்பந்தப்பட்ட கருதுகோள் விளக்கமாக அமையலாம். இக் கருதுகோள் சரியா தவறா என்பதை மொழியியல் மட்டுமின்றி உளவியலும் உடலியலும் (குறிப்பாக மூளையின் அமைப்போடும் நரம்பியலோடும் தொடர் புடைய உடலியல்) தங்களுடைய ஆராய்ச்சியை இப் பக்கம் திருப்பிப் பார்க்க வேண்டும். இங்கு மொழியை மையப்படுத்தி மொழியிய லாளர்களும் உளவியலாளர்களும் உடலியலாளர்களும் ஆராய்ச்சியை மேற்கொள்ளலாம்.

குறிப்பு

1. A language is a complex system of habits (Hockett (1958 : 137)

2. A language is a system of arbitrary vocal symbols by means of which a social group cooperates (Bloch and Trager 1942 : 5)

3. ......a generative grammar attempts to specify what the speaker actually knows......(Chomsky) 1965 : 8)

4. It attempts to characterize in the most neutral possible terms the knowledge of the language that provides the basis for actual use of language by a speaker—hearer (Chomsky : 1965 : 9)

5. Coordinate structure constraint : No conjunct in a coordinate structure may be moved, nor may any element in a conjunct be moved (quoted from Newmeyer 1980 : 178).

6. எல்லா அமைப்பு மொழியியலாளர்களும் இக் கருத்தைக் கொண்டிருக்கவில்லை. ஹேரிஸ் (Harris) போன்ற வர்கள்தாம் இக் கருத்தைக் கொண்டிருந்தார்கள்.

7. Pandit (1974)

## REFERENCES

(1) Bloch, B. and G. L. Trager (1942) *Outline of linguistic analysis*, Waverly Press : Baltimore.

(2) Chomsky, N. (1965) *Aspects of the theory o. syntax* MIT Press : Cambridge, Mass.

(3) Hockett, C. F. (1958) *A course in modern linguistics* The Macmillan company : New York.

(4) Newmeyer, F. J. (1980) *Linguistic theory in America* Academic Press ; New York.

(5) Pandit, P. B. (1974) 'Bilingual's grammar : a case study of Tamil—Saurashtri number names' in *International Journal of Dravidian Linguistics* 3. 1 pp. 181—197.

# 9. சிவபுராண யாப்பு

[பேராசிரியர் அடிகளாசிரியர்]

தோற்றுவாய :

திருவாசகத்தில் சிவபுராணப் பாட்டு, தொல்காப்பியர் கூறியுள்ள எழுநிலத்தெழுந்த செய்யுள்களில் பாட்டு என்னும் செய்யுள் வகையைச் சார்ந்தது. இது தொண்ணூற்றைந்து அடிகளை உடையது. இப்பாட்டில் ஈற்றடிமட்டும் முச்சீர் பெற்ற சிந்தடியாகும். ஏனைய அடிகளெல்லாம் நாற்சீர் பெற்ற அளவடிகளே.

சிவபுராண யாப்பினைப்பற்றிய பலர் கருத்து :

இச் சிவபுராணத்தைப் பல திருவாசகப் பிரதிகள் 'சிவபுராணத்தகவல்' என்றே குறிப்பிடுகின்றன. அன்றித் திருவாதவூரர் புராணமும் 'அகவல்' என்றே குறிப்பிடுகின்றது. திருவாசகப் பதிக வரிசை கூறும் வெண்பா அந்தாதியும்,

"திருவகவல் நான்கின் றிறங்கேளாய் நெஞ்சே"

என்று சிவபுராணம் முதலிய நான்கினையும் 'திரு அகவல்' என்றே கூறுகின்றது.

ஆனால், வேறு சில அறிஞர் இப் பாட்டு அகவல் அன்று; கலிவெண்பாவே ஆகும் என்று கூறுகின்றனர்.

சிவபுராணம் அகவலும் அன்று; கலிவெண்பாவும் அன்று :

இச் சிவபுராணம் முற்றிலும் இயற்சீர் விகற்பத்தால் வந்த வெண்டளைகளையும், வெண்சீர் ஒன்றிவந்த வெண்டளைகளையும்,

பெற்று, ஈற்றடி பிறப்பு என்னும் அசைச்சீரால் முடிதலின் இது அகவலன்று என்பது தேற்றமாகும்.

ஆனால், இச் சிவபுராணப் பாட்டில் அடிகளார் இறைவனை உளங்கனிய அழைத்துப் (அகவிப்) புகழ்கின்றார். இவ்வாறு அழைத்துப் பேசுகின்றமையின் முன்னோர் திருவாசகத்துள் இப் பகுதியை அகவல் என்று கொண்டனரோ என்பதும் கருத வேண்டியுள்ளது என்பர். தஞ்சாவூர் பள்ளி அகரப் பேரறிஞர் நீ. கந்தசாமிப் பிள்ளை அவர்கள் (திருவாசகப்பதிப்பு). கூறுவது கருதத்தக்கதொன்றாகும்: 'அகவல்' என்பது அழைத்தலுமாகும்'' என்று பிங்கல நிகண்டு கூறுவதாலும், சங்க இலக்கியங்களில் அகவல் என்பது அழைத்தற் பொருளில் வருதலானும், தொல்காப்பியர் 'ஏனையொன்றே தேவர்ப் பராஅய முன்னிலைக் கண்ணே'' (தொல். செய். 133) என்னும் நூற்பாவால் தெய்வத்தை முன்னிலைப் படுத்தி அழைத்துப் பரவும் வழக்கத்தைக் குறிப்பிடுதலானும், தெய்வத் திருநூலாகிய திருமுருகாற்றுப்படை,

"... ... ... காண்டக
முந்துநீ கண்டுழி முகனமர்ந் தேத்திக்
கைதொழூஉப் பரவிக் காலுற வணங்கி
... ... ... ...
அறுவர் பயந்த ஆறமர் செல்வ!
ஆல்கெழு கடவுட் புதல்வ! மால்வரை
மலைமகள் மகனே! மாற்றோர் கூற்றே!
... ... ... ...
போர்மிகு பொருந! குரிசில்! எனப்பல
யான்அறி அளவையின் ஏத்தி" (250-276)

என்று கூறும் பகுதியால் அவ் வழக்கத்தைத் தெளிவாகப் புலப் படுத்துதலானும், இச் சிவபுராணம் இறைவனை முன்னிலைப்படுத்தி அழைத்துப் பரவும் பொருளால் அகவலாகும்; யாப்பால் அகவ லன்று.''

கட்டுவிச்சி தெய்வத்தை அழைத்துப் பரவும் பாட்டிற்கு அகவல் என்றே பெயரிருத்தலை.

''அகவன் மகளே பாடுக பாட்டே'' (குறுந். 23)

என்பதால் அறிந்துகொள்ளலாம்.

இச் சிவபுராணம் அகவல் போல் அடிமிமிர்த்து வருதலால், சிலர் அகவலென்றே மயங்கக் கருதினர் போலும். அடுத்துச் சிவ புராணப் பாட்டு கலிவெண்பாவா என்பதையும் பார்ப்போம்.

''அந்நிலை மருங்கின் அறமுத லாகிய
மும்முதற் பொருட்கும் உரிய என்ப''
(தொல். செய். 102)

''வாழ்த்தியல் வகையே நாற்பாக்கு முரித்தே''
(தொல். செய். 105)

என்னும் தொல்காப்பிய நூற்பாவின் பொதுவிதிப்படி, ஆசிரியம் வஞ்சி, வெண்பா, கலிப்பா என்னும் நான்கு பாக்களும் அறம் பொருள் இன்பம் என்னும் மூன்று முதற்பொருளிலும், வாழ்த்தியற் பொருளிலும் வரும்.

''நாடக வழக்கினும் உலகியல் வழக்கினும்
பாடல் சான்ற புலனெறி வழக்கம்
கலியே பரிபாட் டாயிரு பாவினும்
உரிய தாகும் என்மனார் புலவர்'' (56)

என்று கூறியுள்ள சிறப்புவிதியின்படி, அகத்திணை பற்றிய புலனெறி வழக்கிற்குக் கலிப்பாவும் பரிபாடலும் சிறந்தனவாம்.

இளம்பூரணர் செய்யுளியல் 126ஆம் நூற்பாவுரையில்,

''இருவயி னொத்தும் ஒவ்வா இயலினும்
தெரியிழை மகளிரொடு மைந்தரிடை வருஉம்
கலப்பே யாயினும் புலப்பே யாயினும்
ஐந்திணை மரபின் அறிவுவரத் தோன்றிப்

பொலிவொடு புணர்ந்த பொருட்டிற முடையது
கலியெனப் படுஉங் காட்சித் தாகும்''

என்று அகத்தியனார் ஓதுதலின் கலிப்பா அகப்பொருளென வழங்கும்'' என உரைத்தலால், கலிப்பா அகப்பொருட்கே சிறந்த தென்று தெரிகின்றது.

மேலும், தொல்காப்பியர் செய்யுளியலில் கலிப்பாவிற்கு இலக்கணம் கூறும்பொழுது கலிப்பா அகப்பொருள்பற்றி வரும் என்ற அதிகாரம் எல்லாக் கலிப்பாவிற்கும் வருதலால், அவ்வதிகாரத்தை வண்ணக வொத்தாழிசைக் கலிப்பாவிற்கும் அதன் இழிபாகிய கொச்சக ஒருபோகிற்கும் அம்போதரங்கத்திற்கும் மாற்ற வேண்டி. அம் மூன்றும் தேவர்ப்பராவும் பொருளில் வரும் (செய். 133) என்று கூறியுள்ளார்.

அவ்வாறு கூறவே, ஏனைய கலிப்பாக்களெல்லாம் முன்னைய விதிப்படி அகப்பொருளேபற்றி வரும் என்பதாயிற்று. எனவே, அவற்றுள் ஒன்றாகிய கலிவெண்பாவும் அகப்பொருள்பற்றி வருவதாயிற்று.

மேற்கூறியவாறு அகப்பொருள்பற்றிவரும் கலிப்பாக்களுள் கலிவெண்பாவிற்குத் தொல்காப்பியர்,

''ஒருபொருள் நுதலிய வெள்ளடி யியலால்
திரிபின்றி முடிவது கலிவெண் பாட்டே'' (செய். 147)

என்னும் நூற்பாவால் இலக்கணம் கூறியுள்ளார்.

இந் நூற்பாவிற்கு இளம்பூரனர், ''ஈற்றடி யளவும் ஒரு பொருளைக் குறித்து, வெள்ளடி யியலால் திரிபின்றி முடிவது கலிவெண் பாட்டாம்'' என்று உரை எழுதி ''மரையா மரல்கவர''

---

குறிப்பு: வச்சணந்திமாலையும் ''தூய, அகப்பொருண்மே லன்றி அருங்கலிகள் வாரா'' என்று (44) கூறும்.

(6) என்ற கலித்தொகைப் பாட்டினை எடுத்துக்காட்டி, இது வெண்டளையான் வந்த வெண்கலிப்பா என்றனர்.

அவர் மேலும் ''அஃதேல், இது நெடுவெண்பாட்டிற்கு ஓதிய இலக்கணத்தால் வருதலில் பஃறொடை வெண்பாவாம்; இதனை வெண்கலிப்பா என்றதென்னை எனின், என்று வினாவிககொண்டு, புணர்தல், பிரிதல், இருத்தல், இரங்கல், ஊடல் எனவும், கைக்கிளை, பெருந்திணை எனவும் சொல்லப்பட்ட காமப்பொருள் ஏழனுள்ளும் யாதானுமொரு பொருளைக் குறித்து ஏனைக் கலிப்பாக்கள்போலத் தரவும் தாழிசையும் தனித்தனிப் பொருளாக்கிச் சுரிதகத்தால் தொகுத்துவரு நிலைமைத்தன்றித் திரிபின்றி முடிவதனைக் கலிவெண்பா எனவும், புறப்பொருட்கண் வரும் வெண்பாக்களைப் பஃறொடை வெண்பா எனவும் கூறுதல் இவ்வாசிரியர் கருத்தென்க'' என்று கூறியுள்ளார்.

இவர் இவ்வாறு கூறுவதைக் கருதினால், கலிவெண்பா ஒரு பொருள் நுதலிய அகப்பொருள் மேல்தான் வரும் எனபது புலனாகின்றது. கலித்தொகையில் வந்துள்ள கலிவெண்பா எல்லாம் அகப்பொருட் பாட்டாகவே உள்ளன.

இச் சிவபுராணம் முற்றிலும் வெண்பா யாப்பாகவே வந்து இறுதி வெண்பா இயலால் முடிந்தாலும், அகப்பொருள் மேலதாய் வாராமல், புறப்பொருட்கண் தெய்வத்தை முன்னிலைக்கண் வைத்துப் பரவும் துறையில் வந்துள்ளதால் கலிவெண்பா அன்று; இஃது ஒருவகை வெண்பா யாப்பினை உடைய பாட்டாகும் என்றே கருத வேண்டியுள்ளது.

இச் சிவபுராணம் கலிவெண்பா அன்றாயின், ஒருவகை வெண்பாவே ஆயின், இஃது எந்தவகையான வெண்பாவின்பாற்படும் என்று வினா எழுகின்றது. அவ் வினாவிற்கு விடையைக் கீழே தருகின்றேன்.

சிவ புராணம் அறுவகை வெண்பாவுள் செய்யுள் வெண்பா என்பது :

தொல்காப்பியர் செய்யுளியலில் வெண்பாவகைகளை

"நெடுவெண் பாட்டே குறுவெண் பாட்டே
கைக்கிளை பரிபாட் டங்கதஞ் செய்யுளோடு
ஒத்தவை யெல்லாம் வெண்பா யாப்பின" (114)

என்ற நூற்பாவினால் கூறியுள்ளார். "நெடுவெண் பாட்டும் குறு வெண் பாட்டும் கைக்கிளையும் பரிபாடலும் அங்கதமும் செய்யுளும் ஆகிய ஆறும் தம்மின் ஒத்து வெண்பா யாப்பினவாய் வரும்" என்பது மேல் நூற்பாவின் பொருளாகும்.

இவ்வாறு மேற்கூறப்பட்டுள்ள அறுவகை வெண்பாக்களில் செய்யுள் வெண்பாவை அங்கதத்தின் பின் வைத்து ஆசிரியர் ஓதி யுள்ள முறையை அறிஞர் கருதி உணர்க.

இந் நூற்பாவில் நிறுத்த முறையானே அங்கதவெண்பாவை உணர்த்திய பின்னர், செய்யுள் வெண்பாவின் சிறப்பிலக்கணத்தை ஆசிரியர் கீழ்வருமாறு ஓதுகின்றார் :

"செய்யுள் தாமே யிரண்டென மொழிப"

"புகழொடும் பொருளொடும் புணர்ந்தன் றாயின்
செவியுறைச் செய்யுள் என்மனார் புலவர்"

"வசையொடும் நசையொடும் புணர்ந்தன் றாயின்
அங்கதச் செய்யுள் என்மனார் புலவர்"
(செய். 123, 124, 125)

என்பவை அந் நூற்பாக்களாகும்.

"அறுவகை வெண்பாக்களுள் ஈற்றிற் கூறிய செய்யுள் வெண்பாத்தாமே இரண்டு வகை எனக் கூறுவர் புலவர்" (123)

"ஒரு தலைவனைப் புகழ்ந்து கூறும் புகழுரையொடும் அவ னுக்கு அறிவுறுத்தும் உண்மைப் பொருளொடும் கூடியதாக வரின், அஃது அத் தலைவனுடைய செவியில் அறிவுறுத்தும் செவியுறைச் செய்யுள் வெண்பாவாகும்" (124)

குறிப்பு :— இது "பொங்குதலின்றி" (செய். 110) என்ற அடிகளால் கூறப்பட்ட செவியறிவுறூஉவில் வேறுபட்டதென்க.

''நண்பாயிருப்பார் தீநெறி ஒழுகின் அவரைத் திருத்துதற்காக இடித்துரை கூறும் வசையொடும், அவர்மேல் தமக்குள்ள பற்றினைப் புலப்படுத்தும் நகை மொழியொடும், கூடிவரின் அங்கதச் செய்யுள் வெண்பா என்பர் புலவர்'' (125)

குறிப்பு :—இது, மேற்கூறிய செம்பொருள், கரந்தது என்ற இருவகை அங்கதங்களினும் வேறுபட்டதென்க. அவை நகை யின்றிக் கூறப்படுவன, இது நகையுடன் கூறப்படுவதென்று வேறு பாடறிக.

தொல்காப்பியர் ''செய்யுள்தாமே இரண்டென மொழிப'' (123) எனக் கூறியதன்றி, அவ்விரண்டிற்கும் செய்யுள் என்னும் சொல் லைப் பெய்து, செவியுறைச் செய்யுள், அங்கதச் செய்யுள் என ஓதியுள்ள கருத்தினையும் ஓர்ந்துணர்க.

தொல்காப்பியர் அளவியல் என்னும் உறுப்பில் மேலே கூறி யுள்ள பாக்களுக்கு அளவு கூறுமிடத்தே நெடுவெண்பாட்டுப் பன்னி ரண்டடிகாறும் வரும் என்றும், குறுவெண்பாட்டு இரண்டடியாய் வரும் என்றும், அங்கத வெண்பாவிற்குச் சிறுமை இரண்டடியாயும் பெருமை பன்னிரண்டடியாயும் வரும் என்றும், ஆனால் கலிவெண்பா, கைக்கிளை வெண்பா, செய்யுள் வெண்பா, செவியறிவுறூஉ, வாயுறை வாழ்த்து, புறநிலை வாழ்த்து என்னும் இவற்றிற்கு அடி வரையறை கூறப்படா; பொருள் முடியுங்காறும் வேண்டிய அடி களைப் பெற்று வருமென்றும் கூறுகிறார். இங்கே செய்யுள் வெண் பாவிற்கு அடிவரையறை இல்லை என்று கூறப்படுவதால் நெடுவெண் பாவிற்கோதிய பன்னிரண்டடிக்கு மேல் பொருள் முடியுங்காறும் வேண்டிய அடியால் அது வரப்பெறும் என்பதாயிற்று.

**செய்யுள் வெண்பா உரையாசிரியர்களால் மறைக்கப்பட்டதாயிற்று:**

தொல்காப்பியர் செய்யுளியல் 114, 123, 124, 125, 153 என்னும் ஐந்து நூற்பாக்களால் எடுத்தோதிய செய்யுள் வெண்பா வின் இலக்கணத்தை இளம்பூரணரும் நச்சினார்க்கினியரும் மேற் கண்ட நூற்பாக்களுக்கு வேறு உரை கூறி மறைத்தே விட்டனர்.

பேராசிரியர் அம் மறைப்பைத் தம் மறுப்பினால் புலப்படுத்தினர் :

ஆனால், பேராசிரியர் இளம்பூரணரைப் போலவே மேற்கண்ட நூற்பாக்களுக்கு வேறு உரை கூறினாலும், தம் மறுப்புரை ஒன்றால் செய்யுள் வெண்பா என ஒன்றிருந்தது என்பதைப் புலப்படுத்தி விட்டார். அரிய செய்தி ஒன்றினைத் தம் மறுப்புரையால் வெளிப் படுத்திவிட்ட அவர்க்கு நாம் நன்றி செலுத்தக் கடமைப்பட்டுள்ளோம்.

அவர் மறுப்புரை வருமாறு :

''அங்கதச் செய்யுள், என்பது பண்புத் தொகை. உம்மைத் தொகை என்பார் செய்யுள் என்பதும் வேறு என்ப. அதற்கு விடை முன்னர்ச் சொல்லுதும்'' என்று 'நெடுவெண் பாட்டே' (பேரா. செய். 118) என்னும் நூற்பாவுரையில் கூறி, ''செய்யுள் தாமே யிரண்டென மொழிப'' (பேரா. செய். 127) என்னும் நூற்பா வுரையில்,

இனி ஒருவன் உரை :—''இவற்றுள் தொகைச் சூத்திரத்துள் 'கைக்கிளை பரிபாட் டங்கதஞ் செய்யுள்' எனப் பாடம் ஓதி அங்கத மும் செய்யுளுமென இரண்டாக நிறுத்தான் ; நிறுத்த முறையானே அங்கதம் உணர்த்திச் செய்யுள் உணர்த்திய செய்யுள் தாமே இரண் டென மொழிப என விதந்தான் என்பது'' என்று அவ்வுரையைக் கூறிக்கொண்டு, மறுப்புரை கூறுகின்றார்.

மறுப்புரை :

அற்றன்று ; எல்லாப் பாட்டும் செய்யுள் எனப்படுதலின் அவற்றுள் ஒன்றனையே செய்யுள் எனல் ஆகாது;

அல்லதூஉம், ''அங்கதச் செய்யுள் என்மனார் புலவர்'' (தொல். செய் பேரா. 129) என இனி வருகின்ற சூத்திரத்து ஓதுமாதலான் இவையும் (இவ்விரண்டும்) அங்கதச் செய்யுளே. மேலைச் சூத்திரத் துள்ளும் (செய். பேரா. 118) அங்கதச் செய்யுள் என்பதே பாடம் என்பது. அதனாற் (அங்கதச் செய்யுள் என்மனார் புலவர் என்று

கூறியதனால்) பெறுதும் என்பது'' என்று மறுப்புரை வழங்கியுள்ளார்.

பேராசிரியர் இவ்வாறு கூறி மறுத்தாலும், 'செய்யுள்' என்று தொல்காப்பியர் கூறும் வெண்பா பண்டு இருந்திருக்கிறது என்பதை,

''ஏழடி இறுதி ஈரடி முதலா
ஏறிய வெள்ளைக் கியைந்தன அடியே
மிக்கடி வருவது செய்யுட் குரித்தே''
—சங்க யாப்பு

''ஆறடி முக்காற் பாட்டெனப் படுமே
ஏறிய அடியும் செய்யுளுள் வரையார்''
—நூற்பெயர் தெரியாதது
(யா. வி. கழ. பக். 132, 133, 251.)

எனவரும் யாப்பருங்கல விருத்தி மேற்கோள் நூற்பாக்களால் அறியப்படுகின்றது.

மேற்காட்டிய நூற்பாக்கள் வெண்பாவின் அடிச்சிறுமை பெருமைகளை உணர்த்த, விருத்தி ஆசிரியரால் மேற்கோளாக எடுத்துக் காட்டப்படுகின்றன.

''இரண்டடி முதலாக ஏழடி இறுதி வெண்பாவிற்குரிய அடிகளாகும். ஏழடியில் மிக்க அடிவருவது செய்யுள் என்னும் வெண்பாவிற் குரித்து''

''ஆறடி முக்கால் (ஏழடி) வெண்பாட்டிற்குரிய அடியாகும். ஏழடிக்குமேல் ஏறிய அடியும் செய்யுள் வெண்பாவில் நீக்கார்'' என்பன மேற்காட்டிய நூற்பாக்களுக்குரிய பொருளாகும்.

மேற்குறிப்பிட்ட நூற்பாக்களால், செய்யுள் என்னும் பெயருடைய வெண்பா வகை பண்டு இருந்ததென்னுஞ் செய்தி புலனாவதால் பேராசிரியரின் முதல் மறுப்பு ஏற்றதாகத் தெரியவில்லை.

அல்லதூஉம், 'அங்கதச் செய்யுள் என்மனார் புலவர்' என வருகின்ற சூத்திரத்து ஓதுமாகலின் (செய். பேரா. 129) 'இவையும்' அங்கதச் செய்யுளே என்று மற்றொரு மறுப்பையும் பேராசிரியர் கூறுகின்றார்.

அவர் இவையும் என்று குறித்தது, 'செய்யுள் தாமே இரண்டென மொழிப' என்ற நூற்பாவினால் கூறப்பட்டுள்ள இரண்டினையாகும். அவர் கூறுகிறபடி, இரண்டும் அங்கதமாயின், ஒன்றைச் செவியுறைச் செய்யுள் என்றும், மற்றொன்றை அங்கதச் செய்யுள் என்றும் கூறுவது பொருந்தாதென்க. மேலும் அவர் மேலைச் சூத்திரத்துள்ளும் (செய். பேரா. 118) (அங்கதஞ் செய்யுள் என்பது பாடமாகாமல்) அங்கதச் செய்யுள் என்பதே பாடமென்பதூஉம் 'அதனாற், பெறுதுமென்பது என்று கூறுகிறார். அவர் அவ்வாறு கூறுவதின் கருத்தென்னை எனின் ? செய்யுள் வகை இரண்டில் ஒன்றை அங்கதச் செய்யுள் என ஓதியதால் முன்னே உள்ள தொகைச் சூத்திரத்தில் (செய். பேரா. 118) அங்கதஞ் செய்யுள் என உம்மைத்தொகையாகப் பாடங்கொள்ளாமல் அதனையும் அங்கதச் செய்யுள் எனப் பண்புத் தொகையாகவே பாடங்கொள்ள வேண்டும் என்பதாம். இதுவும் பொருந்துமாறில்லை. என்னை எனில் ? இங்கே செவியுறைச் செய்யுள் அங்கதச் செய்யுள் என்பன பண்புத் தொகை நடையில் உள்ளன. தொகைச் சூத்திரம் (118) நெடுவெண்பாட்டும் குறுவெண்பாட்டும் கைக்கிளையும் பரிபாட்டும் என்னும் இவை எண்ணுநிலை நடையாக இருத்தலின், இவற்றை அடுத்த அங்கதமும் செய்யுளும் 'அங்கதஞ் செய்யுள்' என எண்ணுநிலையாகவே அமையும் என்க.

இதனைப் போலவே, அளவியலில் வரும் 'கலிவெண்பாட்டே' (153) என்னும் நூற்பாவுள் ''கலிவெண்பாட்டும் கைக்கிளையும் செய்யுளும் செவியறிவும் வாயுறையும் புறநிலையும் என்னும் இவை'' என்ற பகுதி, எண்ணுநிலைவகையினாலேயே தொடர்ந்ததென்க.

**நமக்குத் தெளிவாகத் தெரிவது :**

எனவே 'செய்யுள்' என்று பெயருடைய ஒருவகை வெண்பாட்டு பண்டு இருந்ததென்பது, தொல்காப்பியர் கூற்றாலும்,

அதற்கு உரைசெய்த ஒராசிரியர் கூற்றாலும், சங்கயாப்புடையார் முதலிய யாப்பிலக்கண ஆசிரியர் கூறும் நூற்பாக்களாலும், நமக்குத் தெளிவாகத் தெரிகின்றது.

மாணிக்கவாசகர் பாடிய சிவபுராணப் பாட்டு தொல்காப்பியர் கூறிய செய்யுள் வெண்பாவே ஆகும். யாப்பருங்கல விருத்தி யாசிரியர் "இன்னும் பல அடியால் வந்த ப∴றொடை வெண்பா இராமாயணமும் புராண சாகரமும் முதலாகவுடைய செய்யுள்களிற் கண்டுகொள்க" என்று எழுதுவதை நோக்கினால், இச் செய்யுள் வெண்பா புறப்பொருள் பற்றிப் பழைய நிகழ்ச்சிகளின் மேலதாய் வரும் என்று தெரிகின்றது.

சிவபுராணம் என்பதற்கு 'முன்மை அறிய முடியாத பழமை' என்று விளக்கம் கூறப்படுவதால், இது.

"இழுமென் மொழியால் விழுமியது நுவலினும்
பரந்த மொழியால் அடிநிமிர்ந் தொழுகினும்
தோலென மொழிப தொன்மொழிப் புலவர்"

(தொல். செய். 230)

என்னும் நூற்பா விதியால் அமைந்த 'தோல்' என்னும் தனிச் செய்யுள் வனப்புடைய தென்க.

**சிவபுராணம் செவியறிவுறூஉப் பொருள் உடையது :**

செவியறிவுறூஉவின் பொதுப் பொருளாவது ஒருவரை முன்னிலைப்படுத்தி விளித்து அவர்தம் செவியின்கண் அறிவுறுத்துக் கூறுதலாகும். சிறப்புப்பொருள் வெவ்வேறுபட்டு வரும்.

தொல்காப்பியர் புரையோர் நாப்பண் பொங்குதலின்றி அவிதல் கடன் எனவும் (தொல். செய். 110) ஒருவனுடைய புகழோடும் பொருளொடும் புணர்ந்து வருமெனவும் (செய். 124) சிறப்புப் பொருளை வேறுபடுத்திக் கூறுகின்றார். புறப்பொருள் வெண்பா மாலை அரசனுக்குச் சூழ்ச்சியைச் செவிக்கண் அறிவுறுத்துதலே செவியறிவுறூஉவாம் என்று கூறுகின்றது.

இவற்றிலிருந்து செவியறிவுறூஉவிற் கூறப்படும் பொருள் இடத்திற்குத் தக்கவாறு மாறுபட்டு வரும் என்பது புலனாகும்.

அடிகளார் இறைவனைப் பலபடித்தாக முன்னிலைப்படுத்தி விளித்துப் புகழ்ந்து ஈற்றில் 'அல்லல் பிறவி அறுப்பானே ஓ'' என்று கூறுவதால் தம் பிறவியும் அறுதல் வேண்டும் என்பதைக் குறிப்பெச்சத்தால் குறித்துச் செவியறிவுறுத்தாராயிற்று. அதனால் இச் சிவபுராணம் செவியறிவுறூஉ என்னும் பொருளில் வந்த (செய். 124) செய்யுள் வெண்பா வாகும்.

கலிவெண்பாவின் பிற்கால நிலை :

கலிவெண்பா அகப்பொருள் பலவற்றுள் ஏதாவது ஒரு பொருள் நுதலித்தான் வரும் என்று தொல்காப்பியர் கூறியுள்ள செய்தியும், கலித்தொகையில் வந்துள்ள கலிவெண்பாவெல்லாம் அவர் கூறியவாறே வந்துள்ள செய்தியும் முன்னே கூறப்பட்டன.

பிற்காலத் தெழுந்த யாப்பருங்கலம் முதலான யாப்பிலக்கண நூல்களெல்லாம் தொல்காப்பியர் கருத்தைக் கருதாமல், கலிவெண்பா பொருள்பாகுபாடின்றி அகப்பொருளிலும் புறப் பொருளிலும் வரும் என்று கருதலாயின. யாப்பருங்கல விருத்தி யாசிரியர் தம் உரையுள் கலிவெண்பாவிற்கு அகப்பொருள் புறப் பொருள் பாடல்களையும் எடுத்துக்காட்டாகக் காட்டியுள்ளார்.

பிற்காலத்தே வாழ்ந்த குமரகுருபரர் புறப்பொருள் பற்றிக் கந்தர் கலிவெண்பா என்ற இலக்கியத்தை இயற்றியுள்ளார். ஆனால், மிகப் பேரறிஞரான உமாபதிசிவம் தாம் இயற்றியருளிய நெஞ்சுவிடு தூது அகப்பொருள் பற்றியதாதலால் அதனைக் கலிவெண்பா என்றும், தம் ஆசிரியரைப் போற்றும் பொருள் அமைந்த புறப் பொருள்பற்றிய இலக்கியத்தைப் போற்றிப் பஃறொடை என்றும் வேறுபடக் குறித்துள்ளார். என்னிடத்தில் ஓலை ஏட்டில் உள்ள அவ்விலக்கியம் 'போற்றித் திருத்தொடை' என்ற பெயரால் குறிக் கப்பட்டுள்ளது.

திருவாசக காலம் :

சிவபுராணம் அகவல் யாப்புடைய தென்றும்; அன்று, கலிவெண்பா வென்றும்; கூறுவது மேலோட்டமாய்க் கருதிய உணர்ச்சியால் உண்டானதாகும். அவ்விரண்டும் இன்றி இச் சிவ புராணம் ஒருவகை வெண்பாவிலே அடங்கும் என்பதும், அது செய்யுள் வெண்பாவே ஆதல் வேண்டும் என்பதும் இக் கட்டுரையில் ஆராயப்பட்டுள்ளன. சிவபுராணத்துள் பிற்காலக் கலிவெண்பாப் போல் தனிச்சொல் வராமலிருத்தலையும் அறிஞர் கருதியுணர வேண்டும். இத்தகைய பழைய யாப்புமுறை தேவாரத்தில் இல்லை யாதலால் இத் திருவாசகம் தேவார காலத்திற்கு முற்பட்ட தென்க.

சிவபுராண யாப்பமைப்பு :

தொல்காப்பியர் 'அளவும் சிந்தும் வெள்ளைக் குரிய, தளை வகை யொன்றாத் தன்மை யான" (தொல். செய். 55) என்னும் நூற்பாவினால் வெண்பாப் பெற்றுவரும் (நிலங்களை) அடிகளைக் கூறியுள்ளார்.

இளம்பூரணர் இந்நூற்பாவிற்குத் "தளைவகை ஒன்றாத் தன்மைக்கண் அளவடியும் சிந்தடியும் வெண்பாவிற்குரிய; ஒன்றுந் தன்மைக்கண் நெடிலடியும் சில (இரண்டு) வரும் என்பர்.

அவர் உரையின் கருத்து: இயற்சீர் ஒன்றாமையாற் பிறந்த வெண்டளை பெற்றுவரும் அடிக்கண் அளவடி ஐந்தும் சிந்தடி மூன்றும், வெண்சீர் வந்து ஒன்றும் தன்மைக்கண் நெடிலடி இரண்டும் ஆகப் பத்துவகை அடி வெண்பாவிற்கு வரும் என்பதாம். இங்கே கூறப்பட்டவை நாற்சீரடியில் வரும் எழுத்துவகை அடிக ளாகும்.

எனவே, வெண்பாவில் நாற்சீர் கொண்ட அடியில் 7, 8, 9 என்னும் எழுத்துக்கணக்குள்ள சிந்தடி மூன்றும், 10, 11, 12, 13, 14 என்னும் எழுத்துக் கணக்குள்ள அளவடி ஐந்தும், 15, 16

என்னும் எழுத்துக் கணக்குள்ள நெடிலடி இரண்டும், ஆகப் பத்து வகை அடிகள் வரும் என்க.

இச் சிவபுராணச் செய்யுள் வெண்பா தொண்ணூற்றைந்து அடிகளை உடையது. இவற்றுள் ஈற்றடி ஒன்றும் முச்சீர் அடி; ஏனைய தொண்ணூற்று நான்கும் நாற்சீர் கொண்ட அடிகளாகும்.

இத் தொண்ணூற்று நான்கு அடிகளுள் வெண்பாவிற்குரிய 7, 8, 9 என்னும் எழுத்துக்கணக்குள்ள சிந்தடிகளில் ஒன்றும் வரவில்லை. அளவடிகளுள் பத்தெழுத்தடியும் வரவில்லை. அளவடியுள் பதினோரெழுத்தடி ஐந்தும், பன்னிரண் டெழுத்தடி இருபத்தொன்பதும், பதின்மூன்றெழுத்தடி முப்பத்து நான்கும், பதினான்கெழுத்தடி பதினெட்டும், நெடிலடியில் பதினைந்தெழுத்தடி எட்டும் ஆகிய இவைகளே வந்துள்ளன.

இச் சிவபுராண வெண்பா தொண்ணூற்றைந்து அடிகளிலும் வந்துள்ள சீர்கள் முந்நூற்று எழுபத்தொன்பதாகும். இவற்றுள் தேமாங்காய்ச்சீர் எழுபத்தொன்று, புளிமாங்காய்ச் சீர் நாற்பத்திரண்டு, கருவிளங்காய்ச்சீர் நாற்பத்திரண்டு, கூவிளங்காய்ச்சீர் ஐம்பத்தேழு ஆக மூவசைச் சீருள் வெண்பாவுரிச் சீர் இருநூற்றுப் பன்னிரண்டு வந்துள்ளன.

தேமாச்சீர் தொண்ணூற்றொன்று; புளிமாச்சீர் முப்பத்தெட்டு; கருவிளச்சீர் பதினொன்று; கூவிளச்சீர் இருபத்தாறு ஆக ஈரசைச் சீர் நூற்று அறுபத்தாறு வந்துள்ளன. ஈற்றில் பிறப்பு என்னும் நிரைபு அசைச்சீர் ஒன்று வந்துள்ளது. ஆகச் சிவபுராணத்துள் வந்துள்ள சீர் முந்நூற்று எழுபத்தொன்பதின் பாகுபாட்டினை உணர்க.

சிவபுராணம் நல்ல தொடை அமைப்பை உடையது. ஓரடிக்கும், அதனை அடுத்து வரும் மற்றோரடிக்குமாய் அமைந்த அடி எதுகைத் தொடை இதனுள் பெரும்பாலும் சிறப்பாய் அமைந்துள்ளது. ஓரடியுள் வரும் இணை, ஒரூஉ முதலியவை மோனை, எதுகை, முரண், இயைபு என்னும் இவைகளைப் பெற்று வந்துள்ளன.

முடிப்புரை :

தொல்காப்பியரால் சொல்லப்பட்ட பல செய்திகள் பிற்காலத் தவரால் மறக்கப்பட்டும், பிறழ உணரப்பட்டும், புறக்கணிக்கப்பட்டும் போயின. அவற்றை நன்கு ஆய்ந்து தமிழுலகத்திற்குத் தந்தால் அஃது ஒரு நல்ல செயலைச் செய்ததாக அமையும். அறிஞர் உலகம் இப் பணியில் உழைக்க வேண்டும் என்பது என் பணிவான வேண்டு கோளாகும்.

## 10. சங்க இலக்கிய உவமை

[புலவர் சி. செல்வத்தாண்டவன்]

மனிதன் தான் கருதியவற்றைப் பிறர்க்குத் தெளிவாகச் சொல்லுதலும் பிறர் கருத்தைத் தான் புரிந்துகொள்ளுதலும் காரணமாக அறிவு விளக்கம் பெறுகிறான். தன் கருத்தைக் கேட்போர் விரும்பும்வண்ணம் எளிமையாகச் சொல்லவேண்டும்; பிறர் கூறும் நுட்பங்களையும் தான் எளிமையாக உணரவேண்டும். இதுவே சான்றோரின் கொள்கை என்பதனை,

"வேட்பத்தாம் சொலிப் பிறர்சொற் பயன்கோடல்
மாட்சியின் மாசற்றார் கோள்" (646)

என்னும் குறளால் திருவள்ளுவர் குறிப்பிடுகின்றார்.

கேட்போர் இனிமையாகவும் எளிமையாகவும் விளங்கிக் கொள்ளும் வண்ணம் சொல்பவனுக்கு உற்ற கருவியாக இருப்பது சிறப்பான உவமையாகும். புலவர் பெருமக்கள் தாம் கொண்ட கருத்துகளைச் சிறந்த உவமைகள் மூலம் தங்கள் நூல்களில் விளக்கியுள்ளனர். ஒல்காப் பெரும் புகழ்த் தொல்காப்பியர், கருத்து விளக்கத்திற்கு உவமை இன்றியமையாததாகும் என்று கருதிப் பொருளதிகாரத்தில் உவமவியல் என ஓரியல் அமைத்து விரிவாகப் பேசுவார்.

உவமைகளால் பொருள் நன்கு விளக்கம் பெறுதலால் புலவர்கள் மூன்றடிச் சிற்றெல்லையுடைய ஐங்குறு நூற்றுப் பாடல்களிலும் உவமைகளை எடுத்தாண்டுள்ளனர் :

"நன்றே காதலர் சென்ற ஆறே
சுடுபொன் னன்ன கொன்றை சூடி
கடிபுகு வனர்போல் மள்ளரும் உடைத்தே." (482)

ஈரடிகளைக் கொண்ட குறள்பாவால் நூல்யாத்த பெருந்தகை வள்ளுவரும்,

"இழிவறிந் துண்பான்கண் இன்பம்போல் நிற்கும்
கழிபே ரிரையான்கண் நோய்"

எனப் பாவில் பாதியை உவமைக்கு அளித்து விளக்கம் தருகிறார்.

சங்க இலக்கியங்களாகிய பத்துப்பாட்டும் எட்டுத் தொகையு மாகிய பதினெண்மேற்கணக்கு நூல்களில் சங்கப்புலவர்கள் அளவற்ற உவமைகளைக் கையாண்டுள்ளனர். அவ் வுவமைகளை நுணுகிக் காண்போர் அவற்றின் மூலம் சங்ககாலத்தில் நிலவிய சமுதாயம், நீதி, அரசியல், வரலாறு, அறிவியல் முதலிய பல்வேறு பொருள்கள்பற்றி உணர முடியும்.

சமுதாயம் :

"அறனறிந் தொழுகும் அங்க ணாளனைத்
திறனிலார் எடுத்த தீமொழி யெல்லாம்
நல்லவை யுட்படக் கெட்டாங்கு
இல்லா கின்றவள் ஆய்நுதற் பசப்பே"
(கலி. 144 : 70-73)

கருணைநிறைவும் ஒழுக்கச் செறிவும் உடைய ஒருவனை அத் திறமில்லாதவர் பழிப்படுத்தினர், பழிப்படுத்தியவர் கூற்றைச் சான்றோரவை ஆய்ந்து பார்க்கும்போது அவர்கள் சொன்ன பழி இல்லையாயிற்று. அதுபோல இவள் பசப்பும் நீங்கியது. இஃது இவ்வடிகளின் கருத்து.

நல்லவர்மீது அல்லவர் பழி கூறுவதும் ஆய்ந்து பார்க்குமிடத்து அஃது இல்லையாதலும் தொன்றுதொட்டு இருந்துவரும் சமுதாய நிலை என்பதை இவ்வுவமை நமக்குணர்த்துகின்றது.

சோழன் போரவைக்கோப்பெருநற் கிள்ளி முக்காவனாட்டு ஆமூர் மல்லனொடு பொருதான். கிள்ளி மல்லனொடு விரைந்து போர் செய்த பான்மைக்குக் கட்டில் பின்னுவோன் செயல் உவமையாக வருகின்றது.

வினைஞன் ஒருவன் கட்டில் பின்னுகின்றான்; மாரிக்காலத்து மாலை நேரம். இருள் விரைவில் வந்துவிடும். அவன் ஊரில் திருவிழா; திருவிழா ஊர்ப் பொதுவானதால் அவனும் விரைந்து சென்று பங்குபற்ற வேண்டும். தன் வீட்டிற்கு விழாக்காண வெளியூரிலிருந்து வரும் உறவினர்களை வரவேற்று உணவு அளிக்கவேண்டும். அவன் மனைவிக்குப் பேறுகாலம், இந் நிலையில் அவன் ஊரிலிருப்பது மிகவும் இன்றியமையாததாகின்றது. தன் கடமைகளைச் செய்வதற்குப் பொருள் வேண்டும். கட்டில் பின்னிய பிறகே பொருள் கிடைக்கும். குறுகிய மாரிக்கால மாலை நேரம் முடிவதற்குள் கட்டில் பின்னியாக வேண்டும். ஊர்த் திருவிழாவும் மனைவியின் பேற்றுக் காலமும் அவன் மனத்திரையில் தோன்ற அவன் கையில் உள்ள கட்டில் பின்னுதற்குரிய வாரைச் செலுத்தும் ஊசி விரைவது போன்று கிள்ளி போர் செய்தான்.

''சாறுதலைக் கொண்டென பெண்ணீற் றுற்றென
பட்ட மாரி ஞான்ற ஞாயிற்று
கட்டில் நிணக்கும் இழிசினன் கையது
போழ்தூண்டு ஊசியின் விரைந்தன்று மாதோ
... ... ... நெடுந்தகை போரே''

(புறம். 82)

இவ்வுவமை மூலம் சங்ககால இல்லறத்தானுக்கு அமைந்து கிடந்த இல்லறக் கடமை சமுதாயக் கடமைகளை நாம் அறிகிறோம்,

நீதி :

''கற்பித்தான் நெஞ்சழுங்கப் பகிர்ந்துண்ணான், விச்சைக்கண்
தப்பித்தான் பொருளேபோல் தமியவே தேயுமால்
ஒற்கத்துள் உதவியார்க்கு உதவாதான்''

(கலி. 149 : 4-6)

தனக்கு நூல் முதலிய கற்பித்த ஆசிரியன் தன்பால் ஒன்றும் பெறாமல் மனம் வருந்த, அவ்வாசிரியற்கு ஒன்றும் கொடுத்து உண்ணானாய், தான் கற்ற கல்வி கொண்டு தவறாக நடந்துகொள் பவனுமாகிய ஒருவனின் கல்விப் பொருள் நாடொறும் தேயுமாறு போல, என்பது உவமை. இவ்வுவமை மூலம் ஆசிரியற்கு உற்றுழி உதவியும் உறுபொருள் கொடுத்தும் பிற்றைநிலை முனியாது கற்றலும், கற்றபின் அதற்குத் தக ஒழுகுதலும் அறமெனக் கொண்ட சங்க காலச் சான்றோரின் அறக்கோளை அறியலாம்.

''நயனும் வாய்மையும் நன்னர் நடுவும்
இவனின் தோன்றிய இவைஎன இரங்க
புரைதவ நாடி பொய்தபுத்து இனிதாண்ட
அரைசரோ டுடன்மாய்ந்த நல்லூழிச் செல்வம்போல்''
(கலி. 130 : 1-4)

இந்த அடிகளில் வரும் உவமை, அறனும் இறைமையும் உடைய அரசன் வாழ்ந்த நாளில் அளவற்றசெல்வம் இருந்ததாகவும் அவன் மாய்ந்தபின் செல்வம் அழிந்ததாகவும் கூறுகிறது. எனவே அறச்செயல் இருக்கும் இடத்தில் செல்வம் வளரும்; அஃதில்லா விடத்துச் செல்வம் தேயும் என்னும் அறக்கருத்தை அறிகின்றோம்.

''அருந்தவம் ஆற்றியோர் நுகர்ச்சிபோல் அணிகொள
விரிந்தானாக் கிளைதொறூஉம் வேண்டுந்தா தமர்ந்தாடி
... ... ... ...
இருந்தும்பி இறைகொள'' (கலி. 30 : 1-4)

நல்வினை செய்தோர் இன்புறுவதுபோலத் தும்பி தாதாடி இன்புற்றது என்பதால் அறம் செய்வார் இன்பம் பெறுவார் என்னும் அறக் கருத்து பெறப்படுகின்றது.

கலை :

''தாயுயிர் பெய்த பாவை போல
நலனுடையார் மொழிக்கண் தாவார்'' (கலி. 22: 5-6)

ஓவியன் வரைந்த குறிப்பினின்றும் பாவை என்றும் மாறா திருத்தல்போல என்னும் உவமையின் மூலம் ஓவியக் கலை அறிவு பெறப்படும்.

> "கையும் காலும் தூக்கத் தூக்கும்
> ஆடிப் பாவை போல" —(குறுந். 8)

நாட்டியம் பயில்வோர் ஆடியின்முன் நின்று பழகும்போது பயில்வோர் செய்வதனையே ஆடியில் தோன்றும் உருவமும் செய்யு மாறு போல என்னும் உவமை மூலம் நாட்டியக்கலைபற்றிய நுண்ணறிவினை அறியலாம். மேலும்,

> "கள்வர் பொன்புனை பகழி செப்பம் கொண்மார்
> உகிர்நுதி புரட்டும் ஓசை போலச்
> செங்காற் பல்லி தன்துணை பயிரும்.' —(குறுந். 16)

அம்புகளைத் தீட்டுவோர் அவற்றின் கூர்மை அறியுமாறு நகத்தின் நுனியால் புரட்டிப் பார்ப்பதுபோல, என்னும் உவமைமூலம் கருவி திருத்துவோரின் நுண்ணறிவைக் காணலாம்.

செப்பம் செய்த அம்பின் நுனியை நகத்தின் நுனியால் புரட்டும் போது எழும் ஓசைபோலப் பல்லியின் ஓசை இருந்தது என்று கண்டு உணர்ந்து பாடிய புலவர் பாலை பாடிய பெருங்கடுங்கோவின் இயற்கை அறிவின் நுட்பம் பாராட்டற்குரியதாம். கூர்மை காண உகிர்நுதி புரட்டும் செயல் இன்றும் நாவிதர்பால் உளது.

> "கலஞ்சிதை இல்லத்துக் காழ்கொண்டு தேற்றக்
> கலங்கிய நீர்போல் தெளிந்து நலம்பெற்றாள்"
> (கலி. 142 : 64, 65)

'கலத்தின்கண் கலங்கிய நீரை வைத்துத் தேற்றாவின் விதையை உடைத்துப் பருப்பால் தேற்றக் கலங்கிய நீர் தெளிந்து நன்னீரானது போல'—எனவரும் உவமை மூலம் புதுமழை நீரைத் தேற்றாவிதை கொண்டு தெளிய வைத்துப் பருகும் பழக்கம் தெரிகின்றது. இம் முறை இப்பொழுதும் சில பகுதிகளில் நடைமுறையில் உள்ளது.

அரசியல் :

''நடுவிகந் தொரீஇ நயனில்லான் வினைவாங்கக்
கொடிதோர்த்த மன்னவன் கோல்போல''

—(கலி. 8 : 1, 2)

'நடுவுநிலைமை கெட்டுத் தீய அமைச்சன் சொற்படி நடந்து மக்கட்குத் தீமை செய்யும் மன்னவனின் கொடுங்கோல்போல'— என்னும் உவமைமூலம் கொடுங்கோன்மையால் மக்கள் துன்புறுவர் என்பது உணர்த்தப்பெறும்.

''இகல்மீக் கடவும் இருபெரு வேந்தர்
வினையிடை நின்ற சான்றோர் போல
இருபே ரச்சமொடு யானும் ஆற்றலென்'

—(குறிஞ்சிப். 27—29)

எனவரும் தோழி கூற்றிலும்,

''வலிமிகு வெகுளியான் வாளுற்ற மன்னரை
நயன்நாடி நட்பாக்கும் வினைவர்போல்''

—(கலி. 46 : 7, 8)

எனவரும் தோழி கூற்றில் உள்ள உவமை 'சான்றோர் பகை மன்னரிடைத் தூது சென்று இருபெரு வேந்தரையும் ஒற்றுமைப் படுத்தி நாட்டழிவை நீக்குவதை அறிவிக்கும். இவ்வுவமை மூலம் சான்றோர்க்கு —புலவர்க்கு அரசியலில் இருந்த பொறுப்பினையும் சிறப்பினையும் உணர முடிகின்றது.

அறிவியல் :

''காழ்வரை நில்லாக் கடுங்களிற் றொருத்தல்
யாழ்வரைத் தங்கியாங்கு'' —(கலி. 2 : 26, 27)

'பாகரது குத்துக் கோலுக்கு அடங்காத களிறு யாழிசை கேட்டு அடங்கியதுபோல' என்னும் உவமை மூலம் முன்னோரின் விலங்கியல் அறிவு வெளிப்படுகின்றது.

"பாலூர் நெருஞ்சிப் பசலை வான்பூ
ஏர்தரு சுடரின் எதிர்கொண் டாங்கு"

—(புறம் 155 ; 4, 5)

'ஞாயிறு செல்லும் திசைக்கு எதிரே ஞாயிற்றை நோக்கி நெருஞ்சிப்பூ மலருவதுபோல' என்னும் உவமைமூலம் முன்னோரது தாவரவியலறிவு தெளிவாகின்றது.

"பொய்யா எழிலி பெய்விடம் நோக்கி
முட்டை கொண்டு வன்புலம் சேரும்
சிறுநுண் எறும்பின் சில்லொழுக்கு ஏய்ப்ப"

—(புறம் 173 : 5—7)

மழை வரும் என்பதை முன்னரே அறிந்து முட்டைகளை எடுத்துக்கொண்டு மேட்டுப் பகுதிக்குச் செல்லும் எறும்புகளின் வரிசைகளை ஒப்ப என்னும் உவமை மூலம் மழைபற்றிய அறிவும் அதனை அறியும் எறும்புகள்பற்றிய அறிவும் பெற்று நம் முன்னோர் விளங்கினர் என அறிந்தின்புறுகின்றோம். 'சிறு நுண் எறும்பின் சில்லொழுக்கு' என்பதன் மூலம் வரிசையாகச் செல்லும் சமுதாய அறிவு மக்களிடத்தே செழித்திருந்ததையும் காண்கிறோம்.

மருத்துவம் :

"அரும்பிணி உறுநர்க்கு வேட்டது கொடாஅது
மருந்தாய்ந்து கொடுத்த அறவோன் போல"

—(நற். 136 : 1, 2)

"திருந்திய யாக்கையுள் மருத்துவன் ஊட்டிய
மருந்துபோல்" —(கலி. 17 : 19, 20)

'கடுமையான நோயுடையார்க்கு அவர் விரும்பியதெல்லாம் கொடுக்காமல் நோய்க்கு ஏற்ற மருந்தும் உணவும் கொடுக்கும் மருத்துவன்போல' எனவும் 'நோய் நீக்கத்திற்குரிய உடம்பில் மருத்துவன் செலுத்திய மருந்துபோல' எனவும் வரும் உவமைகளின் மூலம் சங்க காலத்தில் பரவியிருந்த மருத்துவ அறிவு புலனாகும்.

வரலாறு :

''ஓவாது ஈயும் மாரி வண்கை
கடும்பகட் டியானை நெடுந்தேர் அஞ்சி
கொன்முனை இரவுஊர் போலச்
சிலவா குகநீ துஞ்சு நாளே'' —(குறுந். 91)

'அளவிலாது கொடுக்கும் மழை போன்ற கையையும் பெருமை பொருந்திய யானையையும் பெரிய தேரையும் உடைய அஞ்சியான வன் படைவீடு அமைத்துத் தங்கியுள்ள ஊரில் உள்ள மக்கள் பல நாள் தூங்காதவாறுபோல' என்னும் உவமை மூலம் அஞ்சியைப் பற்றிய வரலாற்றுக் குறிப்புப் பெறப்படுகின்றது.

''இளம்பல் கோசர் விளங்குபடை கன்மார்
இகலினர் எறிந்த அகலிலை முருக்கின்
பெருமரக் கம்பம் போலப்
பொருநர்க் குலையாநின் வலன்வா ழியவே''
—(புறம். 169 : 9—12)

'இளையகோசர் படைத்தொழில் கற்கும் பொருட்டுப் போர்க் கருவிகளை எறியும் முருக்காகிய பெரிய மரத்தால் செய்யப்பட்ட தூணமாகிய இலக்கைப்போல' எனவரும் உவமைமூலம் கோசர் வரலாறும் படைக்கலப்பயிற்சி பற்றிய குறிப்பும் அறிகின்றோம்.

சங்ககால இலக்கியங்களில் வந்துள்ள உவமைகள் கொண்டு சங்க கால மக்களைப்பற்றிய அளவற்ற செய்திகளை நாம் அறிய முடியும். எனினும் எடுத்துக்கொண்ட சில உவமைகள்மூலம், பெறப்படும் சில செய்திகளே இங்கு இடம் பெற்றுள்ளன.

# 11. பத்துப்பாட்டில் ஒன்றாகிய முல்லைப்பாட்டின் சொல் அழகும் பொருள் அழகும்

[பெரும்புலவர் கா. நயினர் முகம்மது]

ஆசிரியர் நப்பூதனார், கார் காலத்தில் கணவனைப் பிரிந்து ஆற்றாமை மீதூர நிற்கும் தலைவியின் நிலையினையும், மாற்றார் மண்ணைக் கவர வஞ்சி சூடிச்சென்ற தலைவன் நிலையினையும் விரித்தோதிச் செல்லுமுகத்தான் இயற்கை எழிலோவியங்களையும் அணிநலன்களையும் படிப்போரின் மன உணர்விற்குத்தக அமைத்துள்ளார்.

நூலின் தொடக்கமே 'உலகம்' என்னும் மங்கலச் சொல்லால் அமைந்து உவமையணியைத் தோற்றுவிக்கின்றது.

''நனந்தலை உலகம் வளைஇ நேமியொடு
வலம்புரி பொறித்த மாதாங்கு தடக்கை
நீர்செல நிமிர்ந்த மாஅல் போலப்
பாடிமிழ் பனிக்கடல் பருகி வலனேர்பு
கோடுகொண் டெழுந்த கொடுஞ்செல வெழிலி
பெரும்பெயல் பொழிந்த சிறுபுன் மாலை''

என்றும், கார் காலம் அஃதாவது ஆவணித் திங்களின் முதல் நாள் மாலைப் பொழுது பெருமழை பெய்துகொண்டிருக்கின்றது. இதற்குத் 'தலைப்பெயல்' என்று பெயர். பெருமழை பொழிவதற்குக் காரணமாயிருந்த மேகம், ஒலி முழங்குகின்ற கடலிற் சென்று நீரைக் குடித்து வலமாக எழுந்து மலைகளில் தங்கி உலகத்தையே

வளைத்துக்கொண்டு பெய்தது. இப் பொருளை விளக்க நப்பூத னார் எடுத்துக்கொண்ட உவமை பொருட் செறிவுடையது. சங்கு சக்கர இரேகைகள் அமைந்த மிகப் பெருமை வாய்ந்த கைகளையும், திருமகளைத் தரித்த மார்பையும் உடையவனாகிய திருமால், குறளுருக்கொண்டு மாவலிச் சக்கரவர்த்தியிடத்திலே மூன்றடி மண் இரந்தபொழுது, அம் மாவலி தாரை வார்த்த நீர் திருமாலின் கரங்களில் பட்டவுடனே வானுற ஓங்கி வளர்ந்து நெடியோனாய் நின்று நிலவுலகை ஓரடியாலும் விண்ணுலகை ஓரடியாலும் அளந் தாற் போன்றுள்ளது என்று அழகிய உவமை அமைத்தார்.

''மூவுலகும் ஈரடியால் முறைநிரம்பா வகைமுடியத்
தாவிய சேவடி''

என்றார் இளங்கோவடிகள். சிறிது உவமையையும் பொருளையும் பொருத்திப் பார்ப்போம். கார் மேகத்துக்கு உவமை மஹா விஷ்ணு: திருமாலின் நிறம் கருமை. மேகமும் கரிய நிறம் வாய்ந்தது. திருமால் ஆன்மாக்களுக்கு அருள்மழை பொழிந்து வாழ்விப்பவன். கார்மேகமும் உலகுக்கு ஓரறிவுயிர் முதல் ஆறறிவுயிர் ஈறாக அனைவரையும் தனது பெரும் பெயலால் வாழ்விக்கிறது. திருமால் ஈரடியால் மண்ணையும் விண்ணையும் அளந்தமை போல் கார் மேகமும் விண்ணிலே சென்று மண்ணிலே மழை பொழிகின்றது. திருமால் மின்னற் கொடி போன்ற இலக்குமியை மார்பிலே வைத் திருத்தல் போல, கார்மேகமும் மின்னற் கொடியை உடையதாயிருக் கின்றது. எனவே உவமையும் பொருளும் ஒன்றையொன்று கவ்வி எவ்வளவு விரிப்பினும் பொருள் தரும் சிறப்பு கற்றோர்க்குக் கழி பேருவகை தருவதாகும். அன்றியும், நேமியொடு வலம்புரி பொறித்த தடக்கை என்றமையால் தெய்வத் தன்மை உடையவர் களின் கரங்களிலும் கால்களிலும் சங்கு சக்கர இரேகைகள் அமைந்து விளங்கும் என்னும் உத்தம இலக்கணத்தை எடுத்துரைப்பதிலிருந்து இவ்வாசிரியர் சாமுத்திரிகா இலட்சணம் உணர்ந்தவர் என்பது தெரிகின்றது. பெரியாழ்வார் ஆயர்பாடியில் உள்ள மக்களை யழைத்து, 'ஆயர்காள்! இங்குக் கண்ணன் என்னும் குழந்தை அவ தரித்துள்ளது; அக் குழந்தையின் கரங்களிலும் கால்களிலும் சங்கு

சக்கர இரேகைகள் அமைந்துள்ளன. இதை வந்து காண்மின்கள்' என்கின்றார்.

''மைத்தடங் கண்ணி யசோதை வளர்க்கின்ற
செய்த்தலை நீல நிறத்துச் சிறுபிள்ளை
நெய்த்தலை நேமியும் சங்கும் நிலாவிய
கைத்தலங்கள் வந்து காணீரே! கனங்குழையீர்
வந்து காணீரே.''

கவிச் சக்கரவர்த்தி கம்பனும் இராமபிரானைக் கூறும்பொழுது இந்த இரேகைகள் இராமனிடமும் அமைந்துள்ளன. ஆகையால் இவன் திருமாலே என்று முடிவு கட்டுகிறான்.

''சங்கு சக்கரக் குறியுள தடக்கையில் தாளில்
எங்கும் இத்தனை இலக்கணம் யாவர்க்கும் இல்லை
செங்கண் விற்கரத்து இராமன் அத்திரு நெடுமாலே
இங்கு உதித்தனன் ஈண்டுஅறம் நிறுத்துதற்கு இன்னும்''

இனி, ''பெரும் பெயல் பொழிந்த சிறு புன்மாலை'' என்பதை ஆராய்வோம். கார் காலத்து மாலைப்பொழுது புன்மாலை சிறிய நேரமே இருக்கும் என்பது ஒரு பொருள். காதலுற்றுப் பிரிந்தவர்களின் உள்ளத்தில் பிரிவுத் துன்பத்தை மிகுவிக்கும்.

''காலை யரும்பிப் பகலெல்லாம் போதாகி
மாலை மலரும்இந் நோய்''

ஆகலின் புன்மாலை என்றார். 'புன்மை' என்னும் சொல் துன்பம் எனவும் பொருள்படும். இந்த ஆறு அடிகளிலும் முல்லைத் திணைக்குரிய முதற் பொருளாகிய கார்ப்பருவமும் சிறு பொழுதாகிய மாலைக் காலமும், அத் திணைக்குரிய கருப்பொருளாகிய திருமாலும் உரிப்பொருளாகிய இல் இருத்தலும் விளங்கித் தோன்றுமாறு அமைத்த நயம் பாராட்டதக்கது.

மற்றோர் உவமை :

வில்லையூன்றி அதன்மேல் அம்பறாத்தூணியை மாட்டி வைத்திருப்பது துறவிகள் திரிதண்டத்தில் காவித்துணியை மாட்டி வைத்

திருப்பது போலக் காணப்படுகிறது என்னும் உவமையால் ஆசிரியர் துறவொழுக்கத்தில் மதிப்புடையவர் என்பதும், துறவிகளோடு தொடர்புடையவர் என்பதும் நன்கு விளங்கும்.

''கற்றோய்த் துடுத்த படிவப் பார்ப்பான்
முக்கோல் அசைநிலை கடுப்ப நற்போர்
ஓடா வல்வில் தூணிநாற்றி என்பர்.''

பாடி வீட்டில் அரசர்க்கு மெய் காவலராய் இருப்பவர்கள் இடையாமத்தே அரைத் தூக்கத்துடன் அசைந்து திரிதல் மோசி மல்லிகைத் தூறு காற்றில் அசைவது போன்றுள்ளது என்று உவமை கூறுதல் எவ்வளவு பொருத்தமாக அமைந்துள்ளது !

இனி இந் நூலிற் காணப்படும் சில பழக்கவழக்கங்களையும் சொல்லோவியங்களையும் பார்ப்போம்.

### விரிச்சி கேட்டு நிற்றல்

''பெரும்பெயல் பொழிந்த சிறுபுன் மாலை
அருங்கடி மூதூர் மருங்கிற் போகி
யாழிசை இனவண் டார்ப்ப நெல்லொடு
நாழி கொண்ட நறுவீ முல்லை
அரும்பவிழ் அலரி தூஉய்க்கை தொழுது
பெருமுது பெண்டிர் விரிச்சி நிற்ப
சிறுதாம்பு தொடுத்த பசலைக் கன்றின்
உறுதுயர் அலமரல் நோக்கி ஆய்மகள்
நடுங்குசுவல் அசைத்த கையள் கைய
கொடுங்கோற் கோவலர் பின்னின் றுய்த்தர
இன்னே வருகுவர் தாயர் என்போள்
நன்னர் நன்மொழி கேட்டனம்''.

விரிச்சி—நற்சொல். அஃதாவது ஏதேனும் ஒரு காரியத்தை நினைந்து இக் காரியம் நன்றாய் முடியுமோ தீதாய் முடியுமோ என்று ஐயுற்றோர், மக்கள் அருகிச் செல்லும் ஊர்ப்புறத்தே சென்று தெய்வத்தைத் தொழுது ஆண்டு அயலில் உள்ளோர் அப்

பொழுது பேசுகின்ற சொல்லைக் கூர்ந்து கவனிப்பர். அங்ஙனம் கேட்கும்பொழுது அயலார் மொழி நன்மொழியாகப் பிறக்குமேல் நன்மையாய் முடியும் என்றும், தீய மொழியாய்ப் பிறக்குமேல் தீமையாய் முடியும் என்றும் தீர்மானிப்பர்.

ஈண்டுக் கார்ப்பருவம் வந்தும் கார்ப்பருவத் தொடக்கத்தில் வந்துவிடுவேன் என்று அறுதியிட்டுச் சொல்லிச் சென்ற தலைவன் வாராமையால் பெரிதும் வருந்துகின்ற தலைவியின் துன்பம் கண்டு, பெருமுது பெண்டிர், ''ஐயோ! இவள் பெரிதும் துன்புறுகின்ருள். தலைவன் அண்மையில் வராவிடின் இவள் இறந்துபடுதலும் கூடும்'' என வருந்தி, தலைவன் விரைவில் வருவானே மாட்டானோ என ஐயுற்று இரண்டில் ஒன்று துணிதற்கு, ஊர்ப்புறத்தே சென்று நாழியில் உள்ள நெல்லுடன் அன்றலர்ந்த முல்லைப் பூவையும் தூவித் தெய்வம் தொழுது நற்சொல் கேட்டு நின்றனர். அதுபொழுது தாம்பினல் கட்டப்பெற்ற பச்சிளங் கன்றுகள் முல்லைக் காட்டில் மேயச் சென்ற பசுக் கூட்டங்கள் வராமையான் பாலின்றி அலமந்து சுற்றிச் சுற்றி வருதலைப் பார்த்து, மழை 'சோ' என்று கொட்டிக்கொண்டிருக்கும் மாலை நேரம் ஆகையால் குளிரால் நடுங்கும் ஆய்மகள் ஒருத்தி, தனது இரண்டு கைகளையும் தோளில் கட்டிக்கொண்டு, ''கன்றுகாள்! கோவலர் ஓட்டிவர நும் தாயர் இன்னே வருகுவர்; அதுகாறும் பொறுத்திருங்கள்' என்னும் நற்சொல் கேட்டனம் என்று தலைவியைத் தேற்றும் செய்தி சொல்லோவியமாய் அமைந்துள்ளது. பச்சிளங் கன்றுகள் தாம்பில் கட்டப்பட்டிருப்பதும், பசுக்களைக் காணாமல் கன்றுகள் சுழல்வதும், குளிரின் கொடுமை தாங்காமல் இடைச் சிறுமி கைகளில் தோளைக் கட்டிக்கொண்டு நிற்பதும், கன்றுகளுக்கு ஆறுதல் கூறுவதும் எத்துணை இயற்கையாய் அமைந்துள்ளது!

இது நாம் நாடோறும் நம் வீட்டில் காணும் காட்சியல்லவா?

மற்றோர் காட்சி:

படையெடுத்துச் சென்ற தலைவன் காட்டில் பாசறை அமைத்துள்ளான். பாசறையின் நடுவே யானைகள் காவலாக நிற்கின்றன. எத்தகைய யானைகள்? மதநீர் ஒழுகும் கதுப்பினையுடைய சிறு

கண் யானைகள் ''தேம்படு கவுள சிறுகண் யானை'' என்னும் சொற்றொடர் யானையின் உடல் வளத்தைக் காட்டுகின்றது. அந்த யானை அதிகம் உண்டு கொழுத்து மதம் பிடித்திருக்கும் காரணத்தால், எல்லா யானைகளும் விரும்பியுண்ணும் கரும்பினையும், நெற்கதிர்களையும் அதிமதுரத் தழைகளையும் விரும்பியுண்ணாமல் அக் கரும்பினால், ஈக்கள் மொய்க்கும் தனது நெற்றியைத் துடைத்துக் கொண்டு, தனது துதிக்கையைக் கூர்மையான கொம்பில் வைத்து ஏறட்டு நிற்கும். இந்த யானைகளைப் படமெடுத்துக் காட்டும் அடிகளைக் கேளுங்கள் :

''கவலை முற்றம் காவல் நின்ற
தேம்படு கவுள சிறுகண் யானை
ஓங்குநிலைக் கரும்பொடு கதிர்மிடைந்து யாத்த
வயல்விளை இன்குளகு உண்ணாது நுதல்துடைத்து
அயில்நுனை மருப்பில்தம் கையிடைக் கொண்டென''

என்னும் அடிகள் சுவைத்து மகிழத்தக்கவை.

## 12. அதியமான் நெடுமானஞ்சி

[அறிஞர் இரா. சாரங்கபாணி]

சங்ககால வள்ளல்களுள் அதியமான் நெடுமானஞ்சியும் ஒருவன். இவன் அதியமான் (புறம் 101-5); அதிகமான் (பதிற். 80-பதிகம்); அதிகன் (சிறுபாண். 103); அதியன் (அகம். 325-8); அதியர் கோமான் அஞ்சி (புறம். 91: 3, 4). நெடுமானஞ்சி (புறம். 92-6); அதியமான் நெடுமானஞ்சி (புறம். 87; துறைக் குறிப்பு); எழினி (புறம். 158-9); நெடுமிடல் (பதிற். 32-10) என்னும் பெயர்களால் சுட்டப்பெறுகிறான். இவனுக்கு வழங்கிய அதியர்கோமான், எழினி என்னும் பெயர்கள் இவன்மகன் பொகுட்டெழினியையும் குறிக்கின்றன (புறம். 392: 1,2).

நெடுமிடலைக் களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரல் சாய்த்தான் எனக் காப்பியாற்றுக் காப்பியனார் கூறியுள்ளார் (பதிற். 32-10). நெடுமிடல் அஞ்சியின் இயற்பெயராம் என்று பதிற்றுப்பத்தின் பழைய உரை கூறுகின்றது. இதன்படி அஞ்சியை நார்முடிச் சேரல் கொன்றான் என்பது பெறப்படும்.

பெருஞ்சேரலிரும்பொறை, 'பல்வேல்தானை அதிகமானோடு இருபெரு வேந்தரையும் உடனிலை வென்று, முரசும் குடையும் கலனும் கொண்டு உரைசால் சிறப்பின் அடுகளம் வேட்டுத் தகடூர் எறிந்தான்' எனப் பதிற்றுப்பத்து எட்டாம் பத்தின் பதிகம் கூறுகிறது.

பெருஞ்சேரலிரும்பொறை களங்காய்க்கண்ணி நார்முடிச் சேரலுக்குப் பின்னர் அரசாண்டவன். ஆதலால் களங்காய்க்

கண்ணி நார்முடிச் சேரலால் வெல்லப்பட்ட நெடுமிடல் என்னும் பெயர் கொண்ட அஞ்சி, பெருஞ்சேரலிரும்பொறையால் வெல்லப்பட்ட அதிகமானினும் வேறானவன் என்றும் அதிகமான் குடியில் தோன்றிய முன்னோன் என்றும் கொள்ளவேண்டியுள்ளது.

'ஒருவன்மேற் சென்றுழி ஒருவன் எதிர் செல்லாது தன் மதிற் புறத்து வருந்துணையும் இருப்பின் அஃது உழிஞையின் அடங்கும். அது சேரமான் செல்வுழித் தகடூரிடை அதியமான் இருந்ததாம்' என்னும் நச்சினார்க்கினியர் (தொல். புறத்திணை சூ. 7) உரையாலும் சேரமான் தகடூர் முற்றியமை வலியுறும்.

அதியமான் தகடூர் பொருது வீழ்ந்த எழினி என்பான் அதியமான் நெடுமானஞ்சியின் வேறாவான் என்பர் உ.வே.சா.

''மிஞிலி, புள்ளிற்கு ஏமமாகிய பெரும்பெயர், வெள்ளத்தானை அதிகற் கொன்று'' (அகம் 142: 11-13) என்னும் அடிகளால் மிஞிலி என்பான் அதிகனைக் கொன்ற செய்தி புலப்படுகின்றது.

மத்தி என்பவன் எழினியைத் தோற்கடித்து அவன் பல்லைப் பறித்துக் கொண்டுவந்து வெண்மணி ஊரின் வாயிற்கதவில் பதித்த செய்தியை அகநானூற்றுப் பாடல் அறிவிக்கிறது (211: 13-15).

பசும்பூண் பாண்டியனுக்குத் துணையாகச் சென்று வாகைப் பறந்தலையிற் கொங்கரை எதிர்த்த அதிகன் களிற்றொடு பட்டான். அதனால் கொங்கர்கள் ஆர்ப்பரித்தனர் (குறுந். 393).

அதியமான் தகடூரிற் பொருது மாய்ந்ததாகப் பதிற்றுப்பத்தால் அறியப்படுதலின் மிஞிலி கொன்ற அதிகனும் கொங்கரொடு பொருது மாண்ட அதிகனும் தகடூரிற் பொருது மாய்ந்த அதியனினும் வேறானவர்கள் என்று கருதுதற்கு இடம் உண்டாகிறது. ''சங்க நூல்களில் அதிகமான்கள் பலர் குறிக்கப் பெற்றுள்ளனர். தொகைநூல்களில் அதியமான் பற்றிவரும் எல்லாப் பாடல்களும் ஒரே அரசனைப்பற்றியவை எனக் கருதுதல் தவறாகும்'' (பத்துப்பாட்டாராய்ச்சி பக். 430) என டாக்டர் இராசமாணிக்கனார் கூறுவது கருதத்தகும்.

வள்ளல்கள் எழுவரையும் தொகுத்துக் குறிக்குமிடத்துப் பெருஞ்சித்திரனார் அதியனை, 'ஊரா தேந்திய குதிரைக் கூர்வேற் கூவிளங் கண்ணிக் கொடும்பூண் எழினியும்' என எழினி என்னும் பெயரால் குறிப்பிடுவர். ஆதலால் தகடூர் பொருது வீழ்ந்த எழினியும் அதியமானே எனக் கொள்ள இடந்தருகின்றது.

எழினி என்ற பெயர் தனியாகவும் முன்பின் அடை சேர்த்தும் சங்க காலத்தில் வழங்கப்பட்டுள்ளது. தலையாலங்கானத்தில் நெடுஞ்செழியன் வென்ற ஏழு மன்னர்களுள் ஒருவன் பெயர் எழினி எனக் குறிக்கப்பெற்றுள்ளது. வாட்டாற்று எழினியாதன் (புறம். 396. 13); கண்ணன் எழினி (அகம். 197-7) என்று அடை பெற்றும் எழினி என்னும் பெயர் பண்டு வழங்கியமை அறியலாம்.

அகம். 115ஆம் பாடலிலும் புறம் 310ஆம் பாடலிலும் அஞ்சிபற்றிய குறிப்பு வருவதாகச் சிலர் குறிப்பிட்டுள்ளனர். அகம். 115ஆம் பாடலில் வயமானஞ்சி எனப் பாடமுள்ள இடத்தில் வாமானஞ்சி எனப் பாடங் கொண்டு அஞ்சி என்னும் சொல் ஒருவனது பெயரைக் குறிக்கும் என்று ந. மு. வேங்கடசாமி நாட்டார் குறித்துள்ளார்.

''பிறைமருள் வான்கோட் டண்ணல் யானை
சினமிகு முன்பின் வாமான் அஞ்சி
இனங்கொண் டொளிக்கும் அஞ்சுவரு கவலை''.
(அகம். 115)

இதற்கு 'யானை புலிக்கஞ்சித் தன் இனத்துடன் மறைதற்கிடனான அஞ்சுதற்குரிய வழி' எனப் பொருள்கொண்டு 'அஞ்சி' என்னும் சொல்லைப் பெயராகக் கொள்ளாது வினையெச்சமாக்குவதே பொருத்தமாகும். இவ்வுரையை நாட்டார் அவர்கள் பாட வேறு பாட்டுடன் கீழே குறித்துள்ளார்.

''பால்கொண்டு மடுப்பவும் உண்ணா னாகலிற்
செறாஅ தோச்சிய சிறுகோல் அஞ்சியொடு
உயவொடு வருந்து மன்னே''. (புறம். 310)

இங்குக் கூறப்பட்ட அஞ்சியைக் குறுநில மன்னன் என உ. வே. சா. இப் பாடலின் அடிக்குறிப்பில் தந்துள்ளார். இச் சொல் பயின்றுவரும் இடத்தை நோக்கும்போது 'அஞ்சுபவன்' எனப் பொருள் கொள்வதே இயைபாகும்.

ஒளவையாரும் அரிசில் கிழாரும் அதியமானைச் சிறப்பாகப் பாடியுள்ளனர். பரணர், மாமூலனார், இடைக்கழிநாட்டு நல்லூர் நத்தத்தனார், பெருஞ்சித்திரனார், அஞ்சியத்தைமகள் நாகையார் ஆகியோர் பாடல்களில் அதியனைப்பற்றிய செய்திகள் இடம் பெற்றுள்ளன.

புறநானூறு, பதிற்றுப்பத்தாகிய புற நூல்களிலேயன்றி அக நூல்களிலும் அதியனைப்பற்றிய செய்திகள் காணப்படுகின்றன.

புரவலர்களுக்கு இசைவழங்குகின்ற இரவலர்களின் விருப்பப் படி வழங்குகின்றவன் அதிகன் எனக் (அகம். 162 : 17-18) கூறு கின்றது.

அள்ளனை நாடுகொள்ளப் பணித்த அதிகன் இறந்தபிறகு, மாக்கிணை ஒலி அவிந்தது (அகம். 325 : 8, 9).

அதியனுடைய புகழ்க்குரிய செயல்களைப் பாடு பொருளாகக் கொண்டு புலவர்கள் பாப்புனைந்தனர். அவற்றிற்குப் பாணர்கள் பண்ணும் திறமுமாக இசைநூலில் எண்ணிய முறையில் இனிமை யான பண்ணமைத்துப் பாடினர் (அகம். 352 : 12-17).

பகைவர்களை வென்ற எழினி ஆனிரைகளைப் பகைவர்கள் மீட்காதவாறு காத்தான் (குறுந் : 80 : 4-7).

மாரிபோன்ற கொடையும், யானைப் படையும் தேர்ப்படையும் உடைய அஞ்சி பகைவர் அச்சுற்று இரவிலும் துயிலாதவாறு போர் முனையிற் சென்று தங்கினான் (குறுந். 91 : 5-8).

நெடுமானஞ்சி ஈரநெஞ்சத்துடன் நாளோலக்கத்தில் வீற்றிருந்து பரிசிலர்க்குத் தேர் வழங்கினான் (நற். 381 : 7-9).

புறம்பற்றிய பாடல்கள் அஞ்சியின் வீரத்தையும் கொடையையும் புலப்படுத்துவதோடு அவனைப்பற்றிய பிற செய்திகளையும் உணர்த்துகின்றன. தொண்டைமானிடம் தூது சென்ற ஔவையார் அவன் படைக்கலக் கொட்டிலைக் கண்டு புகழ்வதுபோலப் பழித்தும் அதியமானைப் பழிப்பது போலப் புகழ்ந்தும் குறிப்பாக அதிகனின் வீரத்தைப் பாராட்டியுள்ளார். அயல்நாட்டிலிருந்து அதிகனின் முன்னோர்கள் கரும்பு கொணர்ந்த செய்தியும் அதிகன் கோவலூரை அழித்த செய்தியும் ஔவையாரால் பாராட்டப்பெறுகின்றன. மலைமீது அரிதிற் பெற்ற நெல்லித் தீங்கனியைத் தானுண்டு நெடிது வாழக் கருதாது அதிகன் அதனை ஔவைக்கு நல்கினான். அதனைப் பெற்ற ஔவையார், தமக்கென வாழாது பிறர்க்கென வாழும் பண்பில் சிவபெருமானை ஒத்தல் கண்டு, 'நீல மணிமிடற் றொருவன் போல மன்னுக பெரும நீயே' என அவனை வாழ்த்தினார். இந் நிகழ்ச்சி அதிகனின் தன்னலமற்ற தன்மையினையும் ஔவை யாரின் செய்ந்நன்றி யறிதலையும் புலப்படுத்தும். ஔவையார் தம் வாய்ச்சொற்கள் அதிகனுக்குப் புதல்வர்தம் மழலைமொழிபோல இன்பம் செய்தன என்று குறிப்பிட்டுத் தம் ஈடுபாட்டைக் காட்டுவர்.

இவனது கொடைத்தன்மை பலவாறு புகழப்படுகின்றது. ஒரு நாள் இருநாள் அன்றிப் பலநாள் பலரொடு தொடர்ந்து சென்றாலும் முதல்நாள் போல விருப்பொடு விருந்தோம்புவான். செல்வமுள்ள காலத்தன்றி வறுமைக்காலத்தும் விருந்தோம்பும் அதிகன் இயல்பினை ஔவையார் பலவிடங்களில் சுட்டியுள்ளார்.

"உண்டாயிற் பதங்கொடுத்து
இல்லாயின் உடன் உண்ணும்
இல்லோர் ஒக்கல் தலைவன்". (புறம். 95 : 6-8)

"அலைத்தற் காலை யாயினும்
புரத்தல் வல்லன்". (புறம். 103 : 11-12)

"உடைய னாயின் உண்ணவும் வல்லன்". (புறம். 315-1)

"சிறியகட் பெறினே எமக்கீயும் மன்னே
பெரியகட் பெறினே
யாம்பாடத் தான்மகிழ்ந் துண்ணும் மன்னே."
(புறம். 235 : 1-3)

இவ்வடிகள் அதிகன் வறுமைப்பட்டதையும் அக்காலத்தும் கொடைமை மேற்கொண்டொழுகியதையும் உணர்த்துவனவாகும்.

அதிகன் நண்பர்கட்கு இனியவன்; பகைவர்கட்குத் தீயவன். குளிப்பாட்டும் பொழுது தன் கொம்பினைக் கழுவும் சிறுவரிடம் யானை பழகுவதுபோல நண்பரிடமும், மதம் பிடித்த நிலையில் அது பிறர்க்குத் தீமை செய்வது போலப் பகைவரிடமும் அதிகமான் இருப்பான் என அவ்வியல்பினை யானை உவமைகொண்டு விளக்குவார். தன் ஆற்றலை அடக்கிக்கொள்ளவும் வல்லன்; வேண்டுங்காலத்து அதனை வெளிப்படுத்தவும் வல்லன் என்பதற்குத் தீக்கடை கோலை உவமையாக்கிக் காட்டுவர். தீக்கடை கோல் வீட்டின் இறப்பில் செருகியிருக்கும்போது வாளா இருந்து கடையும்போது தீயை வெளிப்படுத்தும். ஆதலால் அவ்வியல்பு கருதி அஃது உவமை யாயிற்று (புறம். 315 : 5-8).

இவன் போர் செய்வதில் வல்லவன் என்பதைப் பலவகைகளில் வெளிப்படுத்துவர். மழவர் பெருமகனாகிய இவனுக்குத் தன் தவ மகன் பிறந்தானைக் கண்டும் போர்ச் சினம் மாறாமல் கண்ணெல்லாம் மிகச் சிவந்திருந்தன என்று கூறுவர் (புறம். 100). ஒரு நாளைக்கு எட்டுத் தேர் செய்யும் தச்சன் ஒரு திங்களுக்கு ஒரு சக்கரத்தை மட்டும் செய்தால் எத்துணைத் திண்மையுடையதாயிருக்குமோ அத்துணைத் திண்மையுடையவன் அதிகன். அவனது ஆற்றலுக்கு எதிராக எவரும் போர் செய்ய முடியாது என்பதனை, ‘மறப்புலி சினந்தெழின் மான்கூட்டம் எதிர்நிற்க முடியாது; கதிரவன் கனன்றெழுந்தால் இருள் முன்னிற்க இயலாது; வண்டியிழுக்கும் பெருமிதப் பகட்டுக்குத் தடையாக எவ்வித வழியும் இருக்க முடியாது’ என்ற மூன்றுவமைகளைக் காட்டி விளக்குவர். காலளவு நீரில் உள்ள முதலை பெரிய யானையையும் கொன்று வீழ்த்தி விடுவதுபோல் அதிகன் இளையனாயிருந்தே ஆற்றலொடு பெரிய மறவர்களையும் வீழ்த்திவிடுவான் என்று ஔவையார் கூறுகின்றார்.

ஔவையார் அதியனிடமுள்ள ஈடுபாட்டினைத் தம் கையறு நிலைப் பாடலில் காட்டியுள்ளார்.

"சிறியகட் பெறினே எமக்கீயும் மன்னே
பெரியகட் பெறினே
யாம் பாடத் தான்மகிழ்ந் துண்ணும் மன்னே".

"நரந்த நாறுந் தன்கையால்
புலவு நாறும் என்தலை தைவரும் மன்னே
ஆசாகும் எந்தை யாண்டுளன் கொல்லோ"

எனவரும் அடிகள் அதிகனின் அன்பை நினைந்து பாடிய ஔவை யாரின் இரக்க உணர்வைக் காட்டும்.

பகைவர் வேலால் அதிகன் மாய்ந்தான் என்பதை ஔவையார் அவலச் சுவை தோன்றப் பாடியுள்ளார்.

"அருந்தலை இரும்பாணர் அகன்மண்டைத் துளையுரீஇ
இரப்போர் கையுளும் போகிப்
புரப்போர் புன்கண் பாவை சோர
அஞ்சொல் நுண்டேர்ச்சிப் புலவர் நாவிற்
சென்றுவீழ்ந் தன்றவன்
அருநிறத் தியங்கிய வேலே" —(புறம். 235 : 10—15)

பகைவர் எறிந்த வேல் அதிகமான் மார்பில் மட்டுமா தைத்தது? இல்லை. பாணர் கையகத்திருந்த பாத்திரத்தைத் துளைத்து இரப்பவர் கையில் ஊடுருவிச் சென்று, புரக்கப்படும் சுற்றத்தாரின் கண்ணின் பாவையை ஒளி மழுங்கச்செய்து, இறுதியில் புலவர் நாவில் சென்று தங்கியது எனக் கூறிப் பலரது துன்ப நிலையை எடுத்துக் காட்டுகிறார்.

# 13. காப்பியக் கலைநலன்

[அறிஞர் தா. ஏ. ஞானமூர்த்தி]

**சங்ககால இலக்கியம் :**

காப்பியம் பழைமையான இலக்கிய வகைகளில் ஒன்று அஃது ஒரு பேரிலக்கியம். நமக்குக் கிடைத்துள்ள காப்பியங்களுள் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கவை சிலப்பதிகாரம், மணிமேகலை, பெருங்கதை, சிந்தாமணி, சூளாமணி, கம்பராமாயணம், வில்லிபாரதம் போன்றவையாகும். இவற்றில் மிகப் பழைமையானது சிலப்பதிகாரம்.

**காப்பியக் கதை :**

காப்பியம் ஒரு நாட்டில் நெடுங்காலமாகச் செவிவழக்காக வழங்கிவரும் ஒரு பழங்கதையைப் பொருளாகக் கொண்டு பாடப் பெறுவதாகும். நம் தமிழ்க் காப்பியங்கள் ஒவ்வொன்றும் ஒரு பழங்கதையையே பொருளாகக்கொண்டு அமைந்திருப்பதைக் காணலாம். நாட்டில் நெடுங்காலமாக வழங்கிவரும் கதையில்தான் அந்நாட்டின் பண்பாடு நன்கு ஊறியிருக்கும். இதனால்தான் எத்தனை முறை ஒரு காப்பியத்தில் அமைந்த கதையைக் கேட்டாலும், படித்தாலும் மேன்மேலும் நமக்குச் சுவை பெருகுகிறது. அக் காப்பியம் சிறிதும் தெவிட்டுவதில்லை. எனவே காப்பியமாகிய பேரிலக்கியத்திற்கு அத்தகைய பழங்கதையே பெரிதும் பொருத்தமுடையது.

**பாத்திரங்கள் :**

காப்பியத்திற்குப் பாத்திரங்களும் முக்கியமான கூறு ஆகும். பாத்திரங்கள் காப்பியக் கதைக்குப் பொருத்தமானவையாகவும்

எண்ணிக்கையில் மிகுதியாகவும் இருத்தல் வேண்டும். ஒவ்வொரு பாத்திரத்தையும் வெவ்வேறு இயல்புடையதாகப் படைப்பது காப்பியத்திற்குச் சுவை ஊட்டுவதாகும். கதை, நிகழ்ச்சிகள், பாத்திரங்கள் இம் மூன்றும் காப்பியத்திற்கு உரமூட்டுவதில் பாத்திரங்களே சிறப்பான கூறாக அமைகின்றன. வெறுங்கதையையும் நிகழ்ச்சிகளையும் மட்டும் கூறிச் செல்வது சுவை பயக்காது.

நம் தமிழ்க் காப்பியங்கள் ஒவ்வொன்றிலும் படைக்கப்பட்ட பாத்திரங்கள் நம் நினைவை விட்டு அகலாவகையில் அமைந்திருப்பதை உணரலாம். சிலப்பதிகாரத்தில் கோவலன், கண்ணகி, மாதவி போன்ற முதன்மையான பாத்திரங்களாயினும், மாதரி, ஐயை, மாடலன், பாண்டிய மன்னன், கோப்பெருந்தேவி, பொற்கொல்லன் போன்ற சிறுபாத்திரங்களாயினும் நம் நெஞ்சில் நன்கு பதிந்து நினைக்குந்தோறும் சுவையூட்டுவனவாய் உள்ளன. இங்ஙனமே ஏனைய தமிழ்க் காப்பியங்களிலும் பாத்திரங்கள் ஒவ்வொன்றும் நம் நெஞ்சைக் கவர்வதாய் உள்ளது.

**பல்கலைக் கொள்கலம் :**

ஒரு காப்பியத்தைப் பல்கலைக் கொள்கலம் எனலாம். ஒவ்வொரு காப்பியத்திலும் இயற்கலை, இசைக்கலை, நடனக்கலை, நாடகக்கலை. சிற்பக்கலை, ஓவியக்கலை முதலியனபற்றிய குறிப்புகள் ஆங்காங்கே அமைந்துள்ளன. பல கலைகளிலும் புலமை நிறைந்த ஒரு கவிஞரே ஒரு சிறந்த காப்பியத்தைப் படைக்க முடியும்.

சிலப்பதிகாரம் அரங்கேற்று காதையில் இசைக்கலை, நடனக்கலை, நாடகக்கலை, இசைக் கருவிகள் ஆகியவற்றின் நுட்பங்கள் நன்கு விளக்கப்பட்டுள்ளமையைக் காணலாம். இங்ஙனமே சீவக சிந்தாமணியிலும் பல கலைகளின் நுட்பங்கள் தெளிவுறுத்தப்பெற்றுள்ளன. காப்பியத் தலைவனாகிய சீவகன் இசை, ஓவியம், ஒப்பனை முதலிய கலைகளில் தலைசிறந்தவனாக விளங்குகிறான். அவன் காந்தருவதத்தையோடு யாழ்ப் போட்டியிடச் செல்கிறான். அவன் இசைப்பதற்குப் பல யாழ்கள் அவனுக்குத் தரப்படுகின்றன. ஒவ்வொரு யாழிலும் ஒவ்வொரு குறையைக் காண்கிறான். ஒரு

யாழினுடைய மரம் நெடுங்காலம் தண்ணீரில் இருந்ததால் வலிமை குறைந்ததென்றும், மற்றொரு யாழ் உடைந்த மரத்தினால் செய்யப் பட்டதென்றும், இன்னொரு யாழின் மரம் இடியினால் தாக்கப் பட்டது என்றும், மற்றொரு யாழ் எரிந்த மரத்தால் செய்யப்பட்டது என்றும் கூறி அவ் யாழ்களைத் தகுதியற்றவை என்று ஒதுக்கு கிறான். முடிவில் வீணாபதி என்ற காந்தருவதத்தையின் தோழி மிகச் சிறந்த யாழொன்றை அவனிடம் தருகிறாள். அதை நன்கு பரிசோதிக்கிறான். அது நல்ல மரத்தால் செய்யப்பட்டதென்று உரைக்கின்றான் (சிந். 720). பிறகு யாழினுடைய நரம்புகளைச் சோதிக்கிறான். அவற்றில் ஒரு நரம்பு குறையுடையதென்பதை அறிந்துகொள்கிறான். அந் நரம்பின் முறுக்கை அவிழ்த்து அதற் குள் இருந்த ஒரு மயிரிழையை எடுத்து எல்லோர்க்கும் காட்டுகின் றான் (சிந். 721). அதைக் கண்டதும் அரங்கில் குடியிருந்தோர் அனைவரும் அவனுடைய யாழ் அமைப்பு முறையின் புலமையை வியந்து போற்றுகின்றார்கள். பிறகு யாழை இசைக்கிறான். அவன் யாழிசையைக் கேட்டு விண்ணவர் வியக்கின்றனர்; விஞ்சை யர் போற்றுகின்றனர். பறவைகள் மெய் மறந்து சோர்வுறுகின் றன; மன்மதன் நாணுகிறான். (சிந். 729). இதிலிருந்து சீவக னுடைய இசைப்புலமை நன்கு புலப்படுகிறது.

அரசவையில் அனங்கமாலை என்ற அழகு மிக்க நங்கை நடன மாடுகின்றாள். அவள் ஆடலின் அழகிலே ஈடுபட்டுப் பலரும் நெஞ்சுருகுகிறார்கள். ஆடவர்கள் தம் உள்ளத்தை அவளிடம் பறி கொடுக்கிறார்கள். இதனைத் திருத்தக்கதேவர்,

> “ஆடவர் மனங்கள் என்னும் அரங்கின்மேல் அனங்கமாலை
> ஆடினுள்...... .........” —(சிந். 683)

என்கிறார்.

இதுபோலப் பல கலைகளினுடைய குறிப்புகள் நம் தமிழ்க் காப்பியங்களில் ஆங்காங்கே காணப்படுகின்றன.

சிந்தாமணியில் குழந்தை மருத்துவம் கூறப்படுவது குறிப்பிடத் தக்கது.

கஞ்சியில் தராய் சாறு, கற்கண்டு, நெய் இவைகளை இட்டு, பொன்னால் அதை நன்றாகத் தேய்த்துக் குழந்தை பிறந்து சில நாட்களுக்குக் கொடுக்கவேண்டும். பிறகு தேனில் அதிவிடயத்தையும் திப்பிலியையும் தேய்த்துத் தொடர்ந்து குழந்தைக்குக் கொடுத்து வருதல் வேண்டும்.

குழந்தையின் வாயும் கண்களும் பெரிதாகும்படி நகத்தால் அவற்றை அகலமாக்க வேண்டும். குழந்தையின் மூக்கு எடுப்பாக இருப்பதற்கு, அதன் உள்நாக்கை உரிஞ்சி மூக்கை உயர்த்த வேண்டும் (சிந். 2703).

பல்தேய்ப்பதற்குத் தற்காலத்தில் விலையுயர்ந்த பற்பசைகளை நாடுகிறோம். பத்துக் காசு செலவிலே நாமே வீட்டில் செய்து கொள்ளுதற்குரிய பற்பொடியைத் திருத்தக்கதேவர் தம் காப்பியத்தில் குறிப்பிடுகிறார்.

கடுக்காயைச் சுட்டுப் பொடிசெய்து நம் பல்லைத் தேய்த்தால் நம் பற்கள் சுடர்விட்டு ஒளி வீசும் என்கிறார்.

"கடுசுட் டுரிஞ்சக் கதிருமிழ்ந்து" (சிந். 2703)

என்பது சிந்தாமணி அடி.

இங்ஙனம் நம் தமிழ்க் காப்பியங்கள் பல கலை நுட்பங்களையும் நம் நல்வாழ்வுக்குரிய முறைகளையும் உணர்த்துகின்றன.

**காப்பியநடை :**

காப்பியத்தின் செய்யுட்கள் உயர்தனிச் செம்மொழியில் அமைந்திருத்தல் வேண்டும். அதன்கண் இழிசொல்லோ, தொடரோ, இடம்பெறக் கூடாது. காப்பியச் செய்யுட்கள் கற்பனை நயமும் குறிப்புப் பொருளும் நிறைந்து நாம் படிக்குந்தோறும் நம் உள்ளத்தில் சுவையினை ஊற்றெடுக்கச் செய்கின்றன.

கோவலனும் கண்ணகியும் கவுந்தியடிகளோடு புறஞ்சேரியை அடைகின்றனர். அங்குள்ள ஏரி, வயல்கள் முதலியவற்றில்

குவளை, ஆம்பல், தாமரை ஆகிய கொடிகள் செழித்து வளர்ந்து, பூத்து விளங்குகின்றன. அம் மலர்களிலிருந்து தேன் துளிக்கிறது. அத் தேனை உண்ணவரும் வண்டுகள் ஒலிக்கின்றன. காற்றினால் அப் பூங்கொடிகள் அசைகின்றன. இவ்வியற்கைக் காட்சியை இளங்கோவடிகள் ஓர் அழகான கற்பனையாகப் படைத்து நம் நெஞ்சம் உருகுமாறு செய்கிறார். குவளை, ஆம்பல், தாமரை ஆகிய மலர்கள் கண்ணகி, கோவலன் ஆகியோரின் துயரைக்கண்டு கண்ணீர்விட்டுப் புலம்பி, வருத்தம் தாங்கமுடியாமல் அவைகளின் கால்கள் நடுங்குகின்றன என்று கவிஞர் கற்பனை செய்கிறார். அம் மலர்களிலிருந்து தேன் துளிப்பது அவை கோவலன், கண்ணகி துயரத்தைக் கண்டு கண்ணீர் விடுகின்றன என்றும், தேனை அருந்த வண்டுகள் ஒலித்துக்கொண்டு மொய்ப்பது அவர்கள் துன்பத்தைக் கண்டு அம் மலர்கள் வாய்விட்டுப் புலம்புகின்றன என்றும் அம் மலர் களின் கொடிகள் காற்றில் அசைவது வருத்தம் தாங்கமுடியாமல் அவைகளுடைய கால்கள் நடுங்குகின்றன என்றும் கற்பனை செய்கிறார்.

''கருநெடுங் குவளையும் ஆம்பலும் கமலமும்
தையலுங் கணவனும் தனித்துறு துயரம்
ஐய மின்றி அறிந்தன போலப்
பண்ணீர் வண்டு பரிந்தினைந் தேங்கிக்
கண்ணீர் கொண்டு காலுற நடுங்க''

(சிலம்பு - புறஞ். 184-188)

என்று இளங்கோவடிகள் பாடுகிறார்.

இராமனும் இலக்குவனும் கோசிக முனிவரோடு ஒரு பாலை வனத்தைக் கடந்து செல்கின்றனர். அப் பாலைவனம் பொறுக்க முடியாத வெப்பம் நிறைந்ததாய் இருக்கிறது. அவ் வெம்மைக்குரிய காரணத்தை இராமன் முனிவரிடம் வினவுகிறான். அதற்குக் கோசிகமுனிவர் அக் காட்டில் 'தாடகை' என்ற கொடிய அரக்கி யொருத்தி வாழுகிறாள்; அதனால்தான் அக் காடு அத்துணை வெப்ப முடையதாய் விளங்குகின்றது என்று கூறுகிறார்.

"ஆடவர் பெண்மையை அவாவும் தோளினாய்
தாடகை என்பதுஅச் சழக்கி நாமமே"
(கம்பராமாயணம்-தாடகை 24)

என்பன கம்பராமாயண அடிகள். இராமனுடைய தோளழகினை ஆடவர் காண்பாராயினும் தாம் அவ் வழகிய தோள்களைத் தழுவிக் கொள்ளப் பெண்களாய் இருக்கக்கூடாதா என்று ஏங்குவர் என்ற பொருளினை 'ஆடவர் பெண்மையை அவாவும் தோளினாய்' என்ற அடி குறிக்கிறது. விசுவாமித்திர முனிவரே தாம் இராமன் தோளைத் தழுவிக்கொள்ளப் பெண்ணாக இருக்கக்கூடாதா என்று ஏங்குவது போல இந்த அடியின் பொருள் அமைந்துள்ளது. இவ்வாறு கம்பன் கூறுவது இராமனுடைய வருணிக்க முடியாத பேரழகைச் சுட்டுவ தாகும். கம்பர் இராமன் அழகை இக் கருத்துப்படப் பாடியிருப்பது அவருடைய தனிக் கற்பனை என்று கூற இயலாது.

"கண்ணவாம் வனப்பி னானைக் காமனே கண்ட போதும்
பெண்ணவா நிற்கும் என்றால் பிணையனாட்கு
உய்த லுண்டோ." (சிந். 1528)

தன் மனைவியாகிய கேமசரியைச் சீவகன் பிரிந்து செல்கிறான். அவன் பிரிவைத் தாங்க இயலாமல் கேமசரி மிகவும் துன்புறுகிறாள். இல்லுறை தெய்வம் அவள்மீது இரக்கம் கொள்கிறது. அத் தெய்வம் சீவகன் பேரழகை நினைந்து வியக்கிறது. "சீவகன் அழகைக் காமனே காண்பினும், அவன் அவ்வழகில் தன் உள்ளத் தைப் பறிகொடுத்து அவ் வழகைத் துய்ப்பதற்குத் தான் பெண்ணாக வேண்டும் என்று விரும்புவான். அவ்வளவு அழகு பொருந்திய சீவகனைப் பிரிந்து கேமசரி எவ்வாறு உயிர் வாழ முடியும்" என்று அத் தெய்வம் நினைக்கிறது.

இச் சிந்தாமணி அடியின் கருத்தையே இராமன் அழகிற்குப் பொருத்திக் கம்பர் பாடியிருக்கிறார் என்பது நன்கு தெளிவாகிறது.

முன்னைய கவிஞர்கள் தம் இலக்கியங்களில் பாடிய கருத்து களையும் சொற்றொடர்களையும் பின்னைய கவிஞர்கள் தம் நூலில் பயன்படுத்திக்கொள்ளும் மரபு பழங்காலத்தில் இருந்தது. இதனை

முன்னைய பெருங்கவிஞர்களுக்குத் தாம் அளிக்கும் பெருமையாகவும் கருதினர். இவ் வுண்மையை,

"முன்னோர் மொழிபொருளே யன்றி அவர்மொழியும்
பொன்னேபோற் போற்றுவம் என்பதற்கும் ....."
—(நன். பொதுப். நூ. 9)

என்ற நன்னூல் பொதுப்பாயிர நூற்பா உணர்த்துகிறது.

வாழ்வியல் உண்மைகள் :

காப்பியங்களில் சிறந்த வாழ்வியல் உண்மைகள் நிறைந்து அவற்றிற்கு நிலைபேறுடைய தரத்தினை நல்குகின்றன. சிலப்பதிகாரம்,

"அரைசியல் பிழைத்தோர்க்கு அறங்கூற் றாவதூஉம்
உரைசால் பத்தினிக் குயர்ந்தோர் ஏத்தலும்
ஊழ்வினை யுருத்துவந்து ஊட்டும் என்பதும்"
—(சிலம்பு. பதிகம் 55–57)

ஆகிய இப் பேருண்மைகளை உணர்த்துவதாகப் பாயிரம் பேசுகிறது. இவை சிலப்பதிகாரம் கூறும் உண்மைகளாயினும் இவற்றினும் சீரிய உண்மை ஒன்றைச் சிலப்பதிகாரம் நன்கு உணர்த்துகின்றது. அஃதாவது, ஒருவன் தன அருமைப் பத்தினியைப் பிரிந்து அவள் பல காலம் கண்ணீர் பெருக்கிக் கலங்கும் வண்ணம் மற்றொருத்தியை அடைந்து வாழ்பவன் தன் அழிவினின்றும் தப்பவே முடியாது என்ற பேருண்மையைச் சிலப்பதிகாரம் சிறப்பாக உணர்த்துவதாகக் கருதலாம்.

கம்பராமாயணம், ஒருவன் பல பண்புகளாலும் ஆற்றலாலும் தலைசிறந்து விளங்கினும் அவனிடம் ஆணவம் மிக்கிருக்குமானால் அவன் அழிந்தே தீருவான் என்ற உண்மையைச் சிறப்பாக உணர்த்துகிறது எனலாம். இராவணன் பல சீரிய பண்புகளும் நிறையப் பெற்றவன்.

"ஈசனை இமையா முக்கண் இறைவனை இருமைக் கேற்ற
பூசனை முறையிற் செய்து திருமறை புகன்ற தானம்
வீசினன் இயற்றி மற்றும் வேட்டன வேட்டோர்க் கெல்லாம்
ஆசற நல்கி ஒல்காப் போர்த்தொழிற் கமைவ தானான்"
—(கம்ப. இராவணன். தேர் ஏறு. 3)

இராவணனின் தெய்வ பக்தியும் அவன் வேத விதிப்படி தவறாமல் செய்த தானங்களின் தன்மையும் விரும்பியோர்க்கெல்லாம் விரும்பிய வாறு வழங்கிய அவன்தன் வள்ளன்மையும் இப் பாடலினின்றும் அறிகிறோம்.

இத்துணை தெய்வ பக்தியும், பிறர்க்கு வரையாது வழங்கும் வள்ளன்மையும் இவை போன்ற பிற அருங்குணங்களும் நிறைந்த இராவணன் சீதையைக் கவர்ந்துவந்து சிறைவைத்தது தன்னை எவராலும் வெல்ல முடியாது என்ற ஆணவ மிகுதியினாலேயேயாம். இவ் வாணவத்தினுலேயே அவன் முடிவில் அழிவு எய்துகிறான்.

இவ்வுலக இன்பத்தை மக்கள் உடலார, உயிரார முழுமையாகத் திளைக்க வேண்டும். ஆனால் அங்ஙனம் அதனைத் துய்க்குங்கால் அதற்கு அவர்கள் அடிமையாகக் கூடாது. இவ்வாறு இவ்வுலக இன்பத்தைத் துய்க்கும் ஒருவரின் உள்ளம் நாளடைவில் பக்குவ மடைந்து இந்த உலக நிலையாமையை உணர்ந்து பேரின்ப நிலையை எய்த முயலும். இவ்வுண்மையே சிந்தாமணியில் ஏனைய உண் மைகளைக் காட்டிலும் விளங்கித் தோன்றுகிறது.

சீவகன் பாவையர் எண்மரை மணந்து இவ்வுலக இன்பத்தை முழுமையும் துய்த்ததன் பயனாகத்தான் அவன் உள்ளம் மிகவும் பக்குவ நிலையை எய்துகிறது. இப் பக்குவநிலையை எய்தியிருந்த தால்தான், சோலைக் காவலன் பெண் குரங்கு கையில் இருந்த பலாப்பழத்தைப் பிடுங்கிக்கொண்ட காட்சியைக் கண்டதும் அவன் மனம் துறவறத்தை நாடியது.

"கைப்பழ மிழந்த மந்தி கட்டியங் கார னொத்தது
இப்பழந் துரந்து கொண்ட சிலதனும் என்னை ஒத்தான்

இப்பழம் இன்று போகத் தின்பமே போலும் என்று
மெய்ப்பட வுணர்வு தோன்றி மீட்டிது கூறி னானே"
—(சிந். 2726)

என்ற சிந்தாமணிப் பாடல் சீவகன் மெய்யுணர்வு பெற்ற திறத்தைக் கூறுகின்றது. இதனின்றும் இவ்வுலக இன்பத்தை முழுமையாகத் திளைக்கும் ஒருவனே முடிவில் இவ் வின்பத்தின் நிலையாமையை உணர்ந்து நிலைபேறுடைய பேரின்பம் எய்த வேண்டும் என்ற மெய் யுணர்வைக் கொள்ள முடியும் என்பது புலனாகின்றது.

இங்ஙனம் நம் தமிழ்க் காப்பியங்களில் சீரிய பண்பாட்டுக் கூறுகளும், பல கலைகளின் நுட்ப விளக்கமும், மனிதனின் உயர் நிலை எய்துதற்கான சிறந்த வாழ்க்கை உண்மைகளும் நிறைந்து அவை என்றும் பயன்படத்தக்க பேரிலக்கியங்களாகத் திகழ்கின்றன.

# 14. கவிஞன்—ஓர் உளவியல் அறிஞன்

[பேராசிரியர் செ. இர செயச்சந்திரன்]

மனித உள்ளம் மிக நுட்பமானது. உள்ளத்தின் நிலையே ஒருவனுக்கு உயர்வையும் தாழ்வையும் தருகின்றது. உள்ளத்தில் தோன்றுகின்ற கருத்துகள் உயர்ந்து செல்லச்செல்ல அவனும் உயர்நிலையடைகிறான். அவை இழிந்த கருத்துகளாயின் அவன் இழிநிலையடைகிறான். மனிதனுடைய வாழ்வும் வளமும், சீரும் சிறப்பும், பேரும் புகழும் அவனுடைய உள்ளத்தின் ஊக்கத் தாலேயே அமைகின்றன. எனவேதான் திருவள்ளுவரும்,

> "வெள்ளத் தனைய மலர்நீட்டம் மாந்தர்தம்
> உள்ளத் தனையது உயர்வு"

என்றார். மனிதன் கூடி வாழும் இயல்புடையவன். அவன் தன் மகிழ்ச்சியையும் துன்பத்தையும் பிற உணர்வுகளையும் மற்ற மக்களு டன் சேர்ந்து அனுபவிக்கவே விரும்புகின்றான். மனிதன் சமுதாயத் தினுடைய ஓர் உறுப்பாக விளங்குவதால் கல்வித் துறையில் இன்று, கற்பவனுக்கோ, கற்பிக்கப்படும் பொருளுக்கோ அளிக்கப்படும் சிறப்பை விட அதிகச் சிறப்பு சமுதாயத்திற்கு அளிக்கப்படுகிறது. கல்வியின் நோக்கமே உள்ளத்தைப் பண்படுத்துவதுதான் என இன்று கருதப்படுகிறது. சமுதாயத்திலுள்ள பிற மக்களுடன் ஒன்று பட்டு வாழ ஒருவனுடைய உள்ளத்தைப் பண்படுத்துவதே கல்வியின் குறிக்கோள் என மேலைநாட்டு அறிஞர்கள் குறிப்பிடுகின்றனர். இதே கருத்தைத் திருவள்ளுவரும்,

> "உலகத்தோடு ஒட்ட ஒழுகல் பலகற்றும்
> கல்லார் அறிவிலா தார்"

என்னும் குறளில் வலியுறுத்துகிறார். மக்கள் வாழ்க்கையில் உள்ளம் தான் உயரிய இடத்தைப் பெறுகின்றது. ஒருவன் சொல்லாலும்,

செயலாலும் தூய்மையாக இருந்தாலும் உள்ளத்தில் தூய்மை இல்லாவிடில் அவற்குச் சிறப்பில்லாமற் போய்விடுகிறது. மனத் தூய்மை இல்லாத மற்றவை வெறும் ஆரவாரத் தன்மையுடையவை எனத் திருவள்ளுவர் கூறுவதை,

''மனத்துக்கண் மாசிலன் ஆதல் அனைத்துஅறன்
ஆகுல நீர பிற''

என்னும் குறளில் காணலாம்.

உள்ளத்தின் செயல் முறைகள், அது சூழ்நிலைக்கேற்பவும் பிற வகையாலும் மாறுதல், பிறழ்வு நிலைகள் ஆகியவைபற்றியெல்லாம் இன்று விரிவாக ஆய்வு செய்யப்படுகிறது. உடல் நோய்களுக்கு மருத்துவரை நாடுதல்போல இன்று மனநோய்களைத் தீர்க்கவும் மருத்துவரை மக்கள் நாடுகின்றனர். செய்யத்தக்கன, தகாதன என வேறுபடுத்தி அறியாது தகாதவற்றைச் செய்து தவறிழைக்கின்றனர் சிலர். செய்ய வேண்டியவற்றைச் செய்யத் தவறுவதாலும் வாழ்க்கையில் தோல்வியுறுகின்றனர் சிலர். அறிந்து நடப்பவனுக்கு வாழ்க்கை ஓர் இனிய அனுபவமாகவும், அறியாமையில் உழல்பவனுக்கு வாழ்க்கையே ஒரு போர்க்களமாகவும் ஆகிவிடுகின்றன.

கவிஞன் தான் வாழுங் காலத்தைப்பற்றிய வண்ண ஓவியங்களைத் தீட்டுகின்றான். உள்ள உணர்வுகளுக்கு உருக்கொடுத்து உயிரோட்டமுள்ள கவிதைகளை உருவாக்குகின்றான். வாழ்க்கையின் அடிப்படையான உணர்வுகளைக் கொண்டு எழுதப்பெறும் இக் கவிதைகள், காலத்தால் அழியாது, எக்காலத்துக்கும் பொருந்தும் ஏற்றமுடையனவாக விளங்குகின்றன. கற்போருக்கு இவை இன்பமூட்டுவதுடன் இனிய படிப்பினைகளையும் தருகின்றன.

தலைவி, தலைவனோடு கூடியிருந்து நடாத்தும் இல்லறத்தைக் கண்டு, மகிழ்ந்த செவிலி, தான் கண்ட காட்சியை நற்றாயிடம் வந்து எடுத்துரைப்பதைக் கூடலூர்கிழார் குறுந்தொகையில் படம் பிடித்துக் காட்டுகிறார்.

''முளிதயிர் பிசைந்த காந்தள் மெல்விரல்
கழுவுறு கலிங்கம் கழாஅது உடீஇ
குவளை உண்கண் குய்ப்புகை கழுமத்
தான்துழந் தட்ட தீம்புளிப் பாகர்
'இனிது' எனக் கணவன் உண்டலின்
நுண்ணிதின் மகிழ்ந்தன்று ஒண்ணுதல் முகனே.''

நல்ல தயிரைப் பிசைந்த காந்தள் மலரைப் போன்ற தன் மெல்லிய விரல்களைத் தன் ஆடையிலே துடைத்துக்கொள்ளும் தலைவி, அந்த ஆடையை மாற்றக்கூட நினையாது, குவளை மலரைப் போன்ற அவளுடைய கண்களில் புகை நிறையத் துழாவிச் சமைத்த இனிய புளிக்குழம்பினை, 'இனிது' எனப் பாராட்டியபடி தன் கணவன் உண்பதனால் ஒள்ளிய நுதலையுடைய அத் தலைவி யின் முகமானது நுண்ணிதாக மகிழ்வு கொண்டது.

இப் பாடலில், தலைவனும் தலைவியும் நடத்தும் இல்லறம் சிறப்பாக உள்ளது என்ற கருத்தை விளக்கும் கூடலூர் கிழார், உலகிலுள்ள கணவர்களுக்கும் மனைவிகளுக்கும் சில நல்ல கருத்து களை வழங்கியுள்ளார். ஆடை மாற்றி அலங்காரம் செய்துகொள் வதைவிட ஆருயிர்க் கணவனுக்குக் காலத்தில் உணவு படைக்க வேண்டுமென்ற ஆர்வம் அவளிடம் இருப்பதை நாம் காண்கிறோம். கண்களில் புகை படியச் சமைத்த உணவை நன்கு சுவைத்து 'இனிது' எனப் பாராட்டி உண்கிறான் கணவன். அந்தப் பாராட்டு ரையைக் கேட்டுப் பெரிதும் மகிழ்ந்தாலும் அதைச் சிறிதே வெளிக் காட்டும் அடக்கத்தையும் தலைவியிடம் காண்கிறோம். இப் பாடல் மூலம் கூடலூர் கிழார் கணவன் மனைவியின் இனிய இல்லறம் சிறக்கத் தேவைப்படும் அடிப்படைச் செய்திகள் பலவற்றைக் கூறு கிறார். அன்புடன் கூடிய மனைவியின் கடமையுணர்ச்சி, அவள் உணவு படைக்கும் சிறப்பு, படைத்த உணவை உண்டு மகிழும் கணவன், உணவு படைத்தல் அவளுடைய கடமைதானே எனக் கருதி வாளாவிராமல் 'இனிது' எனக் கூறிப் பாராட்டும் பண்பு, அந்தப் பாராட்டுரையைக் கேட்டு மனைவி பெறும் மகிழ்ச்சி, ஆகியவை இப் பாடலைச் சுவைத்துப் படிப்போர் பெறும் உளவியல் படிப்பினைகள்.

நாயன்மார்களும் ஆழ்வார்களும் இறைவனைத் தலைவனாகவும் தம்மைத் தலைவியராகவும் கொண்டு பாடிய பாடல்கள் தமிழில் மிகுதியாக உள்ளன. திருஞான சம்பந்தரின் அத்தகைய பாடலொன்றை இங்கே காண்போம்.

'சிறையாரு மடக்கிளியே யிங்கேவா தேனொடுபால்
முறையாலே உணத்தருவன் மொய்பவளத் தொடு தரளத்
துறையாருங் கடற்றோணி புரத்தீசன் துளங்குமிளம்
பிறையாளன் திருநாம மெனக்கொருகாற் பேசாயே''

தலைவி கிளியை அழைக்கிறாள். எத்தகைய கிளி? சிறகை அடித்துக்கொண்டிருக்கும் இளங்கிளி. சிறகை அடித்துக்கொண்டிருப்பதிலிருந்தே அஃது உறங்கவில்லை என்பதும் ஊக்கமாக உள்ளது என்பதும் தெரிய வருகின்றன. கிழக்கிளியாக இருந்தால் முதுமையின் காரணமாகச் சோர்வு ஏற்படலாம். இது கிழக்கிளியா? இல்லை, இளங்கிளி. அந்தக் கிளியை அழைக்கிறாள் தலைவி. அழைத்து என்ன சொல்கிறாள்? இனிய பொருள்களைத் தருவதாகச் சொல்கிறாள் வேலையைக் கூறுமுன் அதற்கு இனிய உணவைத் தருவதாகச் சொல்கிறாள். அதை உண்டபின் தோணி புரத்தீசன் திருநாமத்தை ஒரு முறை (அந்த இனிய உணர்வோடு) கூறு என வேண்டுகிறாள். இப் பாடலின் மூலம் வேலை வாங்கும் முறையையும் எவரை எப் பணிக்குப் பயன்படுத்த வேண்டுமென்ற உளவியல் கருத்தையும் அறிவுறுத்துகின்றார்.

''இதனை இதனால் இவன்முடிக்கும் என்றாய்ந்து
அதனை அவன்கண் விடல்''

என்னும் திருக்குறளின் கருத்தையும் இப் பாடலில் காண்கிறோம்.

எந்தச் செயலில் ஈடுபட்டாலும் நம் உள்ளம் ஒன்றி ஈடுபட வேண்டும். செய்யும் செயலில் கருத்தைச் செலுத்தாவிடில் அச் செயலால் பெறும் பயனைப் பெற வியலாது. ஓர் ஏட்டைப் படிக்கும்போது அதில் கருத்தைச் செலுத்தாது படித்துக்கொண்டே போனால் ஏடுகளைப் புரட்டலாம்; ஆனால் மனத்தில் எதுவும்

பறியாது. இக் கருத்தைப் பாவேந்தர் பாரதிதாசன் கூறுவதைக் காண்போம்.

"கூடத்திலே மனப்பாடத்திலே—விழி
கூடிக் கிடந்திட்ட ஆணழகை
ஓடைக்குளிர் மலர்ப் பார்வையினால்—அவள்
உண்ணத் தலைப்படு நேரத்தில்
பாடம் படித்து நிமிர்ந்த விழி—தனில்
பட்டுத் தெறித்தது மானின் விழி
ஆடைதிருத்தி நின்றாள் அவள்தான்—இவன்
ஆயிரம் ஏடு திருப்புகின்றான்."

'பசியால் வாடும் மக்களுக்குத் தேவை—உணவு; உபதேசமல்ல'—என விவேகானந்தர் கூறினார். அதைப் போன்று நித்த நித்தம் உழைத்துப் பயனின்றிப் போராடும் பசித்த மக்கள் இயற்கையழகைப் போற்றிப் புகழ்ந்துரைத்துக்கொண்டிருக்க முடியுமா? அவர்களுக்கு மகிழ்ச்சி தரக்கூடியது சோறுதான்—என்பதைக் கவிஞர் பாரதி தாசன் எடுத்துரைத்து அவர்களுக்கு மகிழ்ச்சியூட்ட, பசியால் வாடும் மக்களுக்குச் சோறிடு எனச் சொல்லாமற் சொல்கிறார். கவிஞன் அழகு நிலவைக் காணும்போது அவனுடைய உள்ளத்திலே தோன்றும் உணர்ச்சி பசித்த மக்களுக்குச் சோற்றைக் கண்டதும் உண்டாகும் என்பதை,

"நித்திய தரித்திர ராய் உழைத்துழைத்து
தினைத் துணையும் பயனின்றிப் பசித்த மக்கள்
சிறிது கூழ் தேடுங்கால் பானை ஆரக்
கனத் திருந்த வெண்சோறு காணும் இன்பம்
கவின் நிலவே உனைக் காணும் இன்பம் தானோ?"

என்னும் பாடல் மூலம் விளக்குகின்றார்.

'திங்களொடும் செழும் பரிதி தன்னோடும் விண்ணோடும் உடுக்களோடும், மங்குல் கடல் இவற்றோடும் பிறந்த தமிழுடன் பிறந்த' ஆண்மைச் சிங்கத் தமிழர்க்கு இன்னல் நேர்ந்தால் வெங் குருதிக் காக்காட்டில் எங்கள் வெற்றித் தோள்கள் விளையாடும்

என எச்சரிக்கும் கவிஞர், தமிழர்க்கு எங்கேனும் இன்னல் ஏற்பட்டால்,

"கொலை வாளினை எடடா—மிகு
கொடியோர் செயலறவே
குகையே வாழ் ஒரு புலியே உயர்
குணமேவிய தமிழா!"

என அழைக்கின்றார். குகையிலே பதுங்கியிருப்பது போன்று சட்ட திட்டங்களுக்கு அடங்கியும் பதவியைக் காக்கவும் கருதி நீ பதுங்காதே! விடுதலைப் புலியே நீ பாய்ந்து செல்! கொடியோர் செயலைத் தடுத்து நிறுத்து எனக் குமுறும் எரிமலையாக வெடிக்கிறார் கவிஞர்.

நீ, புலி என்பதை மறந்து எலி போல் வளைக்குள் பதுங்காதே! மாற்றார் உன்னை எலி என நினைத்து இகழ்வதைக் கண்டும், தமிழர்க்கு இன்னல் இழைக்கப்படுவதைக் கண்ட பின்னரும் தமிழ்ப் புலியே! தயக்கமேன்? தாவிச் செல்! விரைந்து செல்! வீணரை வீழ்த்து!! என வல்லொலிகளை எழுப்புகிறார் கவிஞர்.

"பூட்டிய இருப்புக் கூட்டின் கதவு
திறக்கப் பட்டது! சிறுத்தையே வெளியில் வா!
எலி என உன்னை இகழ்ந்தவர் நடுங்க
புலி எனச் செயல் செயப் புறப்படு வெளியில்!"

சிறுத்தைப்புலி மிக்க சீற்றமுடையது. விலங்குகளிலேயே விரைவாக ஓடக்கூடிய ஆற்றல் பெற்றது. விடுதலை செய்யப்பட்ட புலி எவ்வாறு விரைவாகப் பாயுமோ அவ்வாறு விரைவாகவும் எவ்வளவு சீற்றத்துடன் செல்லுமோ அவ்வளவு சீற்றத்துடனும், தமிழை, தமிழினத்தை இகழ்ந்தோரைத் தமிழர்கள் தாக்கப் புறப்பட வேண்டுமென்ற கருத்தைக் கவிஞர் உணர்த்துகின்றார்.

# 15. பாரதியாரின் கவிதைகளில் அக்காலச் சமுதாயப் போராட்டங்களின் பாதிப்பு

[பேராசிரியை இரத்தினாவதி ஜான்]

தமிழ் இலக்கிய வரலாற்றில் 1850—1950 வரை உள்ள ஒரு நூற்றாண்டு ஒரு தனித்தன்மை வாய்ந்தது எனலாம். இக் கால கட்டத்தின் ஒரு பகுதியே பாரதியின் காலமெனினும் பாரதியின் கவிதைச் சிறப்பும் ஆற்றலுங் கருதி அதனைப் பாரதியுகமெனக் கூறுவதுமுண்டு. இந்த நூற்றாண்டுச் சமுதாய வரலாற்றை ஆராய்ந்த திரு. யூசின் இர்ஸிக் என்பவர் தென்னிந்தியச் சமுதாயப் போராட்டங்கள் என்ற நூலில் இக் காலம் பல சமுதாய முரண்பாடுகளுக்கு இடமாக விருந்ததை விளக்கமாகக் குறிப்பிடுகிறார். இவருடைய நூலைப் படிக்குங் காலத்து இந்த நூற்றாண்டுக் கவிதையில் காணப்படும் இலக்கிய மாற்றல்களுக்கு முரண்பாட்டுச் சூழ்நிலையே காரணம் என்பதை உணரலாம்.

குறிப்பிட்ட ஒருகாலச் சூழ்நிலையில் எழுங்கவிதை அக்காலச் சமுதாயத்தின் உள்ளுணர்வேயாகும். பாரதி காலத்துச் சூழ்நிலை, கவிஞர்களிடையே நிலையாக வரையறுக்கப்பட்ட சில இலக்கியப் பழம் மரபுகளுக்கு மாறுபட்ட உயிர்த் துடிப்புடைய ஒரு புதுமையாக்கம் என்னும் புத்தார்வ உணர்ச்சிக் கோட்பாட்டிற்கியைந்த கவிதைகளைத் தோற்றுவித்தது. கவிஞர்கள் மனிதச் சூழ்நிலையில் மனித நேயத்துடன் அவனை முழுமையாகக் காண விரும்பும் ஒரு நிலை உருவாயிற்று.

---

1. Politics and Social Conflict in South India by Eugene F. Irschick.

இவ்வுருவாக்கத்திற்கு முன்னால் கவிதை சிறு பிரபந்தங்களாகவும், சொற் சிலம்பங்களாகவும் அரண்மனைகளிலும் செல்வர்களின் இல்லங்களிலும் பொழுது போக்காக அமைந்தது. பிரபந்தங்களின் பழைய மரபு உருவங்கள் உள்ளீடுகளாலும், சொல்லலங்காரங்களாலும் அணிகளாலும் புலமைச் செருக்கு நிறைந்த சொற்களாலும் நிரம்பப்பெற்று செயற்கைத் தன்மை பொருந்திக் காணப்பட்டன. இக் கவிதைகளைப் படித்த [2]கெல்லட் என்பவர் இலக்கியத் தமிழில் அதன் அழிவிற்குக் காரணமான நோயின் அறிகுறிகள் தோன்றிவிட்டன. இவ் வழிவைத் தடுக்காவிடின் மெல்லத் தமிழினிச் சாகும். இவ்வழிவைத் தடுப்பதற்குப் புலமைச் செருக்கு நிறைந்த சொற்கூட்டங்கள், பயனற்ற மரபுகள், கவிதையின் செயற்கைத் தன்மை, உள்ளீடுகளின் போலித்தனம் போன்றவற்றை நீக்கி இயற்கையான எளிய நடையைக் கவிதையில் பயன்படுத்த வேண்டும் என்று கூறுகிறார். [3]அறிஞர் போப் என்பவர் திரு சூரிய நாராயண சாஸ்திரிகளின் கவிதைத் தொகுப்பிற்கு எழுதிய முன்னுரையில் தமிழ்க் கவிதை தன்னுணர்வு இழந்து ஆழமான உறக்க நிலையில் செயலிழந்து கிடக்கிறது என்று குறிப்பிடுகிறார். செல்லரித்த் நெஞ்சின் சிறகொடிந்த கற்பனைகள், இடுப்பொடிந்த சந்தத்தில் இடறி விழுந்த கவிதைகள் என்று இக்கால இளைஞர்களால் குறிபபிடப்படுகின்றன இந்த நிலையிலிருந்துதான் மாறிய நிலையைப் பாரதி கால மாற்றம் என்கிறோம். இலக்கியம் புத்துணர்வு பெற்றது. தேங்கிக் கிடந்த கவிதை மக்களுக்குள் பாய ஆரம்பித்தது. இம் மாற்றம் தானாக எழுந்த ஒன்றன்று. கவிஞர்களுடைய மிக நல்ல உணர்ச்சிகள் பாதிக்கப்படும்பொழுது ஏதோ ஓர் ஆற்றல் அதாவது புறத்தாக்கம் அந்த நிலையை மாற்றுகிறது. இப் புறத்தாக்கத்தால் தாக்கப்பட்ட உணர்ச்சிகள் கவிதைகளாகின்றன. ஒரு புதிய சூழ்நிலை உருவாகின்றது. இப் புதிய சூழ்நிலையில் இயற்கையழகில் விருப்பு (Love of Nature), நாட்டுப் பற்று; மொழிப்பற்று (Nationalism, Patriotism, Sentimental,

---

2. F. E. Kellet.

3. G. U. Pope—Introduction to Tanipasuraththogai By V. K. S.

reverence of the motherland) பண்டைப் பெருமைகளைப் பாராட்டல், சமுதாய அநீதிகளைச் சாடல் போன்ற இயல்புகள் பொருளிலும்; எளிய சொற்கள், மக்களுக்குப் பிடித்த எளிய ஒலி அமைப்புகள், புதுமையான உருவங்கள்; உருவகங்கள், சிக்கலற்ற சொற் கோவை ஆகிய இயல்புகள் வடிவத்திலும் அமைகின்றன.

கால விழிப்புணர்ச்சியால் ஏற்பட்ட மாற்றம் கோபால கிருஷ்ண பாரதியிடமிருந்து பாரதிதாசன் வரை காணப்படுகின்றது. குறிப்பிட்ட இந்த நூறு ஆண்டுகளில் ஏற்பட்ட சமுதாய மாற்றம் வரலாற்றின் வேறு எக்காலத்திலும் ஏற்பட்டிருக்கும் என்பது ஐயப்பாட்டிற்குரியதே,

புத்தார்வ உணர்ச்சிக் கோட்பாட்டிற்குரிய பொதுவியல்புகள் அக் கால கட்டத்தில் எல்லாருடைய கவிதைகளிலும் காணப்படினும் அவரவருக்கே உரித்தான தனித்த இயல்புகள் சமுதாயச் சூழல் கவிஞர்களை வேறுவேறு விதமாகப் பாதித்துள்ளது என்பதைத் தெளிவுபடுத்துகின்றன. பாரதியார், பாரதிதாசன் ஆகிய இருவருடைய கவிதைகளையும் படிப்பவர்கள் இவர்கள் இருவருக்கும் இடையே நிரம்ப வேறுபாடுகளைக் காண முடியும். பாரதி பரந்த நோக்குடையவர் என்றும் பாரதிதாசன் குறுகிய நோக்கமுடையவர் என்றும் ஆய்வாளர் கூறுவதை அறிவோம். ஆனால் சமுதாய மாற்றங்கள் எல்லாரையும் ஒன்று போல் பாதிப்பதில்லை என்பதை நாம் அறிவதில்லை. சமுதாயத்தில் காணப்படும் அநீதியை நோக்கும் தனி மனிதனின் மனத்தில் கிளர்ந்தெழும் உணர்ச்சி அவனுடைய தனித்தன்மையைப் பொறுத்தது மட்டுமன்று சமுதாயத்தில் அவனிருக்கும் இடத்தையும் பொறுத்ததாகும். சமுதாய அநீதிகளும் எல்லாரையும் ஒன்றுபோல் பாதிப்பதில்லை. சமுதாய அநீதி உணரப்படுவதில் உணர்த்தப்படுவதில் உண்டாகும் உணர்ச்சியே சமுதாயப் போக்குகளை மாற்றும் எண்ணத்தை உண்டாக்க வேண்டும். அநீதியை அநீதி என்று ஒப்புக்கொள்ளும் நல்லுணர்வு தோற்றுவிக்கப்பட வேண்டும் என்பது [4]எம். என். சிரினிவாஸ் என்பவரால் சமுதாய மாற்றங்கள் என்ற நூலில் கூறப்பட்டுள்ளது.

4. M. N. Srinivas—Social Changes.

நல்லுணர்வு தோன்றுவதற்கும் தோற்றுவிக்கப்படுவதற்கும் பேராற்றலின் தாக்கமும் தேவைப்படுகின்றது. இப் பாதிப்பு அல்லது தாக்கம் இல்லையாயின் உறக்க நிலை கலையாமல் நீடிப்பதற்கும் வழியுண்டு. நம் நாட்டிற்கு இத் தாக்கம் ஆங்கிலேயரிடமிருந்து வந்தது. இத் தாக்கத்தை நான்கு பிரிவுகளாகப் பிரிக்கலாம்.

1. கிறிஸ்தவப் பாதிரிமார்களின் இந்து சமயத்தாக்குதல்: சாதிப்பிரிவு, தீண்டாமை, பெண்களின் இழிநிலை, குழந்தைத் திருமணம், பலதார மணம், கைம் பெண்டிரின் அவலநிலை முதலிய சமயத் தொடர்புடைய சமுதாய இழிநிலைகளை நேரடியாகத் தாக்கிப் பேசியதால் ஏற்பட்ட விழிப்புணர்ச்சி கல்வியறிவுடைய சிந்தனையாளர்களைப் பாதித்தது.

சமுதாயத்தின் கீழ் மட்டத்திலிருந்த மக்களைச் சமயமாற்றம் செய்ததால் சமுகக் கட்டுப்பாடுகளிலும் சமயப் பிடிகளிலும் தளர்வு ஏற்பட்டுச் சமுதாயத்தில் அசைவு உண்டாயிற்று.

2. ஆங்கிலக் கல்வியின் தாக்கம்—ஆங்கிலக் கல்வி மக்களுக்கு ஒரு புதிய உலகைப் படைத்துத் தந்தது. உலக அறிவுத் தாக்கம் ஏற்பட்டதுடன் பல்வேறு மொழிப் பிரிவுகளால் சிதறிக் கிடந்த இந்திய மக்களுக்குள் கருத்துப் பரிமாற்றத்திற்கு வழி வகுத்துத் தந்தது.

ஆங்கில இலக்கியத் தாக்கம்—விடுதலை வேட்கையை எழுப்பும் விடுதலை உணர்ச்சிப் பாடல்கள் இந்தியர்கள் உள்ளத்தில் தங்கள் அடிமைத்தனத்தின் அவநிலையை உணரச் செய்தன.

3. ஆங்கிலேயரின் இந்தியப் பண்பாட்டாராய்ச்சி: ஆங்கிலேயர் கண்ட இந்தியப் பண்பாட்டாராய்ச்சியின் முடிவுகள் இந்தியருக்குப் பாரம்பரிய உயரெண்ணத்தைத் தோற்றுவித்து, மூடப் பழக்க வழக்கங்களாலும் சடங்காச்சாரங்களாலும் பழிக்கப்பட்டிருந்தமையால் ஏற்பட்ட தாழ்வு மனப்பான்மையினின்றும் விடுபட உதவின, பயனாக பரம ஹம்ஸரின் குறை தீர்ந்த இந்து சமயக் கொள்கைகள் நாடெங்கும் பரவின. வேதங்களும் வேதாந்தங்களும்

பகவத்கீதையும் ஆங்கிலத்தில் மொழி பெயர்க்கப்பட்டதால் பிராமண ரல்லாதார்க்கும் வேத அறிவு கிட்டவே பழமையில் ஒரு பற்று ஏற்பட்டது. ஆங்கிலத்திற்கு இந்தியப் பண்பாடு அடிமைப்பட்டுக் கிடக்கும் நிலையைத் தெளிவாக்கிற்று. வடநாட்டில் இராஜாராம் மோகன்ராய் சமயத்திலும் சமுதாயத்திலும் கொண்டுவந்த சீர் திருத்தங்களின் அளவிற்குச் சமரச சன்மார்க்கத்தை உருவாக்கிய இராமலிங்க சுவாமிகளால் தமிழ்நாட்டில் ஒரு பெரிய மாற்றத்தைக் கொண்டு வர இயலாமல் போயிற்று. ஆயினும் திராவிட மொழி யாராய்ச்சியும், சைவ சித்தாந்தக் கொள்கைகளைப்பற்றி ஆய்வாளர் கொண்ட முடிவும், பாராட்டுரைகளும் தமிழ்மக்களை அவர்களது மயக்கத்தினின்று விடுபடச் செய்தன. தமிழ்மொழி வடமொழிக்கு அடிமைப்பட்டுக் கிடந்ததையும், தமிழ்ப் பண்பாடு பெருமளவிற்கும் பாதிக்கப்பட்டுத் தன் தனித்தன்மை இழந்து நின்ற நிலையையும் புரிய வைத்தது, இவ்வாராய்ச்சி தமிழ்நாட்டில் ஆரிய திராவிடப் போராட்டத்திற்கு வித்தூன்றிற்று. ஒரு பக்கம் நாட்டு விடுதலைப் போராட்டம்; மறுபுறம் சமய சமுதாயப் போராட்டம் எனப் பல போராட்டங்கள் தமிழ்நாட்டின் சூழ்நிலையைப் பாதித்தன. இக் காலச் சூழ்நிலைதான் பாரதியாருக்கு ஓர் உள்ளுணர்ச்சிச் சிக்க லான (Complex Situation) சூழ்நிலையினையும் பாரதிதாசனுக்குச் சார்பான சூழ்நிலையினையும் உருவாக்கிற்று. பாரதியாருடைய உள்ளுணர்ச்சிச் சிக்கல் நிலை அவருடைய கவிதைகளில் வெளிப் படுவதை ஆய்வதே இக் கட்டுரையின் நோக்கம்.

இச் சூழல் பாரதியாருக்குச் சார்பாகவும் அதே நேரத்தில் எதி ராகவும் அமைந்துவிடுதலைக் காணலாம்.

1. சமுதாயத்தின் படிநிலையமைப்பில் (Social hierarchy) பிராமணராக இருந்த காரணத்தால் நாட்டில் ஓர் உறுதியான இடத்தில் நிற்கும் வாய்ப்பு அவருக்கு இருந்தது. யாரையும் எதிர்ப் பதற்கும், எதனோடும் போராடுவதற்கும், எதையும் சாடுவதற்கும் உரிமையிருந்ததால் கவிதையில் சமுதாய அநீதியை வெளிக்காட்டு மிடத்தில் பகையுணர்ச்சியோ கசப்புத்தன்மையோ வெளிப்படுதற்கு இடமில்லை.

2. வேதங்கள் வேதாந்தங்கள் பகவத்கீதை ஆய்வுகள்மூலம் கிடைத்த பெருமையில் பங்கிருந்ததால் அவருக்குக் கிட்டிய பாரம்பரியப் பெருமை, தன்னம்பிக்கை, உயர்வு மனப்பான்மை முதலியன அவரைத் தலை நிமிர்ந்து நிற்கச் செய்தன.

3. ஆங்கிலக் கல்வியும் வடமொழிக் கல்வியும் அவர் உடையவராயிருந்ததால் இந்திய மக்கள் அனைவருடனும் நட்புரிமையுடன் பழகுவதற்கும் பிறமொழியாளரோடு உறவாடுவதற்கும், ஆங்கிலேயருடன் தொடர்பு கொள்ளுவதற்கும் வாய்ப்பு அதிகமாயிருந்தமையால் நாட்டு விடுதலைப் போரில் அவரால் பெரிதும் ஈடுபாடு கொள்ள முடிந்தது. உரிமை வேட்கையை எழுப்பும் மேனாட்டுக் கவிதைகள் அவரது உணர்விற்கு உரமூட்டின.

4. தமிழில் பயிற்சியும் கவிதையியற்றும் திறமையும் இருந்ததால் பொறுப்புணர்ச்சியுடனும் உயிர்த் துடிப்புடனும் தம் கருத்துகளுக்கு இனிய கவிதை வடிவந் தரும் பேற்றினைப் பெற்றிருந்தார்.

சார்பாக இருந்த இவைகளே எதிரான பலனைத்தரும் நிலையையும் காணலாம்.

1. அவர் பிராமணராயிருந்த காரணத்தால் சாதிக் கொடுமைக்குக் காரணமாயிருந்த இனத்தைச் சார்ந்தவர் என்பதால் தமிழர்களது ஆரிய திராவிடப் போராட்டத்தால் தம்மீது ஐயம் ஏற்படாமல் தமிழ் மக்களது நல்லெண்ணத்தையும் நம்பிக்கையையும் பெற வேண்டிய சூழல் அமைந்தது.

2. அவர் மேல்தட்டில் நிற்கும் சிறுபான்மைச் சமுதாயத்தைச் சார்ந்தவராயிருந்ததால் பெரும்பான்மைச் சமுதாயமாகிய தமிழினத்துடன் கருத்து முரண்பாடுகளைத் தவிர்க்க வேண்டிய நிலை எழுந்தது. ஆகையால் பாரதப் பண்பாடு, தமிழ்ப் பண்பாடு என்ற இரண்டு பண்பாடுகள், தமிழ்மொழி, வடமொழி என்னும் இரண்டு மொழிகள், இரண்டு இலக்கியங்கள், பாரத அன்னை, தமிழன்னை எனும் இரண்டு அன்னையர், சாதிக் கொடுமை, வருணாசிரம தருமம் எனும் இரண்டு சமுதாய நிலைகள் எனப் பல

இரண்டுகள் அவருக்கு அலைவு நிலையைத் தருகின்றன. இந்த இரண்டுகள் முரண்பாடுகளானதால் அவருக்கு ஓர் உணர்ச்சிச் சிக்கலான நிலை ஏற்படுவது இயல்பே.

இவ்விரட்டைத் தன்மை ஆய்விற்குரியதாகிறது. தமிழ் இலக்கிய ஆய்வாளர்கள் இதை இரட்டைத் தேசியம் எனக் கூறி அமைவர். தேசியம் அல்லது நாட்டுப்பற்று எவ்வாறு இரட்டையாக இருக்க முடியும்? பாரதியார் நாட்டைக் கூறு போட்டுக் காண விரும்பவில்லை. உண்மைதான். ஆனால் சமுதாயச் சூழல் இருபுற விட்டுக்கொடுப்பிற்கு (Compromise) அவரை ஆளாக்கியிருப்பதை நம்மால் உணர முடிகிறது.

'செப்பு மொழி பதினெட்டுடையாள்' எனத் தம் கூற்றுகவும் 'உயர் ஆரியத்திற்கு நிகரென வாழ்ந்தேன்' எனத் தமிழ்த் தாய் கூற்றாகவும் பாடுகிறார். 'தமிழ்மொழி போல் இனிதாவ தெங்கும் காணோம்' என்று தமிழின் இனிமையைப் பாடினவர் நாட்டின் ஒருமைப்பாட்டை விளக்குமிடத்துச் 'சுந்தரத் தெலுங்கினில் பாட்டிசைத்து' என்கின்றார். இங்கு சுந்தரம் என்பது வெறும் அடைமொழியன்று. உண்மையைக் கூற விரும்புகிறார் என்பதை உணர்கிறோம்.

''வள்ளுவன் தன்னை உலகினுக்கே தந்து
வான்புகழ் கொண்ட தமிழ் நாடு''

என்றவர்,

''பன்னரும் உப நிட நூலெங்கள் நூலே
பார்மிசை யேதொரு நூலிது போலே''

என வினவுகின்றார்.

''நெஞ்சை யள்ளும் சிலப்பதிகார மென்றோர் மணியாரம்''

என்று பாராட்டியவர் 'தெய்வீகச் சாகுந்தல மென்னும் நாடகம் செய்த தெவர்' என்று ஒரு வினாவையும் எழுப்புகிறார். ஆங்கிலக் கல்வியால் நம் நாட்டிற்கு.

"நலமோர் எட்டுணையும் கண்டிலே னிதை
நாலாயிரங் கோவிலில் சொல்லுவேன்"

என மிக வன்மையுடனுரைத்த பாரதியார் தம்மை வியாசர்தாசன் என்றோ இளங்கோதாசன் என்றோ அழைக்காமல் ஷெல்லிதாசன் என்று புனை பெயர் கொள்ளுகிறார், ஆங்கிலேயரை ஊணர் என்று கூறி அவர்களது பழக்க வழக்கங்களை வெறுக்கும் பாரதியார்,

"திடமனத்தின் மதுக் கிண்ணம் மீது நாம்
சேர்ந்து பிரதிக்கினை செய்வோம்"

என மக்களை அழைக்கக் காண்கிறோம்.

"சூத்திரனுக் கொருநீதி தண்டச்
சோறுண்ணும் பார்ப்பனர்க் கொருநீதி"

எனக் கடியும் கவிஞர்,

"பார்ப்பனக் குலங் கெட்டழி வெய்திய
பாழடைந்த கலியுக மாதலால்
வேர்ப்ப வேர்ப்பப் பொருள் செய்வ தொன்றையே
மேன்மை கொண்ட தொழிலெனக் கொண்டனன்"

என்று சாதித் தொழிலின் மாற்றத்திற்கு அவலக் குரல் எழுப்பு கிறார்.

"ஏழை யென்றும் அடிமை யென்றும் எவனுமில்லை சாதியில்"

என முழங்கிய பாரதியார் கண்ணன் என் ஆண்டான் பாட்டில்,

"காட்டு மழைக்குறி தப்பிச் சொன்னால் என்னை
கட்டியடி யாண்டே கட்டியடி யாண்டே"

என்று ஆண்டானுக்கும் அடிமைக்குமுள்ள உறவை, உரிமையை நிலைநாட்டுகிறார்.

மேற்போக்காக இவை ஒன்றற்கொன்று முரண்பட்டவைபோல் தோன்றுவது உண்மையே. கவிதையின் இடத்தையும் பொருளையும் நுண்ணித் தறியும்பொழுது பல முரண்கள் தவிர்க்கப்பட்டிருப்பது புலனாகும். கவிஞன் தன்னுணர்வும் பாதிக்கப்படாமல் மக்கள் தேவையையும் உணர்ந்து அதே நேரத்தில் கருத்து முரண்பாடு கவிதையைப் பாதிக்காமல் உண்மையைப் பாடவேண்டிய ஒரு சூழ் நிலையை அறிந்து செயல்பட்டதால் இம் முரண்பாடுகள் அழகாகத் தடுக்கப்பட்டிருக்கின்றன.

பாதிரிமார்களின் தாக்குதலால் பாரம்பரிய உயர்வுணர்விற்கு ஏற்பட்ட பாதிப்பும், அடிமை வாழ்வின் பாதிப்பும் இனப் போராட்டப் பாதிப்பும் கவிஞருக்குச் சூழ்நிலையைச் சிக்கலாக்கிவிட்டாலும் ஆரிய திராவிடப் போராட்டமே கவிஞரைப் பெரிதும் பாதித்துள்ளது. அப் போராட்டத்தில் அவர் நேரடியாக் ஈடுபடாமல் தம் கவிதையின் மூலம் ஓர் இணைப்பை வெளிப்படுத்த விரும்பும் விருப்பமே இவ் விரட்டைகளில் புலப்படுகிறது. அறிஞர் கால்டுவெல், அறிஞர் போப் போன்றோர் திராவிடம் என்னும் ஒரு பிரிவைப் பிரித்துக் காட்டியதைப் பாரதியார் ஆங்கிலேயர் இந்திய நாட்டினரின் ஒருமைப்பாட்டுணர்ச்சியைத் சிதைப்பதற்குச் செய்த சூழ்ச்சியாகவே கருதினார். அதற்கு ஈடுகொடுக்க வேண்டிய ஒரு பொறுப்பையும் உணர்ந்தார்.

பாரதத்தாய் எங்கள் தாய் என்று பாடும் பொழுதே தமிழ்த் தாயைத் தனியாகப் பாடவேண்டிய தமிழ்ச் சமுதாயத் தேவையையும் உணர்கிறார். பேராசிரியர் சுந்தரம்பிள்ளை தமிழ்த் தாய்க்கு ஒரு தனி வாழ்த்துப் பாடித் தமிழ்த் தாயின் சிறப்பைப் பாரதத் தாயின் புகழுக்குள் அடக்கமுடியாத ஒரு சூழலை உருவாக்கியிருந்ததால் ஏற்பட்ட சூழலின் தாக்கமே இது.

சுந்தரத் தமிழினிலே பாட்டிசைத்து என்று பாரதியார் பாடி யிருந்தால் அவர் காலத்து உண்மை புறக்கணிக்கப்பட்டிருக்கும். இனிமை வாய்ந்த மொழி தெலுங்கு என்பதை மொழியியலார் அறிவர். [5]கில்பட் சிலேட்டர் தமிழ் ஒரு கர்ண கடூரமான மொழி

5. Gilbert Slater—Dravidian culture

என்றார். [6]அறிஞர் கால்டுவெல் அரவர் என்னும் சொல்லிற்கு விளக்கம் தரும்பொழுது மெல்லொலிகள் (Sonants) இல்லாமையால் தமிழில் இனிமை இல்லை என்பதைக் குறிப்பிடுவார். ஆகையால் பாரதியாரின் உள்ளுணர்வு தெலுங்கின் இனிமையை ஏற்கிறது. இசைப்பாடல்களும் அவர் காலத்தில் தெலுங்கு மொழியில் இருந்தன. ஆயினும் அவர் 'தமிழ் மொழிபோல்' இனிதாவதெங்குங் காணோம் என்று கூறுவது தமிழ் மக்களுக்கு மொழியுணர்ச்சியை ஊட்டுவதற்கேயாம்.

தெலுங்கின் இனிமை மொழியின் இயல்பு.

தமிழின் இனிமை மொழியின் உணர்ச்சி.

திரு. பொன்னம்பலம் பிள்ளை கம்பராமாயண எதிர்ப்பு அணியை உருவாக்கித் தமிழர்கள் அரக்கர்களாக உருவாக்கப்பட்டிருக்கிறார்கள் என்பதைத் தமிழர்களுக்குப் புரியவைத்தார். மதுரைத் தமிழ்ச் சங்கத்தினர் கம்பராமாயணத்திற்கு எதிராகச் சிலம்பிற்கும் குறளுக்கும் ஏற்றந்தரும் முயற்சியில் ஈடுபட்டிருந்தனர். பாரதியார் இம் மூன்றினையும் இணைத்து ஒரு நடுநிலை வகுக்கும் ஓர் ஆர்வத்தைத் தம் கவிதையில் தெளிவாக்குகிறார்.

''யாமறிந்த புலவரிலே கம்பனைப் போல்
வள்ளுவர்போல் இளங் கோவைப் போல்
பூமிதனில் யாங்கணுமே பிறந்ததில்லை''

என்கிறார். தம் கூற்றில் பிறர் ஐயப்படுவரோ எனக் கருதி 'உண்மை வெறும் புகழ்ச்சியில்லை' என்றும் கூறுவிடுகிறார். சிலம்பும் குறளும் அவலரக் கவர்ந்தன என்று அறிதற்கும் வேறு ஆதாரங்கள் இல்லை. இராமையும் சீதையும் பாஞ்சாலியுமே அவருடைய இலக்கியப் பெண்கள். திருக்குறள் அவருடைய சுயசரிதையில் மட்டும் இருவிடங்களில் எடுத்தாளப்பட்டுள்ளது.

---

6. Dr. Caldwell. An Introduction to Dravidian Comparative Grammer.

சாதியில் உயர்வு தாழ்வு கற்பிப்பதைப் பாரதியார் எதிர்க்கிறார். ஆனால் வருணாசிரமதர்மம் அவருக்கு உடன்பாடு. வருணாசிரம தருமமே சமுதாயக் கட்டுக்கோப்பை உருக்குலையாமல் காத்து வருகிறது. சமுதாயக் கட்டுக் கோப்பே இந்தியப் பண்பையும் கலாச்சாரத்தையும் காக்க வல்லது என்பதும் அவர் கருத்தாகும். இதனைத் திலகர் சமதர்மக் கோட்பாடு என்பார். திலகரின் சமதர்மக் கோட்பாடு பாரதியாருக்கு உடன்பாடு. பிறப்பால் உயர்வு தாழ்வு கற்பிப்பதையே வெறுத்தனர்.

கோவிந்தசுவாமி புகழில்,

"பாங்குற்ற மாங்கொட்டைச் சாமிபோலே
பயிலுமதி வருணாசிரமத்தே நிற்போன்"

என்று வருணாசிரமத்திற்கு உடன்படுவதைக் காணலாம்.

ஆங்கில மொழியின் இலக்கியத்தின் இனிமையை அநுபவிக்கிறார். ஆனால் ஆங்கிலத்திற்கு அடிமைப்பட்டிருப்பதை வெறுக்கிறார்.

ஒரு நல்ல கவிஞனது இலக்கணத்தை வரைபடம் மூலம் காட்டும் இலக்கிய ஆய்வாளர்[7] கவிஞன்—அவனது பாடு பொருள்—வாசகர் இம் மூன்று முனைகளுக்கும் இடையேயுள்ள அளவு சரிசமமான பக்கங்களையுடைய முக்கோணத்திற்கு ஒத்ததாக இருக்க வேண்டும் என்பர். பாரதியார் காலத்துச் சமுதாயச் சூழ்நிலை வாசகர்களை இரு பிரிவாக்கிவிட்டதால் இரு பிரிவிற்கும் ஈடுகொடுக்கும் ஒரு நிலைக்குத் தள்ளப்படுகிறார். வாசகர் மாறும் பொழுது பாடுபொருளையும் அவர் மாற்றிவிடுவதால் சரிசமமான பக்கங்களையுடைய முக்கோண அமைப்பு மாறாமல் ஒரு நல்ல கவிஞராகவே நிலைபெற்று விடுகிறார்.

---

7. C. K. Stead—The new poetic.




ஒரு கவிதையில் கவிஞன் தன் தனிமனப் போக்கிற்கு முனைப்பு அளிக்கும் (Subjective need of the poet) நிலையும் தன் கருத்தின் வேறான பிறரால் விரும்பப்படும் தேவையையும் (Objective need of the Society) நிறைவு செய்கின்ற நிலையில் இந்த இரட்டை நிலை உண்மைக்குப் புறமாகாமல் காக்கப்பெறுவது அரிய ஒரு செயலேயாகும்.

# 16. சில தமிழ் முடிச்சுகள்

[புலவர் வி. சிவக்கொழுந்து]

தமிழ் இன்பம் என்பது ஒரு தனியின்பம். அதன் சுவையைக் கற்றவரே அறிய முடியும்; மற்றவர் அறியார். மொழி என்பது உள்ளக்கருத்தை வெளிப்படுத்தும் கருவிதானே! அதில் தனியே இன்பம் காண்பது எப்படி எனலாம். உள்ளக்கருத்தை மொழியினால் வெளிப்படுத்தும்போது அழகும், நுட்பமும் அறிவும் செறிவும் வெளிப்படுமானால் அப்போது இன்பம் உண்டாகவே செய்யும். உலகத்து உயர்தனிச் செம்மொழிகளில் ஒன்ருகத் தமிழ்மொழி விளங்குவதனால் பேச்சிலும் எழுத்திலும் இவ்வினிமை இன்பம் அதில் துலங்குவதைக் காண்கிரேம்:

''இருந்தமிழே உன்னால் இருந்தேன் இமையோர்
விருந்தமுதம் என்றாலும் வேண்டேன்''

என்று தமிழ் விடுதூது என்னும் நூலாசிரியர் கூறுவாராஞல் அவர் பெற்ற தமிழின்பம் எத்தகையதாயிருத்தல் வேண்டும்? புலமைமிக்க சான்றோர்களே இவ்வின்பத்தைத் தாமும் நுகர்ந்து மற்றவர்களையும் நுகரும்படி செய்தல் இயலும். அவர்கட்கே அவ்வாற்றல் உண்டு பேச்சிலும் பாட்டிலும் அழகும் நுட்பமும் துலங்கத் தமிழைப் பயன்படுத்துவதை சிலேடை, யமகம், திரிபு, மடக்கு முதலான பெயர்களால் தமிழிலக்கணம் வரையறை செய்கிறது.

தமிழில் ஒரே எழுத்து வரிசையை வைத்துக்கொண்டு ஒரு பாடல் பாடுவதும் ஒரு சாமர்த்தியந்தான். இதோ ஒரு பாட்டு:

''தாதிதூ தோதாது தத்தைதூ தேதீது
தூதிதூ தொத்திதத் தூததே—தாதொத்த

துத்திதத் தாதே துதித்துத்தேத் தொத்தீது
தித்த தோதித் திதி.''

பொருள்: தாதி தூதோ தீது—தாதியைத் தூதனுப்புதல் தீமையாம்;
தத்தை தூது ஓதாது—கிளியைத் தூது விட்டால் (சரியாக) சொல்லாது;
தூதி தூது ஒத்த—தூதியின் தூதே பொருந்திய
இத தூது அதே—இனிய தூது ஆகும்;
தாது ஒத்த—பூந்தாது போன்ற
துத்தி தத்தாதே—தேமல் (என்மேல்) படராமல்
துதித்து—(அரசனை நீ போய்த்) துதித்து
தேத்து ஒத்து—(அவ)னிடத்துப் பொருந்தி
ஈது தித்தது ஓதி—இவ்வினிய மொழிகளைக் கூறி
திதி—(என்னைக்) காப்பாயாக.

அரசனிடம் தூது அனுப்புகின்ற ஒரு தலைவியின் கூற்றாக இப்பாடல் அமைந்துள்ளது. தகர வரிசை எழுத்துகளை வைத்துச் சிலம்ப வித்தை காட்டுகிறார் புலவர். இத்தகைய பாடல்கள் இயற்கையாய்ப் பிறந்தவை என்று கூற முடியாது. செயற்கையாக ஆடும் சிலம்பந்தான். பொருளும் வலிந்து திணிக்கப்பட்டதாகவே காண்கிறோம்.

ப, ம—இரண்டெழுத்தும் உதடுகள் இரண்டும் ஒட்டுவதாற் பிறக்கும் எழுத்துகளாகும். இவ் வரிசை எழுத்துகள் வராமலே நூறு பாட்டு அந்தாதியாகப் பாடித் திருச்செந்தூரில் ஒரு புலவனை வென்றதாகச் சிவப்பிரகாசர் வரலாறு கூறுகிறது. அது ''நிரோட்டக யமகம்'' எனப்படும். இதுபோன்ற தமிழ்ப்பாடல்களில் பொருட் சிறப்பும் இலக்கிய நயமும் பெரிதும் காணப்படாவிட்டாலும் புலமையின் கெட்டிக்காரத்தனமாக இவை மதிக்கப்படுகின்றன. சிவப்பிரகாசர் தம் ஆசிரியரின் ஆணைப்படி 'கு' என்னும் எழுத்தை முதலும் ஈறுமாக வைத்து ஒரு வெண்பாப் பாடியிருக்கிறார். அது வருமாறு:

''குடக்கோடு வான்எயிறு கொண்டாற்குக் கேழல்
முடக்கோடு முன்னமணி வாற்கு—வடக்கோடு
தேருடையான் தெவ்வுக்குத் தில்லையதன் மேற்கொள்ளல்
ஊருடையான் என்னுமுல கு.''

இப் பாடலில் சில முடிச்சுகள் உள்ளன. சிறிது முயன்று சொல் முடிச்சுகளை அவிழ்த்தால் பொருள் காணலாம். ''மேற்கே ஓடு வானாகிய பகலவனது பல்லைக் கெடுத்தவனும் வராகமென்னும் பன்றியின் வளைந்த பல்லை அணிந்தவனும், வடக்கே செல்லும் தென்றலைத் தேராகக் கொண்ட மன்மதனைப் பகைத்தவனுமான சிவபிரானுக்கு ஊரும் உடையும் ஊர்தியும் முறையே தில்லையும் (புலி) தோலும் காளையுமாம் என்று உலகோர் கூறுவர்'' என்பது இதன் பொருள். பாடலை மேலோட்டாகப் படித்ததும் பொருள் விளங்கிவிடாது. பலகால் படித்துச் சிவன்பற்றிய புராணச் செய்திகளையும் தெரிந்து ஊர், உடை, ஆன் எனச் சொற்களையும் வகையுளி செய்து பொருளை அறிந்துகொள்ள வேண்டும். இப்படிச் சிறிது கடுமையாக முயன்று பொருள் காண்பதிலும் ஒரு தனி இன்பம் உண்டாகத்தானே செய்யும்!

சென்ற நூற்றாண்டில் தமிழகத்தில் தோன்றிச் சமய உலகில் புரட்சி செய்து ஆன்ம நேய ஒருமைப்பாட்டையும் உயிர் இரக்கத்தையும் உலகுக்குணர்த்தியவர் இராமலிங்க வள்ளலாராவர். அவர் பக்திப் பாடல்களை அருளியவர் என்றே பலர் அறிவர். அத்துடன் புலமையின் மிக்கவர் என்பதைச் சிலரே அறிந்து போற்றுவர். ''திருவடிப் புகழ்ச்சி'' என்று ஒரு பாடல் இயற்றியுள்ளார். அது பல பாடல்களின் தொகுப்புப்போல் காணப்படும். ஆனால் அஃது அடி ஒன்றுக்கு 192 சீர்களைக் கொண்ட ஒரே பாடலாகும். இவ்வளவு பெரிய கழிநெடிலடி ஆசிரிய விருத்தம் பாடியோர் வேறு எவரேனும் உண்டோ? அப் பாடலைப் பயில்வோர் வள்ளலாரின் புலமைச்சிறப்பை அறியலாம். அவரே திருவொற்றியூர்த் தியாகேசர் மீது ''இங்கித மாலை'' என்னும் நூல் இயற்றியிருக்கிறார். அது 165 விருத்தப்பாடல்களால் ஆனது.

'கடவுள்மாட்டு மானிடப்பெண்டிர் நயந்த பக்கம்' என்னும் இலக்கணப்படி இங்கித மாலை இயற்றப்பட்டிருக்கிறது. பிச்சை

ஏற்கும் கோலத்துடன் வரும் ஒற்றியூர்ப் பெருமானை நோக்கித் தலைவியொருத்தி வினாவுவதாகவும் அவர் விடை கூறுவதாக வும், விடையாக அவர் கூறுவது கவர்பொருளுடையதாக இருப் பதைக் கண்டு தலைவி தன் தோழியிடம் அதனைக் கூறி வியப்ப தாகவும் ஒவ்வொரு பாடலும் அமைந்திருக்கிறது.

பாடல்களைப் படிக்கும்போது எளிதிற் பொருள் விளங்காத படியும் ஆழ்ந்து சிந்தித்து அரிதிற் பொருள் காணும்போது தமிழின்பம் தருவதாகவும் அவை அமைந்திருக்கின்றன.

திருவள்ளுவர்,

"தெண்ணீர் அடுபுற்கை யாயினும் தாள்தந்த
துண்ணலின் ஊங்கினிய தில்"

என்பார். முயற்சியாற் பெற்ற பொருள் அற்பமாயினும் மிகுந்த இன்பம் தருவதுபோலத் தமிழ்ப் பாடல்களிலும் ஆழமாய்க கிடக்கும் பொருளை முயன்று கண்டு எடுக்கும்போது அளவிலா இன்பம் உண்டாகின்றது. அஃது அறிவினாலாகும் இன்பம்; தமிழின்பம்.

இங்கே இங்கித மாலையில் இரண்டொரு பாடல்களைப் பார்க்க லாம்.

"கண்ணின் மணிபோல் இங்குநிற்கும்
கள்வர் இவரூர் ஒற்றியதாம்
பண்ணின் மொழியாய்! நின்பாலோர்
பறவைப் பெயர் வேண்டினம் படைத்தால்
மண்ணின் மிசையோர் பறவையதாய்
வாழ்வாய் என்றார் என்என்றேன்
எண்ணி அறிநீ என்கின்றார்
இதுதான் சேடி என்னேடீ?"

இப் பாட்டில் பறவை என்ற இரண்டு சொற்கள் முடிச்சாக உள்ளவை. முதற் பறவைக்கு அன்னம்—சோறு என்றும் அடுத்த பறவைக்குக் கிளி—சுகம் என்றும் பொருள் செய்து "எனக்குச் சோறு படைத்தால் சுகமாய் வாழ்வாய்" என்று பெருமான் கூறுவ தாகக் கொள்ள வேண்டும்.

''தளிநான் மறையீர்! ஒற்றிநகர்
தழைக்க வாழ்வீர்! தனிஞான
ஒளிநா வரசை ஐந்தெழுத்தால்
உவரி கடத்தி னீரென்றேன்;
களிநா வலனை ஈரெழுத்தால்
கடலின் வீழ்த்தி னேமென்றே
எளியேற் குவப்பின் மொழிகின்றார்
இதுதான் சேடி என்னேடீ?''

சைவ சமய குரவர்களில் ஒருவரான திருநாவுக்கரசர் கல்லிற் பிணைப்புண்டு கடலில் வீழ்த்தப்பட்டபோது திருவைந்தெழுத்தை ஓதிக் கரை சேர்ந்தார் என்பதும், திருநாவலூரரான சுந்தரர் பாடிய பாடலுக்காகத் திருவாரூரில் சிவபிரான் பரவை என்ற பெயருடைய அவர் துணைவியார் வீட்டுக்குத் தூது சென்றார் என்பதும் திருத்தொண்டர் புராணத்திற் கண்ட வரலாறுகள். இவற்றை மனத்துட் கொண்டு இப் பாடலைக் காண வேண்டும்.

இப் பாடலில் ஐந்தெழுத்தால் நாவரசை உவரி (கடல்) கடத்திக் கரை சேர்த்தது வெளிப்படை. நாவலனை ஈரெழுத்தால் உவரி (கடல்) வீழ்த்தியது விளக்கமின்றி முடிச்சாக இருக்கிறது. ஈரெழுத்து 'தூது' என்பதாகும். பரவை என்பது கடலுக்குரிய காரணப் பெயராகவும் இருப்பது கொண்டு பொருள் செய்தால் ''நாவலூரருக்காக நாம் தூது சென்று அவரைப் பரவையாருடன் சேர்த்தோம்'' எனக் கூறினாராயிற்று.

''முடியா வளஞ்சூழ் ஒற்றியுளீர்!
முடிமேல் இருந்த தென்னென்றேன்;
கடியா உள்ளங் கையின் முதலைக்
கடிந்த தென்றார்; கமலமென
வடிவார் கரத்தில் என்னென்றேன்;
வரைந்த அதன்ஈறு அகன்றதென்றே
இடியா நயத்தின் நகைக்கின்றார்;
இதுதான் சேடி என்னேடீ?''

இதில் உள்ளங்கையின் முதலைக் கடிதல், அதன் ஈறு அகலுதல் ஆகிய இரண்டும் விளங்க வேண்டும். உள்ளங்கை—அகங்கை; அதன் முதல் 'அ' என்பது; அதை நீக்கினால் கங்கை முடிமேல் இருப்பதாகப் பொருள்படும். அடுத்து 'வரைந்த அதன் ஈறு' என்பது கங்கை என்பதன் இறுதி எழுத்தான 'கை'; அதை அகற்றினால் 'கம்'—மண்டையோடு எனப் பொருள்படும். முடியில் கங்கையும் கரத்தில் மண்டையோடும் (பிரம்ம கபாலம்) இருப்பதாகக் கூறினாராயிற்று.

வள்ளலாரே பாடியதாக உள்ள ஒரு வெண்பா வருமாறு:

"பகுதி தகுதி விகுதியெனும் பாட்டில்
இகலில் இடையை இரட்டித்து—அகவின்
அருச்சித்தால் முன்னாம் அதுகடையாம் கண்டீர்!
திருச்சிற் சபையானைச் சேர்ந்து."

இவ் வெண்பாவின் முதல் மூன்று சொற்களின் இடையிலுள்ள 'கு' எனபதை இரட்டித்தால் ஆறு + கு = அறுகு என ஆகிறது. அறுகு கொண்டு அம்பலவாணரை அருச்சித்தால் முதல் மூன்று எழுத்துக் கூடியதால் உண்டாகும் பதவி கிடைக்கும். அப் பதவி கடை எழுத்து மூன்றும் கூடியதால் உண்டாகும் முத்தியாம். அறுகு கொண்டு பூசித்தால் முத்தி கிடைக்கும் என்ற கருத்து இப்படி மூன்று சொற்களில் முடிச்சாகிக் கிடக்கின்றன.

சுப்பிரதீபக்கவிராயர் பாடிய காதற்பிரபந்தம் சுவை மலிந்த ஓர் இலக்கியம். அதில் தலைவனைக் கூடிப் பிரிந்த தலைவி அவன் வரவை எதிர்நோக்கி ஏங்கிக் கண்ணீர் வடித்தாள் எனக் கூற வேண்டிய இரண்டு வரிகள் வருகின்றன. அந்த நூலில் இந்த இரண்டு வரிகளும் எளிதாய் அவிழ்க்க முடியாத முடிச்சுகள்.

"காலாயு தக்கொடியோன் கையாயு தவிழியாள்
மாலாயு தமீன்ற மாமணியைத் தானுதிர்த்தாள்"

இதைப் படித்தால் ஒரே மயக்கம்தான் உண்டாகும். காரணம்: பொருள் எளிதில் விளங்காமை. காலை ஆயுதமாகக் கொண்டு

போரிடும் கோழியைக் கொடியாகக் கொண்டவன் முருகன்; அவன் கை ஆயுதம் வேல்; அவ் வேல்போன்ற விழியாள் தலைவி; திருமால் கை ஆயுதம் சங்கு; அஃது ஈன்ற மணி—முத்து; அத் தலைவி முத்துப்போன்ற கண்ணீர்த் துளிகளைச் சிந்தினாள் என்பது பொருள்.

இரண்டு வரிகளில் பல முடிச்சுகள்; தமிழ் முடிச்சுகள். கவிராயர் முடிச்சவிழ்க்கும் வேலையை நம்மிடம் விட்டிருக்கிறார். தமிழ் முடிச்சுகளை அவிழ்த்துப் பொருள் காண்பது கடினமாயினும் இன்பந்தருவதாக உள்ளது. இப் பாட்டு வரிகள் இயல்பாக வந்தவையே; செயற்கையல்ல. அவற்றைச் சொற்களின் போக்கே காட்டுகின்றன. பலமுறை சொல்லி இன்புற வேண்டியவை. இன்பத் தமிழ் வாழ்க.

# 17. இருளும் ஓர் உள்பொருளே

[பேராசிரியர் க. வெள்ளைவாரணனார்]

நக்கீரனார் முருகப்பெருமானுடைய ஆறுதிருமுகங்களின் இயல்பினை விளக்கும்போது, ''மாயிருள் ஞாலம் மறுவின்றி விளங்கப், பல்கதிர் விரிந்தன்று ஒருமுகம்'' என ஒரு திருமுகத் தினைக் குறித்துப் போற்றுகின்றார். 'ஒருமுகம் பெரிய புறவிருள் சூழ்ந்த இடத்தையுடைய உலகமானது குற்றமின்றி விளங்கும்படி பல ஒளிக் கதிர்களையும் தோற்றுவித்தது' என்பது இத் தொடரின் பொருளாகும். எனவே உலகத்தே சூழ்ந்து காணப்படும் புறவிருள் ஓர் உள்பொருளே என்பது இதனாற் புலனாகும். அங்ஙனமாகவும் ''இருள் ஒரு பொருளன்று; ஒளியினது இன்மையே இருள்'' என்பர் ஒரு சாரார். தொல்காப்பியம், திருக்குறள், சங்கவிலக்கியம் முதலிய தமிழ்த் தொன்னூல்களிலும் சிலப்பதிகாரம் மணிமேகலை முதலிய செந்தமிழ்க் காப்பியங்களிலும் சைவம் வைணவம் சமணம் பௌத்தம் முதலிய சமயம் பற்றிய பிற தமிழ்நூல்களிலும் 'இருள்' ஒரு பொருளாகவே குறிக்கப்பெற்றுள்ளது.

உலகப் பொருள்கள் கட்புலனாகாதவாறு கண்ணொளியைத் தடைசெய்து நிற்கும் புறவிருளும். அதுபோலவே நுண்பொருள் களை உள்ளம் உள்ளவாறு சிந்தித்து உணர வொட்டாது உயிரின் அறிவினைத் தடைசெய்து நிற்கும் அகவிருளும் என இருளை இரு வகையாகப் பகுத்துரைப்பர் அறிஞர். 'இருள்தூங்கு விசும்பு' (நற் றிணை-261) எனப் புறவிருளும், 'இருள் நீங்கியின்பம் பயக்கும்' (திருக்குறள்-52), 'இருள்தீர் காட்சி' (பெரும்பாண்-443) என அகவிருளும் குறிக்கப்பட்டுள்ளமை இங்குக் கூர்ந்துணர்தற்பால தாகும்.

உலகிற் காணப்படும் புறவிருள் ஞாயிற்றின் ஒளிக்கதிர்களால் நீங்குமாறு போலவே, மக்களின் உள்ளத்தே அறிவினை மறைத்து நிற்கும் அகவிருளானது உயிர்க்குயிராய்த் திகழும் இறைவனது அருளொளியாகிய மெய்யுணர்வினால் நீங்கும் என்பது இறைவனது திருவருளில் திளைத்த செம்புலச் செல்வர்கள் துணிபாகும்.

"இன்றெனக்கருளி இருள்கடிந்துள்ளத்
தெழுகின்ற ஞாயிறேபோன்று
நின்றநின் தன்மை" (திருவாசகம், கோயிற்றிருப்பதிகம்)

என்வும்,

"இன்பம் பெருக்கி இருளகற்றியெஞ்ஞான்றுந்
துன்பந் தொடர்வறுத்துச் சோதியாய்"
(திருவாசகம்-திருவெண்பா-11)

எனவும்,

"இருளாய உள்ளத்தின் இருளை நீக்கி"
(அப்பர் தேவாரம்)

எனவும் வரும் திருமுறைத் தொடர்களும்,

"மலர்தலை யுலகில் மாயிருள் துமியப்
பலர்புகழ் ஞாயிறு படரி னல்லதைக்
காண்டல் செல்லாக் கண்போல் ஈண்டிய
பெரும்பெயர்க் கடவுளிற் கண்டுகண் ணிருள்தீர்ந்து"

எனவரும் சிவஞானபோதச் சிறப்புப் பாயிரத்தொடரும் புறவிருளும் அகவிருளுமாகிய இருதிற இருளினையும் அவ்விருளை நீக்கும் மறுதலைப் பொருள்களாக முறையே கதிரவன் ஒளியும் இறைவனது அருளாகிய சிவஞானமும் அமைந்துள்ள திறத்தையும் நன்கு புலப்படுத்தல் காணலாம்.

சைவசமய சந்தானகுரவருள் ஒருவராகிய உமாபதி சிவாசாரியார், தோற்றமில் காலமாக நிலைத்துள்ள பொருள்களை,

"ஏகன் அநேகன் இருள் கருமம் மாயையிரண்டு
ஆக இவை ஆறு, ஆதியில்" (திருவருட்பயன்-5)

என ஆறாகப் பகுத்துக் கூறியுள்ளார். "உலகிற்கு முதல்வனாகிய இறைவனும், எண்ணிறந்தனவாயுள்ள உயிர்த் தொகுதியும், அவற்றின் அறிவை மறைத்து நிற்கும் இருளாகிய ஆணவ மலமும், உயிர்கள் மீளப் பிறத்தற்குக் காரணமாயுள்ள கன்மமும், சுத்தமாயை அசுத்தமாயை யென்னும் மாயை இரண்டும் ஆக இவை ஆறும் அநாதியே (தோற்றமில் காலமாக) உள்ள உள்பொருள்களாகும்" என்பது இக் குறட்பாவின் பொருளாகும்.

கண்ணாகிய இந்திரியம் சாத்துவிக அகங்காரத்தினின்றும் சத்துவகுண அளவாய்ப் பரிணமிப்பதெனவும், அவ்வாறு பரிண மிக்குங்கால் அப் பகுதியில் எஞ்சிநின்ற தமோகுணக் கூறாகிய சாரம் இருள் எனப் பரிணமித்துக் குற்றச் சகசமாய் உடன் தோன்றிக் கண் ணொளியைத் தடைசெய்து நிற்கும் எனவும், அவ்விருளை நீக்கிப் பொருளைப் புலப்படுத்தற்குத் தாமதாங்காரத்தினின்றுஞ் சத்துவ குண அளவாய்ப் பரிணமித்த பூதவொளியின் உதவி இன்றியமை யாது வேண்டப்படும் எனவும் எடுத்துரைத்து ஒளிக்கு மறுதலையான பொருள் இருள் என்பதனைச் சிவஞானபோதப் பேருரையில் சிவ ஞான முனிவர் தெளிவாக விளக்கியுள்ளார்.

'ஒளியின் இன்மையே இருள்' எனக் கொள்வோமானால், சுகத்தின் இன்மையே துக்கம் எனவும், தன்மத்தின் இன்மையே அதன்மம் எனவும் கொள்ளவேண்டிவரும். இன்மை என்பது ஒரு தொழிலை நிகழ்த்துதல் இயலாது. இருள் ஒரு பொருளன்று என்றால், இல்பொருளாகிய அதற்குக் கண்ணொளியைத் தடை செய்தலாகிய செயலை ஏற்றிக் கூறுதல் பொருந்தாது. அன்றியும் 'அங்கு ஒளியில்லை; இருளே யுள்ளது' என்புழி ஒளியினது இன்மை யின் வேறாக இருளினது உண்மைபற்றிய உணர்வு நிகழ்தலானும், இருள் கண்ணொளியைத் தடைசெய்து நிற்றல் வெள்ளிடையில் கண்களை அலரவிழித்துப் பார்க்குங்கால் நன்கு புலப்படுதலானும் ஒளிக்கு மறுதலையாகப் புறத்தே இருளென்பதோர் பொருளுண்மை நன்கு துணியப்படும்.

இவ்வாறு புறத்தே காணப்படும் இருள் ஓர் உள்பொருளே யென வலியுறுத்திய மாதவச் சிவஞான முனிவர், இப் புறவிருள் போலவே தோற்றமில் காலமாக உயிர்களைப் பற்றிநின்று உயிர் களின் விருப்பம், அறிவு, செயல் என்பவற்றைத் தடை செய்து வியாபகமுடைய ஆன்மாக்களை அணுத்தன்மைப்படுத்தி நிற்கும் ஆணவமலமாகிய அகவிருளும் ஓர் உள்பொருளே என்பதனை ஏதுக்களாலும் எடுத்துக்காட்டுகளாலும் சிவஞானபோதப் பேருரை யில் நன்கு நிறுவியுள்ளமை இங்கு நினைக்கத் தகுவதாகும்.

ஆன்மாக்களின் அறிவாற்றலைத் தடைசெய்து நிற்கும் அக விருளை ஆணவமலம் என வழங்குதல் சைவ சித்தாந்த மரபாகும். ஆணவமலம் என்பது, எண்ணிறந்த உயிர்களோடும் கூடிநின்று அவற்றின் அறிவை மறைத்தும் தான் ஒன்றேயாயிருப்பது; உயிர் களது பக்குவம், பக்குவமின்மை ஆகியவற்றுக்கு ஏற்ப அவரவர் இடங்களிலே மறைத்து நின்று அந்தந்த ஆன்ம போதங்களின் மீட்சியிலே நீங்குவதாயிருக்கிற தன்செயல் வகையாகிய எண் ணிறந்த ஆற்றல்களையுடையது; செறிந்த இருளும் வெளியென்று சொல்லுமளவுக்கு மொய்த்து இருண்டு உயிர்களைப் பற்றிநின்று மறைத்தலைச் செய்வது; செம்போடு கூடிய களிம்பு அந்தச் செம்பு உள்ள அன்றே அதனை மறைத்து உள்ளும் புறம்புங்கலந்து அதன் வெட்டுவாய்தோறும் கூடி நின்றாற்போல உயிரறிவோடுங் கலந்து மறைந்து நிற்கிற அழியாத அனாதிமலமாய் உயிர்களின் விழைவு அறிவு செயல் என்னும் மூவகையாற்றல்களும் சிறிதும் நிகழாதபடி மறைத்து நிற்பதாகும். இத்தகைய இருள் மலத்தின் இயல்பினை,

''ஏகமாய்த் தங்கால எல்லைகளின் மீளும்
எண்ணரிய சத்தியதாய் இருளொளிர இருண்ட
மோகமாய்ச் செம்பினுறு களிம்பேய்ந்து நித்த
மூலமல மாய்அறிவு முழுதினையும் மறைக்கும்''
(சிவப்-20)

எனவரும் சிவப்பிரகாசப் பாடலில் உமாபதி சிவாசாரியார் சுருக்கமும் தெளிவும் பொருந்த விளக்கியுள்ளமை காணலாம்

'ஆணவம்' எனவும் 'மலம்' எனவும் சைவசித்தாந்த மெய்ந் நூல்களிற் குறிக்கப்படும் உயிர்களின் அகக் குற்றமாகிய மாசு,

திருக்குறளிலும் சைவத் திருமுறைகளிலும் 'இருள்' எனவே குறிக்கப் பெற்றுள்ளது. இந் நுட்பத்தினைத் தெளியவுணர்ந்த உமாபதி சிவாசாரியார், தாம் இயற்றிய திருவருட்பயன் என்னும் தத்துவ நூலில் ஆணவமலத்தின் இலக்கணத்தினை விரித்துரைக்கும் அதிகாரத்திற்கு 'இருள்மலநிலை' எனப் பெயரிட்டுள்ளமை இங்கு உளங்கொளத்தக்கதாகும்.

இறைவனது ஞானமயமான புகழ்த்திறத்தை விரும்பினாரிடத்து அகவிருளாகிய ஆணவமலத்தைப்பற்றி வரும் நல்வினை தீவினை என்னும் இருவினைகளும் சேரமாட்டா என வற்புறுத்துவது.

''இருள்சேர் இருவினையுஞ் சேரா இறைவன்
பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு'' (5)

எனவரும் திருக்குறளாகும். இதன்கண் 'இருள்' என்றது மயக்கத்தை எனவும் 'பொருள்' என்றது மெய்ம்மையை எனவும் கொண்டு, ''மயக்கத்தைப் பற்றிவரும் நல்வினை தீவினையென்னும் இரண்டு வினையும் உளவாகா; இறைவனது மெய்ம்மை சேர்ந்த புகழை விரும்பினாரிடத்து'' எனப் பரிமேலழகர் பொருள் வரைந்துள்ளார். ''இன்னதன்மைத்தென ஒருவராலுங் கூறப்படாமையின் அவிச்சையை 'இருள்' என்றும், நல்வினையும் பிறத்தற்கு ஏதுவாகலான் 'இருவினையும் சேரா' என்றும், இறைமைக் குணங்கள் இலராயினாரை உடையரெனக் கருதி அறிவிலார் கூறுகின்ற புகழ்கள் பொருள் சேராவாகலின் அவை முற்றவும் உடைய இறைவன் புகழே பொருள்சேர் புகழ் எனப்பட்டது'' என்றும் விளக்கந் தருவர் பரிமேலழகர்.

தெய்வப் புலவர் திருவள்ளுவர் மயக்கத்தினை 'மருள்' (திருக்குறள்-52) என்ற சொல்லால் வழங்கியிருத்தலால் அதனின் வேறாக இத் திருக்குறளில் 'இருள்' என்ற சொல்லாற் குறிக்கப் பட்டது, 'மயக்கம்' எனப் பொருள் கொள்ளுதல் பொருந்தாது. புறத்தே காணப்படும் பூத இருளானது கண்ணால் ஒரு பொருளையுங் காணமுடியாத நிலையில் பொருள்களின் உருவத்தை மறைத்து நிற்பது. இப் புறவிருள் போன்றே உயிர்களின் அகத்துணர்வாகிய

அறிவுக் கண்ணை மறைத்து நிற்பதோர் இருள் உண்டு. அகவிருளாகிய அது, தன் தன்மையிதுவென உயிர்கள் உணரவொண்ணாதவாறு ஆன்மாவாகிய அவற்றை மறைத்து அணுத்தன்மைப்படுத்து மீதூர்ந்து நிற்றலால் ஆன்மாவாகிய பொருளையுங் காட்டாது அதனை மறைத்துள்ள தன்னையுங் காட்டாது நிற்குந் தனித்தன்மையுடையதாகும். இதன் இயல்பினை,

''ஒருபொருளுங் காட்டாது இருள், உருவம் காட்டும்;
இரு பொருளுங் காட்டாது இது'' (திருவருட்பயன்-23)

எனவரும் குறட்பாவில் உமாபதி சிவாசாரியார் தெளிவாக விளக்கியுள்ளார். 'இருள்சேர் இருவினையும் சேரா' என்னும் முதற்குறிப்புடைய திருக்குறளில் 'இருள்' எனக் குறிக்கப்பட்டது ஆணவம் எனப்படும் இருள் மலமே எனவும் 'பொருள்' எனப்பட்டது, அம் மலவிருளை நீக்கி உயிர்கட்கு நல்லுணர்வளிக்கும் அருள் ஞானமாகிய மெய்யுணர்வேயெனவும் கொண்டு திருஞானசம்பந்தர் திருநாவுக்கரசர் முதலிய சிவநெறிச் செல்வர்கள் இத் திருக்குறளுக்கு விளக்கந் தந்துள்ளார்கள்.

''ஊனத்திருள் நீங்கிட வேண்டில்
ஞானப்பொருள் கொண்டடி பேணும்
தேனொத் தினியான் அமருஞ்சேர்
வானம் மயிலாடு துறையே'' (1-38-3)

எனவரும் திருஞானசம்பந்தர் தேவாரம் மேற்குறித்த திருக்குறட்பொருளை அடியொற்றியதாகும். ''பிறவித் துன்பத்திற்குக் காரணமாய் அநாதியே உயிர்களைப் பிணித்து நின்று இருவினைத் தொடர்பிற் புகுத்தி இடர்விளைத்துச் சிறுமைப்படுத்தும் இருளாகிய மலமறைப்பினின்று விடுபட்டு உய்தி பெற வேண்டுவராயின், தன்னை இடைவிடாது நினைந்து போற்றும் அன்பர்களின் உள்ளத்தே தேன் போன்று அண்ணித்து இன்பம் நல்குவானாகிய இறைவன் எழுந்தருளிய மயிலாடுதுறையினை அப் பெருமான் அருளிய சிவஞானமாகிய பொருளையே துணையாகக் கொண்டு புகழ்ந்து போற்றி அம் முதல்வன் திருவடிகளைப் பேணி வழிபடுவீர்

களாக'' என உலகமக்களுக்கு அறிவுறுத்தும் நிலையில் அமைந்தது இத் திருப்பாடலாகும். உயிர்கட்கு ஊனத்தை(ச் சிறுமையை) விளைக்கும் 'இருள்' என்பதொரு மலம் உண்டென்பதும், அவ் விருள் நீக்கத்திற்கு இறைவன் அருளும் மெய்யுணர்வாகிய பொருளையே துணையாகக் கொண்டு அம் முதல்வன் திருவடி களைப் புகழ்ந்து போற்றி வழிபடுதல் இன்றியமையாததென்பதும் இத் திருப்பாடலில் நன்கு வலியுறுத்தப்பெற்றுள்ளமை உணர்ந்து போற்றத்தகுவதாகும்.

மன்னுயிர்களை இருள்மலமாகிய திரை அநாதியே மறைத்து நிற்றலால், மெய்ஞ்ஞானமாகிய பெரும் பொருளையுணருந் தகுதி வாய்ந்த அறிவுக் கண்ணினையிழந்து, நுகர்தற்குரிய பொருள் எது வும் கைவரப் பெறாது, உண்பொருள்களை நாடி அவற்றைப் பெறு தற்குரிய உபாயத்தினையும் இழந்து ஒன்றும் புரியாத குருடர்களாய், உயிர்கள் காரிட்ட ஆணவக்கருவறையாகிய இருட் குழியில் வீழ்ந்து தடுமாறும் கேவல நிலையில், இறைவனுடைய திருவடிகளாகிய திருவருட்சத்தி, அவ்வுயிர்களின் துயர்நிலைக்கு மிகவும் இரங்கி, கொடிய நரகமாகிய அத்துன்பக் குழியில் வருந்தும் உயிர்களைத் தன் அருளாகிய கைகொடுத்துப் பற்றியெடுத்து ஈறிலாப் பேரின்ப வாழ்வாகிய இன்பக் கரையில் ஏற்றி அருள் புரிகின்றது. எல்லாம் வல்ல இறைவன் தனது பெருங் கருணைத்திறத்தால் மன்னுயிர் களை உய்வித்தருளும் அருளுபகாரமாகிய இந் நிகழ்ச்சியை,

''இருள்தரு துன்பப் படலம் மறைப்ப மெய்ஞ்ஞானமென்னும்
பொருள்தரு கண்ணிழந் துண்பொருள் நாடிப் புகலிழந்த
குருடருந் தம்மைப் பரவக் கொடுநரகக் குழிநின்
றருள்தரு கைகொடுத்தேற்றும் ஐயாறன் அடித்தலமே''

எனவரும் திருவிருத்தத்தில் திருநாவுக்கரசர் விரித்துப் போற்றி யுள்ளார்.

இத் திருவிருத்தத்தின் சொற்பொருளமைப்பினைக் கூர்ந்து நோக்குங்கால், இத் திருப்பாடல் மேற்குறித்த 'இருள்சேர் இரு வினையுஞ் சேரா' எனவரும் திருக்குறளுக்கமைந்த பொருள் விளக்க மாகத் திகழ்தல் காணலாம். இத் திருக்குறளில் இருள் என்றது,

இருள்மலத்தினையே யென்பதும், அவ்விருட்படல மறைப்பினாலேயே உயிர்கள் அறிவுக் கண்ணையிழந்து உடல் முதலிய கருவிகள் வாய்க்கப்பெறாத கேவலநிலையிலும் அக் கருவிகளைப் பெற்றுள்ள சகல நிலையிலும் அறியாமையிற் சிக்குண்டு அல்லற்படுகின்றன என்பதும், இங்குப் 'பொருள்' என்றது இறைவனது திருவடி ஞானத்தையே என்பதும், இறைவனது புகழ் அவனருளிய மெய்ஞ் ஞானத்தின் துணைகொண்டேயுணர்தற்குரியதாதலின் அதனைத் திருவள்ளுவர் 'பொருள்சேர் புகழ்' என அடைகொடுத்தோதினார் என்பதும் இத் திருக்குறளின் விளக்கமாக அப்பர் அருளிய இத் திருவிருத்தத்தால் இனிது புலனாதல் காணலாம்.

அகவிருளாகிய ஆணவம் நீங்க நோக்கும் ஞானநாட்டம் உயிர்கட்கு இயல்பாக அமைந்ததன்று என்பதும், இருளைநீக்கி உயிர்கட்கு இன்பமளிக்கவல்ல பேரருளும் பேரறிவும் பேராற்றலும் ஒருங்குடைய முதல்வன் இறைவன் ஒருவனே என்பதும் சிவநெறிச் செல்வர்கள் துணிபாகும். இந் நுட்பம்,

"இருளற நோக்கமாட்டாக் கொத்தையேன்" (4-69-1)

எனவும், (கொத்தை-குருடு)

"இருளறுத்துநின்று, ஈசனென் பார்க்கெலாம்
அருள்கொ டுத்திடும் ஆனைக்கா அண்ணலே"
(5-31-8)

எனவும்,

"இருளாயவுள்ளத்தின் இருளை நீக்கி
இடர்பாவங்கெடுத்து" (6ஆம் திருமுறை)

எனவும் வரும் அப்பர் அருள்மொழிகளால் இனிது விளங்கும்.

'பொருள்' என்னும் சொல், நன்கு மதித்தற்குரியது என்ற கருத்தில் வழங்குவது. 'பொருளல்ல வற்றைப் பொருளென் றுணரும், மருளானாம் மாணாப் பிறப்பு' (351) எனவரும் திருக்குறளின் 'பொருள்' என்னுஞ்சொல் 'மதித்தற்குரியது' என்ற பொருளில் வழங்கக் காண்கின்றோம். உயிர்களின் அறிவினைத் தடைசெய்து

அணுத்தன்மைப்படுத்துவதாகிய இருள்மலத்தினையும் இறைவன் உயிர் உலகு என மதித்தற்குரிய பொருள் நிரலில் ஒருங்கு வைத்தெண்ணுதல் பொருந்துமா? என்றதொரு வினா அறிஞர்கள் உள்ளத்தில் தோன்றுதல் இயல்பே. அருளுருவாகிய ஞானப் பொருளோடு ஒருங்குவைத்து எண்ணப்படும் நன்மதிப்பு இருள் மலத்திற்கில்லையெனினும் மெய்ஞ்ஞானத்தின் மறுதலைப்பொருளாய் உயிர்களைப் பிணித்து நின்று உயிரறிவினைத் தடைசெய்து நிற்கும் உள்பொருளாக உள்ளது இருள்மலமாதலின் அதுவும் பொருளாக எண்ணப்பட்டது. ஞானப்பொருளாய் நின்ற இறைவன் உயிர்களைப் பிணித்துள்ள ஊனத்திரளாகிய இருளினை நீக்கி உயிர்கட்கு நன்ஞானம் வழங்குகின்றானாதலின் அவ்விறைவனருளும் மெய்ஞ்ஞானத்தால் நீக்கப்படும் இருள்மலமும் அறிஞர்களாற் கருதத்தக்கதோர் உள்பொருளாக ஆயிற்றுப் போலும்! என ஆளுடையபிள்ளையார் வியந்துரைப்பதாக அமைந்தது,

> "ஞானத்திரளாய் நின்றபெருமான் நல்ல அடியார் மேல்
> ஊனத்திரளை நீக்கும் அதுவும் உண்மைப் பொருள்போலும்"

எனவரும் திருப்பாடலாகும்.

'குற்றமே காக்க பொருளாக' (திருக்குறள்-434) என்றவாறு உயிர்க் குற்றமாகிய இருண்மலத்தையும் ஒருபொருளெனக் கொண்டு அதனை நீக்குதற்கு இறைவனது அருளைத் துணையாகக் கொண்டு உய்திபெறுதல் வேண்டும் என்பதே இத் திருப்பாடலின் கருத்தாகும்.

உயிர்களின் அறிவைத் தடைசெய்து நிற்கும் இருண்மலமானது இடையில் ஒருகாலத்தே வந்து தோன்றியதன்று; அது தோற்றமில் காலமாகவே உயிர்களைப் பிணித்து நிற்பதாகும். அம் மலம் இடையே வந்து தோன்றியதென்றால் ஆன்மாவின்கண்ணே அக் குற்றம் வந்து தோன்றுதற்குரிய காரணம் யாது? என்ற வினா எழும். ஒரு காரணமும் இன்றி இயல்பாகத் தோன்றியதென்றால் உயிர்கள் பாசப் பிணிப்பினின்றும் விடுபெற்ற முத்திக் காலத்திலும் அது வந்து கூடுதல் பொருந்துமல்லவா? அவ்வாறன்றி இருண்மலமானது முத்திக் காலத்தே தன் வலிகெட்டு அடங்குதலின் அது செம்பிற்

களிம்பு போன்று தோற்றமில் காலமாகவே உயிர்களைப் பிணித்து நிற்பது எனக் கொள்ளுதலே ஏற்புடையதாகும்.

உயிர்களுடன் விரவியுள்ள ஆணவமலத்தினை 'இருள்' என வழங்கினாற் போன்று அவ்விருளால் அடரப்படாது உயிர்க்குயிராய் மேற்பட்டு விளங்கும் இறைவனருளாகிய சிவஞானத்தினை ஒளி யென வழங்குதல் சைவசித்தாந்த மரபாகும். இந் நுட்பம்,

> "ஒளிக்கும் இருளுக்கும் ஒன்றேயிடம், ஒன்று மேலிடின் ஒன்று
> ஒளிக்கும்; என்னும் இருள் அடராது" (1)

என உமாபதி சிவனார் அருளிய கொடிக்கவியால் இனிது புல னாதல் காணலாம். சிவஞானமாகிய ஒளிக்கும் ஆணவமாகிய இருளுக்கும் இடம் ஒன்றே ஒளிக்கும் இருளுக்கும் இடமாகிய உயிரின்கண் அவ்விரண்டினுள் ஒன்று மேலிட்டகாலத்திலே மற் றொன்று ஒளித்துநிற்கும். என்றாலும் இறைவன் அருளொளியாகிய சிவஞானத்தினை ஆணவமாகிய இருள் மீதூர்ந்து மறைக்கும் ஆற்ற லுடையதன்று. புறவிருளானது ஞாயிற்றின்ஒளி மேற்பட்டு விளங்கித் தோன்றிய காலத்து இருந்த இடந்தெரியாது தேய்ந்து சிதையுமாறுபோல உயிரின் வியாபகத்தை மறைத்துள்ள ஆணவ இருளும் உயிரின்கண்ணே சிவஞானமாகிய ஒளி மேற்பட்டுத் தோன்றியபொழுது தன் வலி குன்றித் தான் இருந்த இடந்தெரியாமல் மறைந்தொழியும் என்பதே சிவநெறிச் செல்வர் துணிபாகும்.

> "இருள்சேர் இருவினையுஞ் சேரா இறைவன்
> பொருள்சேர் புகழ் புரிந்தார் மாட்டு"

எனவரும் திருக்குறள் இறைவனருளிய மெய்ஞ்ஞானம் என்னும் பொருளால் அகவிருளாகிய ஆணவமலம் அகன்றொழியும் என்னும் இவ்வுண்மையை வற்புறுத்துதல் காணலாம்.

இதுகாறும் எடுத்துக் காட்டியவற்றால் புறத்தும் அகத்தும் உள்ள பொருள்கள் புலனாகாதவாறு தடைசெய்யும் இயல்பின தாகிய இருள் ஓர் உள்பொருளே யென்பதும் இறைவனருளாகிய மெய்ஞ்ஞானத்தால் அவ்விருள் அகன்றொழியும் என்பதும் முன்னைத் தமிழ்ச் சான்றோர் துணிபாதல் நன்கு புலனாம்.




# 18. "தெய்வத் தமிழ்"

[பேராசிரியர் மா. சண்முகசுப்பிரமணியன்]

அமிழ்தினும் இனிய நம் தமிழ் மொழியைத் ''தெய்வத் தமிழ்'' என்று போற்றுகின்றோம். இது பொய்யுரையோ புனைந்துரையோ அன்று.

ஒரு மொழியின் வளமும் வளர்ச்சியும் அதன் பயன்பாட்டைப் பொறுத்தே உள்ளது. எந்தத் துறையில் அது பயன்படுத்தப் பெறுகிறதோ அந்தத் துறையில் அது வளர்கின்றது, வளம் பெறுகின்றது.

நம் தமிழ்நாட்டில் பக்தி வெள்ளத்தைப் பாய்ச்சிய நாயன் மார்களும் ஆழ்வார்களும் இறைமை ஞானத்தை இன்தமிழில் எடுத்து ஓதினர், மறைபொருளாக இருந்த இறைஞானம் மக்க ளனைவரும் உணரும் வகையில் மலர்ந்து மணம் வீசியது அடியார்கள் பாடிய அருட் பாடல்களில்!

மனித குலம் தன் உள்ளுணர்வால் உய்த்துணர்ந்த ஒப்பற்ற உயர் ஞானத்தை ஒண்தமிழிலே உலகுக்கு ஓதினர் மெய்யடி யார்கள். அவர்கள் நாடெங்கும் சென்றனர். ஆலயங்களில் அருந்தமிழ்ப் பாடல்களைப் பாடினர். அச் செந்தமிழ்ப் பாக்களைச் செவிமடுத்த பின்னர் படித்தறியா மக்களும் பரம ஞானத்தை எளிதிலே உணர்ந்து ஏற்றமுற்றனர்.

தமிழ்நாட்டில் ஊற்றெடுத்த இப் பக்தி வெள்ளம் நாளடைவில் பாரத நாடெங்கும் பரவிப் பாய்ந்தது.

பாரத மண்ணிலே பக்தி வெள்ளம் அன்று பரவவில்லையெனில் ஆலயங்கள் பல அழிந்து மறைந்திருக்கும்; ஆன்மீக ஞானம் அருகிப் போயிருக்கும்.

இவ்வாறு பக்தி நெறியினைப் பரவச் செய்த பண்ணார்ந்த தமிழ்மொழி பரமஞானத்தைப் பகரும் பாங்கினைக் காணும் பொழுதுதான் தீந்தமிழ் தெய்வத் தமிழாகத் திகழும் உண்மையினை நாம் உணருகின்றோம்.

• • • •

இறைமையினைப்பற்றி உலகில் எழுந்துள்ள நூல்கள் எண்ணிலடங்காதவை.

இறைமையினை வருணிப்பது, இறைமையின் தன்மைகளைக் கூறுவது, இறைமையை ஏத்துவதால் எய்தும் நலன்களை ஓதுவது— இவ்வாறாகப் பலப் பல நூல்கள் உள்ளன.

ஆனால் உண்மை என்ன ?

இறைவன் சொற்களுக்குள் அடங்காதவன்!

சிறிது சிந்தித்தால் இதன் உண்மை விளங்கும்.

பாலைப் பருகுகிறோம்: அதன் சுவையினை 'இனிப்பு' என்கிறோம். தேனைச் சுவைக்கிறோம்; அதையும் 'இனிப்பு' என்றே கூறுகிறோம். பழம் என்றால் அதன் சுவையும் இனிப்புத் தான்.

பாலும் தேனும் பழமும் இனிப்பு என்றாலும், ஒவ்வொன்றும் வெவ்வேறு வகையான இனிப்புச் சுவையினைக் கொண்டது. இந்த வேறுபாட்டைக் குறிக்கும் வகையில் கூறத்தக்க சொற்கள் இல்லை. எனவே, 'இனிப்பு' என்ற ஒரே சொல்லால்தான் பாலின் சுவையினையும், தேனின் சுவையினையும், பழத்தின் சுவையினையும் குறிப்பிடுகின்றோம்.

பழம் என்று எடுத்துக் கொண்டால் எத்தனை வகைப் பழங்கள்! வாழைப்பழம் ஒருவகை இனிப்பு ; பலாப்பழம் வேறு வகை இனிப்பு; மாம்பழம் மற்றொரு வகை இனிப்பு!

மாம்பழத்தில்தான் எத்தனை வகைகள்! ஒவ்வொரு வகையும் வெவ்வேறான இனிப்புச் சுவையினைக் கொண்டவை!

வேறுபடும் இச் சுவைகளை நம் நாவால் உணருகின்றோம். ஆயினும் அவற்றை வேறுபடுத்திக் கூறும் சொற்கள் இல்லை! 'இனிப்பு' என்ற ஒரே சொல்லால்தான் அவற்றைக் குறிப் பிடுகின்றோம்.

இது தமிழ்மொழியில் மட்டும் உள்ள குறைபாடா? இல்லை. எல்லா மொழிகளிலும் இதே குறைபாடு உள்ளது.

ஆங்கிலத்தில் Sweet என்ற ஒரே சொல்லைப் பயன்படுத்தியே எல்லா வகையான இனிப்புச் சுவைகளையும் குறிப்பிட வேண்டி யிருக்கிறது. வடமொழியில் 'மதுரம்' என்ற சொல்லே இனிப்புச் சுவைகளைப் பொதுவாகக் குறித்து நிற்கிறது.

மணம் எனில் அதில் எத்தனையெத்தனை வகைகள்! மல்லிகை, முல்லை, சண்பகம் என்று எத்தனையோ வகை மலர்கள். அவற்றில் எத்தனையோ வகை மணங்கள்! எல்லா வகை மணங் களையும் ''நறுமணம்'' என்ற ஒரு சொல்லை வைத்துத்தான் குறிப்பிட வேண்டியிருக்கிறது.

இசை என்றால், யாழின் இசை ஒரு வகை, குழலின் இசை ஒரு வகை. குரல்களின் இசையில்தான் எத்தனை வகையான இனிமை! பலதிறப்பட்ட இசை இன்பங்களையும் ''இனிமை'' என்ற ஒரே சொல்லால்தான் நாம் குறிப்பிடுகின்றோம்! வேறு சொற்கள் இல்லை!

அருணோதயக் காட்சியினை 'அழகு' என்கிறோம் ; அல்லி மலர்வதையும் 'அழகு' என்கிறோம்! மயிலின் ஆட்டமும் அழகு.

மங்கையின் நடையும் அழகு! எழிலான தோற்றம் எதையும் குறிப்பதற்கு நாம் 'அழகு', 'வனப்பு' என்பன போன்ற சொற்களையே பயன்படுத்துகிறோம். வேறுபடும் அழகுக் காட்சிகளை உணர்த்தும் வகையில் உற்ற சொற்கள் இல்லை.

இதனால் தெரிவது என்ன?

புலன்கள் வழியாக நாம் பெறும் உணர்வுகள் பலவற்றையும் பாகுபடுத்திக் கூறும் ஆற்றல் மனித இனம் வளர்த்துள்ள மொழிகளுக்கு இல்லை என்பதுதான். அத்தகைய ஆற்றலை அவை பெறுவதும் எளிதன்று.

புலன் உணர்வுகளையே பொருத்தமுறப் புகலமுடியாத மொழியால் எந்தப் புலனுக்கும் எட்டாத இறைமையினை எவ்வாறு கூற இயலும்?

ஐம்புலன்களுக்கும் அகப்படாத அந்த அற்புதப் பொருளை எப்படிக் கூறுவது? எவ்வாறு வருணிப்பது?

உயிர்களுக்கெல்லாம் உயிராகி, உலகெங்கும் உளதாகி, அண்டங்களனைத்தையும் தன்னுள் அடக்கி, அண்டங்களுக்கப்பாலும் அப்பாலுக்கப்பாலும் பரவி நிற்கும் பரம்பொருளை எத்தகைய சொற்களால் குறிப்பிடுவது?

கடலிலும் இறைமை இருக்கிறது; கார்முகிலிலும் இறைமை இருக்கிறது. சந்திரனிலும் அஃது இருக்கிறது; சூரியனிலும் இருக்கிறது. அது நம் உயிரிலும் உள்ளது, உடம்பிலும் உள்ளது. இந்நிலையில் இறைவனைக் 'கடல்' என்பதா, ''கார்முகில்'' என்பதா? ''சந்திரனே'' என்றழைப்பதா, ''சூரியனே'' என்றுரைப்பதா? ''உயிரே'' என்பதா, ''ஊனே'' என்பதா?

எனவே, சொற்களைக் கொண்டு நாம் இறைவனை வருணித்தல் இயலாது என்ற உண்மையினை நமக்கு உணர்த்துகின்றனர், பத்தி நெறி பரவும் பரமஞானிகள்.

''சொல்லும் பொருளும் இறந்த சுடரை''
(புணர்ச்சிப் பத்து)

என்று இறைவனைக் குறிப்பிடுகின்றார் மாணிக்கவாசகர்.

மேலும்,

''சொற்பதம் கடந்த தொல்லோன்'' (திருவண்டப் பகுதி)

என்று ஏத்துகின்றார்.

''செப்புதற்கரிய செழுஞ்சுடர் மூர்த்தி!'' (பிடித்த பத்து)

என்று வியக்கின்றார் மணிவாசகர்.

''சொல்லினால் சொலப்படாது தோன்றுகின்ற சோதி நீ''
(திருச்சந்த விருத்தம்)

என்கிறார் திருமழிசைப்பிரான்.

''படியே இது என்று உரைக்கலாம்
படியன் அல்லன், பரம்பரன்'' (8-8-2)

என்று பாடுகின்றார் நம்மாழ்வார்.

''சொல்லுதற்கரிய சூழலையுடையவனை இறைவன், சொற்பதம் கடந்து நிற்பதே அவன் தன்மை'' என்று இறைவனின் பெருமையினைக் கூறுகின்றார் நாவுக்கரசர்!

''சொற்பதத்தார் சொற்பதமும் கடந்து நின்ற
சொலற்கரிய சூழலாய் இது உன் தன்மை''
(தேவாரம்-பொது)

இறைமை இப் பூமியாக இருக்கிறது என்றால் அது வேறு எதிலும் இல்லை என்று நாம் கருதிவிடலாம். இறைமை விண்ணாக இருக்கிறது என்றால் அது விண்ணில் மட்டுமே உள்ளது என்று நாம் தவறாக எண்ணிவிடலாம். ஆதலால்,

"மண்ணாகி விண்ணாகி மலையுமாகி வயிரமுமாய்
மாணிக்கந்தானே யாகிக்
கண்ணாகிக் கண்ணுக்கோர் மணியுமாகிக் கலையாகிக்
கலைஞானம் தானே யாகி",

(தேவாரம்-பொது)

என்று பாடும் நாவுக்கரசர்,

"மண்ணல்லை விண்ணல்லை வலயமில்லை
மலையல்லை கடலல்லை வாயுவல்லை
எண்ணல்லை எழுத்தல்லை எரியுமல்லை
இரவல்லை பகலல்லை யாவுமல்லை"

(தேவாரம்-திருவொற்றியூர்)

என்றும் பாடுகின்றார்.

"உரைகளுக்கு எல்லாம் அப்பாற்பட்டு நிற்கும் இறைவனை உரைகளால் நாம் விளக்க முற்படுவது ஊமையன் ஒருவன் பேச முயலும் செயல் போன்றது. கரையற்ற கடலுக்குக் கரை காண இயலுமா?" என்று வினவுகிறார் திருமூலர் :

"உரையற்றது ஒன்றை உரைசெய்யும் ஊமர்காள்
கரையற்றது ஒன்றைக் கரை காணல் ஆகுமோ?"

(திருமந்திரம்)

உரைகளை எல்லாம் கடந்த அந்த ஒண்பொருள் எவ்வாறு தான் உள்ளது?

"சொல்லாத நுண்ணுணர்வாய்"

உள்ளது என்கிறார் மணிவாசகர்.

இயற்கையினை ஓர்ந்து காணும் நம் உள்ளத்தில் உதிப்பது தான் இறையுணர்வு என்பது ஞானிகள் நமக்குப் புகட்டும் மெய்ஞ் ஞானமாகும்.

இயற்கையின் எழில் தோற்றத்தை என்னென்பது! எல்லையற்ற பரவெளி, பரவெளியில் பம்பரமாய்ச் சுழலும் பேரண்டங்கள் ஒளித்துகள்களாகக் காட்சியளிக்கின்றன! இப் பேரண்டப் பெரு வெளியிலே ஒரு புள்ளி போன்று சுழலும் இப் பூமிப் பந்து! பூமியில் வாழும் எண்ணற்ற உயிரினங்கள்! இந்த எழிலார்ந்த இயற்கைக் காட்சியினை அமைதியான அகநிலையோடு ஆழ்ந்து காணும் நம் உள்ளத்தில் உதிக்கின்றது ஓர் உணர்வு!

அஃது என்ன உணர்வு?

எழிலார்ந்த இந்த இயற்கைக் காட்சியினை இயற்றி இயக்கும் ஏதோ ஒன்று உள்ளது என்ற உணர்வுதான் அது!

வானத்துச் சுடரொளிகளின் தோற்றத்தின் எழிலிலே இசைந்து நிற்கும் நம் உள்ளத்தில் உதிக்கும் உணர்வாகவே இறையுணர்வு இலங்குகிறது. அம் மெய்யுணர்வினை அவரவர்கள் அனுபவித்து உணரவேண்டுவதல்லாது சொல்லால் விளக்க முடிவதில்லை. இந்த உண்மையினை மணிவாசகம்,

''தோற்றச் சுடரொளியாய், சொல்லாத நுண்ணுணர்வாய்''

என்று தீந்தமிழிலே தீட்டுகிறது!

''சொலப்படான் உணர்வின் மூர்த்தி'' (3-4-10)

என்பது ஆழ்வார் அருளும் அமுதமொழி.

இவ்வாறு, உள்ளத்தில் எழும் உணர்வாக உள்ளது இறைமை. அதனைச் சொற்களால் வருணிக்க இயலாது என்ற இணையற்ற ஞானத்தினை எளிமையான இனிய தமிழிலே இசைத்துள்ளனர் ஆழ்வார்களும் நாயன்மார்களும்!

''சொல்லும் பொருளும் இறந்த சுடர்'',

''சொற்பதம் கடந்த தொல்லோன்'',

''செப்புதற்கரிய செழுஞ்சுடர் மூர்த்தி'',

"சொல்லினால் சொலப்படாது தோன்றுகின்ற சோதி",

"படியே இது என்று உரைக்கலாம் படியன்
அல்லன் பரம்பரன்",

"சொற்பதத்தார் சொற்பதமும் கடந்து நின்ற
சொலற்கரிய சூழலாய் இதுவுன் தன்மை",

"தோற்றச் சுடரொளியாய், சொல்லாத
நுண்ணுணர்வாய்",

"சொலப்படான் உணர்வின் மூர்த்தி"

இவ்வாறு, இறைமை ஞானத்தை எளிமையாகவும் இனிமையாகவும் இசைப்பதால்தான் தீந்தமிழைத் தெய்வத் தமிழ் என்று போற்றுகின்றோம் !

# 19. தேம்பாவணியில் சூசையின் இறையனுபவம்

[அறிஞர் வி. மி. ஞானப்பிரகாசம், சே. ச.]

கண்ணகி அளவற்ற பொறுமை, மன்னிக்கும் மனநிலை, வாதிடும் திறமை, அழிக்கும் ஆற்றல் போன்ற பல்வேறு பண்புகளைக் கொண்டிருந்தாள். இவற்றிற்கு வேர் போன்றிருந்த பண்பு, அவளது கற்பு எனலாம். கற்பினால் அவள் தற்காத்தாள், தற்கொண்டான் பேணினாள். இவள் பெய் என, நெருப்பு மழை பெய்தது.

தேம்பாவணியில் சூசை இளவயதில் காடு சென்று வாழ விரும்பிப் பின் நாடு வருகின்றார்; மனைவிமீது ஐயம் தோன்றிய போது மனவேதனையுற்று, பின் அதனினின்று விடுதலையடைகின்றார்; இயேசு குழந்தையையும் தம் மனைவி மரியாளையும் பாலஸ்தீனம் விட்டு எகிப்திற்கு அழைத்துச் செல்கின்றார்; அந்த வேற்று நாட்டில் ஏழு ஆண்டுகள் பணி செய்கின்றார்; மறுபடியும் பாலஸ்தீன் நாடு திரும்பி வருகின்றார்; இயேசு குழந்தை தமது பன்னிரண்டாவது வயதில் காணாமற்போனபோது, மூன்று நாள் ஊண், உறக்கமின்றித் தேடித் திரிகின்றார்; இறுதியில் உடல் நோயால் எட்டு ஆண்டுகள் வருந்தி இறக்கின்றார். இந்த எளிய வாழ்வில் ஏற்பட்ட மேடுபள்ளங்களை இனிய முறையில், பொறுமையுடன், மன எழுச்சியுடன் சூசை கடந்து செல்ல அடிப்படைக் காரணமாய் உதவியது அவரது இறைப்பற்று, ஆழ்ந்த இறையனுபவம் என்று கூறலாம்.

## இறையனுபவம் என்றால் என்ன ?

இறைவனோடு நெருங்கிப் பழகுவது, இறைவனை இடைவிடாமல் நினைப்பது,—'நின்றநின் தன்மை நினைப்பற நினைத்

தேன்' என்று மணிவாசகர் கூறுவதுபோல் நினைப்பது,— இயற்கையில் இறைவனைக் காண்பது, வாழ்வில் நடக்கும் நிகழ்ச்சிகளில் இறைவனது திருவிளையாடலைக் கண்டு களிப்பது, பிறரிடம், சிறப்பாக, இன்னா செய்தாரிடம் இறைவன் சாயலைக் கண்டு இனிய முறையில் நடப்பது—இவை போன்ற பண்புகளை, உடையது இறையனுபவம்.

இறையனுபவம் பெறுவோர் என்றும் இனிமையே சுவைப்பர் என்றும் சொல்வதற்கில்லை. இறை ஆறுதல் என்ற தென்றல் வீசும் சோலையில் தங்கியவர்கள், மனவறட்சி என்ற வெப்பக் காற்றடிக்கும் பாலையிலும் நடக்க நேரிடலாம். அச் சமயத்திலும் இவர்கள் உள்ளம் இறைவனையே தேடிச் செல்லும். இறையடியே இவர்களுக்குச் சரண்.

**இளவயதில் :**

இயற்கையின் எழிலை ஞாயிறு திங்கள் விண்மீன் ஆகியவற்றில் கண்ட சூசையின் உள்ளம் இவற்றைப் படைத்த இறைவனையே நாடும்.

"தூநி லாவுசெஞ் சுடரும் மீன்களும்
வான்நி லாவுஉடு நடுவ முங்கிய
பால்நி லாவையும் பார்த்து நாதனைத்
தேன்நி லாவுஉரை செப்பி வாழ்த்துவான்."[1]

தம் வாழ்வு முழுவதுமே இறைவனுக்குக் காணிக்கையாக்க விரும்பிய சூசை இளவயதில் காடு சென்றார். நாட்டில் வாழும் வாழ்வின் பெரும்பகுதி இறைவனை மறக்க வைக்கும், சமயா சமயமே இறைவனை நினைக்க வைக்கும். இது மரத்தில் அவ்வப் போது தோன்றும் கனிகளைக் கடவுளுக்குக் காணிக்கையாக்குவதற்கு ஒக்கும். ஆயின் காட்டில் வாழும் வாழ்வு, என்றும் இறையுணர்விலேயே இயங்கும் ; கனிகளை மட்டுமன்று மரத்தையும் கடவுளுக்குக் காணிக்கையாக்குவதற்கு ஒக்கும் என்று சூசை நினைத்தார்.

"நாள்தொறும் கனிந்த செந்தேன்
நற்கனி அளித்தல் நன்றோ ?
கோடுறு மரமும் தன்னைக் கொடுத்தலே நன்றோ ?"[2]

கடவுள் தந்த கட்டளைப்படி சூசை மரியம்மாள் என்ற பெண்ணை மணந்தார். இல்லறத்தில் துறவறம் காக்க இருவரும் உறுதி கூறினர், ஏழாம் மாதத்தில் மரியாள் தாய்மை அடையும் அடையாளங்கள் தோன்றின. கன்னி, தற்காத்து, தகை சான்ற சொற்காக்கவில்லையோ என்ற ஐயம் சூசை உள்ளத்தில் உதித்தது; மனத்தை வாட்டியது. உண்மை எது என்றறியாத நிலை உருவாயிற்று. தெளிவு தரும் இறைவனே மருளையும், குறித்ததொரு நோக்கொடு, தருவான் என்பதை உணர்ந்த சூசை வேண்டினார் :

"மருள்அற உணராய் கொல்லோ ?
மண்ம்செயப் பணிசெய் தன்றே
அருள்அற வருந்தும் தன்மை அதன்பயன் எனஓர்ந் தாயோ?"[3]

இறை அருளால், வானவர் வழியாக, உண்மை உணர்ந்த சூசை ஐயம் நீங்கப்பெற்று, ஆண்டவனைப் புகழ்ந்தார். வானவர் மரியன்னையைச் சூழ்ந்து, ஒன்பது வகை மலர்களை—லிலி, உரோசா, கமலம், சூரியகாந்தி, குமுதம், செவ்வந்தி, சண்பகம், வகுளம், தும்பை—மரியன்னை அடியில் வைத்து வணங்கி வாழ்த்தும் வானகக் காட்சியைக் கண்டு மகிழ்ந்தார்.

**பாலைவழிப் பயணம் :**

யூதேயா மன்னன் ஏரோது யெருசலேமைச் சுற்றியிருந்த ஊர்களில் பிறந்திருந்த, இரண்டு வயதுக்குட்பட்ட ஆண் குழந்தைகளைக் கொல்ல விரும்பினான். இக் குழந்தைகளுள் இயேசுவும் கொல்லப்படுவார் என்பது அவன் நம்பிக்கை. ஆயின் சூசை இயேசு குழந்தையை எடுத்துக்கொண்டு மனைவியோடு எகிப்துக்குப் புறப்படவேண்டும் என்பது இறைவன் கட்டளை.

இப் பயணத்தில், ஓர் ஐயம், அருகில் இருக்கும் இறைவன் ஆற்றல் அற்றவரா என்ற ஐயம் எழுந்தது சூசை மனத்தில். வான

தூதர்கள் இறைவனது பழங்கால அரிய செயல்களை விரித்துக் கூறினர். எகிப்தியர் கையிலிருந்து இஸ்ராயேலரை விடுவித்தது, சேதையோனுக்குப் புதுமையான முறையில் வெற்றி தந்தது முதலிய வீரச் செயல்கள் அருகில் ஆற்றல் அற்றவர்போல் இருக்கும் இயேசு குழந்தையின் செயல்களே என்பதை அறிந்த சூசை, களரி மாநகரில் நின்ற பவளத்தூணில் கடவுளின் திறத்தைக் கண்டார் :

''பாலைக் கதிர்மதியம் தீபம் ஏந்தப் பணித்தூண்மேல்
காலை கடவுள்திறங் கண்டசூசை தகவுற்றான்.''[4]

சூசை நடந்து சென்றது பாலைநிலம். எனினும் இறைவன் அருகில் இருக்கின்றார், இறைவன் ஆணைப்படியே அனைத்தும் இயங்குகின்றன என்ற நினைவு சூசைக்குக் குளிர்ச்சி தருகிறது. 'பாலையின் வெப்பம் பனிமருதத் தாக்கினையே' 'வீங்கு ஓத நீர் நிலைஆம், வெய்ய நஞ்சு இன் அமுதாம், ஈங்கு ஓத, ஒப் பிறந்த எந்தை அடி சென்றால்'[5] என்று சூசை பாடுகின்றார். தீச் சூளையில் இடப்பெற்ற நாவுக்கரசர், ஈசன் எந்தை இணையடி நீழல்... மாசில் வீணை போன்றது என்று பாடியது இங்கு நினைவு கூரத் தக்கது.

### கர்ம யோகி

இறையநுபவம், சிலர் வாழ்வில் அறிவார்ந்த ஞானத்தில் வெளிப்படும்; வேறு சிலர் வாழ்வில் பக்தியாய் மலரும்; இன்னும் சிலர் வாழ்வில் திருப்பணியாக இசைக்கும். 'என் கடன் பணி செய்து கிடப்பதே' என்று கர்ம யோகி அப்பர் குரலே சூசையின் வாழ்விலும் ஒலிக்கின்றது.

தச்சு வேலை சூசையின் தொழில். அஃது, ஊதியத்திற்காக அன்று, கடவுளை உண்பிப்பதற்காகச் செய்யப்பட்டது. நெற்றி வியர்வை நிலத்தில் விழ உழைத்தது, பழைய தண்டனையின் விளைவே என்றாலும், இவ்வுழைப்பால் இறைவன் உண்கின்றார் என்ற எண்ணம், பழைய சாப (கரு) வினையைத் திருவினையாகக் காட்டுகின்றது.

"அருவினைத் தொழில் உழைத்து அருந்து தீர்என
கருவிளைச் சாபமாய்க் கடவுள் ஏவினான்,
பெருவினை செய்யநான். பிரான்உண் பான்எனில்
திருவினைத் தன்மையாம் தொழில்செய் தாற்றலே."[6]

வீட்டில் இருந்து வேலை செய்வதும் இறைவனுக்கே, காட்டில் நடந்து பயணம் செய்வதும் இறைவனுக்கே, வேற்று நாட்டில் குடியேறுவதும் இறைவனுக்கே, சொந்த நாடு திரும்புவதும் இறைவனுக்கே, இறைவனோடேயே என்ற பேருண்மை சூசை உளத்தில் வேரூன்றி இருந்தது. 'நீங்கள் உண்டாலும் குடித்தாலும் கடவுளின் மகிமைக்காகவே செய்யுங்கள்' என்ற சின்னப்பரின்[7] அறிவுரையும்,

"உண்ணுஞ் சோறு பருகுநீர் தின்னும் வெற்றிலையுமெல்லாம்
கண்ணன் எம்பெரு மானென்றே கண்கள் நீர்மல்கி"

என்று பாடின நம்மாழ்வார்[8] கூற்றும்.

"நின்றாலும் இருந்தாலும் கிடந்தாலும் நடந்தாலும்
மென்றாலும் துயின்றாலும் விழித்தாலும் இமைத்தாலும்
மன்றாடும் மலர்ப்பாதம் ஒருகாலும் மறவாமை
குன்றாத உணர்வுடையார் தொண்டராம் குணமிக்கார்"

என்ற சேக்கிழார்[9] பாடலும் ஒப்பு நோக்கத்தக்கன.

**பிறர் பணி :**

இறைவனோடு எதிலும் எங்கும் இணைந்திருப்பவர்கள் பிறரைப் புறக்கணிப்பவர்கள் அல்லர். இறைவனை இடைவிடாமல் துய்த்த திருமூலர் நாட்டுத் தலைவரின் கடமையைச் சுட்டிக் காட்டுகிறார் ; சமுதாய நீதியைப் பாடுகிறார். கடவுளை நினைப்பவர் கள்ளத்தனம் செய்யார் என்கிறார்.

"கண்காணி இல் லா இடம் இல்லை காணுங்கால்
கண்காணி இல்என்று கள்ளம்பல செய்வார்
கண்காணி யாகக் கலந்துஎங்கும் நின்றானைக்
கண்காணி கண்டார் கனவுஒழிந் தாரே"[10]

கிறிஸ்தவ மரபில் இறை அனுபவத்தில் ஆழ்ந்த அவிலா தெரசம்மாள், சிலுவை அருளப்பர், பிரான்சிஸ் அசிசியார், இல யோலா இஞ்ஞாசியார் போன்றோர் பிறர் பணி செய்வதில் பெரும் ஈடுபாடு கொண்டவர்கள்.

இறையன்பில் மூழ்கியிருந்த சூசை பெத்திலகேம் சென்றபோது, அங்குக் காந்தரி என்ற காமுகப் பெண்ணைக் கண்டார். அவள் தன் காம வலையில் பலரைச் சிக்கவைக்க நின்றாள் என்பதை உணர்ந்தார் அவளது மனம் மாற வேண்டுமென மரியன் னையிடம் கேட்டார். இறையருள் பெற்ற மரியன்னை கட்டளையிட, காந்தரியின் உள்ளத்தில் குடிகொண்டிருந்த பேய் விரட்டப்பட்டது.[11]

எகிப்துக்குச் சென்ற பயணத்தில் காசை நகரில்; ஒரு வீட்டில், தாய் உயிர் நீத்த சமயத்தில், ஐந்து பெண்கள் அழுது நின்ற காட்சியைச் சூசை கண்டார், இரங்கினார்; அவர்களது துயர் அகற்ற இயேசுவை வேண்டினார்; தாய் உயிர் பெற்றெழுந்தாள்[12]. அங்கேயே முடநோயால் வருந்திய பெண், தனது நோய் தீரச் சூசையிடம் மன்றாடினாள். 'அணங்கு தேவமகன் முகத்து ஆறும்'[13] என்று சூசை அறைந்தார்; நோய் நீங்கிற்று.

எகிப்தில் சூசை தங்கிய ஏழு ஆண்டும் பணிவாழ்வே. செல்வருக்கு ஈகை பற்றிக் கூறல், ஊழ்வினைபற்றிச் சிவா சிவனுக்கு விளக்குதல் (ஞாபகப் படலம்), காமச் சேற்றில் அமிழ்ந்தியிருந்த வாமனைத் தூக்கி விடல் (வாமன் ஆட்சிப் படலம்) முதலிய நற்பணிகள் சூசையின் அன்றாட உணவாயின.

தாம் அடைந்து இன்புற்ற இறையன்பும் அருளும் பிறர் பெற்று இன்புறுதலைக் கண்டு காமுறுவது சூசைக்கு இயல்பாயிற்று.

**இடுக்கண் வருங்கால் :**

இறைவன் திருமுன் என்றும் வாழ்வோர் இன்னல் இடையுற்று, எதிர்ப்பு ஏற்படும்பொழுதும் இறைவனை மறவார். இருள்

சூழ்ந்த பள்ளத்தாக்கில் அவர்கள் நடந்தாலும் இறைவனே ஒளி என்ற நம்பிக்கை அவர்கள் மனத்தில் ஒளிரும். சமணர் திருநாவுக்கரசரை நீற்றறையில் இட்டபோது, 'மாசில் வீணையும்' என்று பாடினதற்குக் காரணம், இறைவனைத் துய்த்தவர்கள், இறை இன்பத்தை, ஆறுதலை, இருள் இன்னல் பகை நடுவிலும் சுவைக்கத் தவறார் என்பதன்றோ ?

எளிய வாழ்வு வாழ்ந்த சூசைக்கும், எல்லார்க்கும் இனியவே செய்த சூசைக்கும் எதிரிகள் முளைத்தனர். தீமையின் உருவான பேய்கள் பல்வேறு அரிய, அதிர்ச்சி தரும் வழிகளில் அவரைத் தாக்கின. இறைவனே தஞ்சம் என்றடைந்தவர்க்குப் பேய்கள் என்ன செய்ய முடியும் என்று சூசை உறுதியுடன் எதிர்த்தார்[14]

இராமாயணத்தில் ஒரு கூனி முளைத்ததுபோல, தேம்பாவணியில் ஒரு சுரமி தோன்றினாள். எகிப்து நாட்டில் சூசை செய்த புரட்சிகளைக் கண்டு பொறாமை கொண்ட,

"கூன் உருக் கோலில் ஊன்றிக்
குலுங்கிய சென்னி ஆட்டி
ஊனுருக் கழிந்த நீள்தோல்
உடுத்த என்பு ஒழுங்கில் தோன்றி
மீனுருக் கழிந்த கண்புண்
மெலிமுகச் சுரமி."[15]

நாவகன் என்ற போர் வீரனைத் தூண்டினாள். போர் வீரன் சூசையின் அறவுரையைத் தாங்க முடியாமல்

"'புண் ஒன்றுபடல் நன்று' என்றாய்
'புண் படுக' என்ன எள்ளி"

கன்னத்தில் அறைந்தான்.[16]

அறைபட்ட சூசை மகிழ்ந்து நாவகனை நோக்கினார். சூசையின் முகத்தில் விளங்கிய இறை ஒளியால் நாவகன் மனம் வருந்திச் சூசையின் அடியில் வீழ்ந்தான். 'தனிக் கதிர் உணர்வின் மிக்

கோன்''[17] என்று இப் பாடலில் வீரமாமுனிவர் சூசைக்கு அடைமொழி தருகின்றார். இறைவனிடமிருந்து பெற்ற தனி ஒளியினால் உருவான உயர்ந்த உணர்வு, இறையுணர்வு மிகுந்திருந்த சூசை, 'நல்லோர் மேலும் தீயோர் மேலும்' கதிரோனை உதிக்கச் செய்யும்[18] வானகத் தந்தைபோல நடந்து கொண்டார்.

முடிவு: சூசை பிறந்ததும் வாழ்த்துக் கூற வந்த பெரியோர், இவன் 'கடவுள் தன் தாட்கு உவகை செயும் தண்தார் இவனாவான்''[19] என்றனர். இறைவனோ இவன், 'ஆடாநிலை யறத்து எம் மார்பில் தேம்பாவணி யாவான், வாடா அருமகன்'[20] என்று அறிவித்தார். அவ்வாறே சூசை அமைதியான வாழ்விலும், பாலை வழிப் பயணத்திலும், பிறர் பணியிலும், பகைவர் நடுவிலும் இறைவனோடு இணைந்து வாழ்ந்தார்; அவர் திருமார்பில் தேம்பாவணியென விளங்கினார்.

## அடிக்குறிப்பு

1. தேம்பாவணி, 4 : 6
2. தேம்பாவணி, 4 : 35.
3. தேம்பாவணி, 7 : 70.
4. தேம்பாவணி, 16 : 54.
5. தேம்பாவணி, 19 : 18, 19.
6. தேம்பாவணி, 9 : 110.
7. 1. கொரிந். 10 : 31.
8. திருவாய்மொழி, 6 : 7. 1.
9. பெரியபுராணம், பத்தராய்ப் பணிவார் புராணம். 7.
10. திருமந்திரம், 2059.
11. தேம்பாவணி, 10 : 38.
12. தேம்பாவணி, 17 : 44—45.
13. தேம்பாவணி, 17 : 48—49.

14. தேம்பாவணி, 24 : 52.
15. தேம்பாவணி, 29 : 3.
16. தேம்பாவணி, 29 : 110.
17. தேம்பாவணி, 29 : 111.
18. மத்தேயு. 5 : 45.
19. தேம்பாவணி, 3 : 51.
20. தேம்பாவணி, 3 : 57.

# 20. எட்டுத்தொகை இறை வணக்கம்

[பேராசிரியர் ரம்போலா மாஸ்கரேனஸ்]

''நான் பக்தி மார்க்கத்தில் ஈடுபட்டவன் அல்லன், மத பக்தனும் அல்லன், நான் எந்த மதத்தைப் பின்பற்றுகிறேன் என்பது எனக்கே தெரியாது. இத்தகைய நான் பக்தி மார்க்கத்தில் ஈடுபெட்டிருப்போர் பாடல்களைப் போற்றுகிறேன்; படிக்கிறேன்; சுவைக்கிறேன்;'' இவ்வாறு சாமி சிதம்பரனார் சொல்கிறார். இப்படிச் சொல்வதுடன் அவர் அமைந்துவிடவில்லை. அருள்நெறித்தொடர் என்ற வரிசையில் சங்க காலத்திலிருந்து அண்மைக் காலம்வரை நயமான பக்திப் பாடல்களை வரிசைப்படுத்தி விளக்கந் தந்துள்ளார்.

பக்தி மார்க்கத்தில் ஈடுபட்டவர்கள் மதபக்தர்கள் பக்திப்பாடல் களைத் தொகுத்துக் காணும் முயற்சி நன்முயற்சி; வரவேற்கத்தக்க முயற்சி. எனவே சில பக்திப் பாடல் செய்திகளைத் தொகுத்துக் காண்போம். இங்கே எட்டுத்தொகையிலுள்ள கடவுள் வாழ்த்துச் செய்யுட்கள் விளக்கங்களுடன் தொகுத்துக் காட்டப்பெறுகின்றன.

நற்றிணை :

''பெரிய நிலம் தன் சிவந்த அடிகளாகவும், தூய நீரையுடைய சங்குகள் ஒலிக்கின்ற கடல் ஆடையாகவும், ஆகாயம் மேனியாகவும், திசை கைகளாகவும், தண்ணிய கதிர்களையுடைய திங்களும், ஞாயிறும் கண்களாகவும் கொண்டு அமைந்துள்ள எல்லாப் பொருட் களையும் தன்னுள் அடக்கிய, வேதத்தாற் கூறப்படும் முதல்வன் விளங்கிய திகிரியையுடைய மாயோன் என்று ஆன்றோர் கூறுவர். ஆதலின் யாமும் அவனையே வணங்குவோம்''—இவ்வாறு நற்றிணை நூல் தொடக்கத்தில் பெருந்தேவனார் இறைவனைப் போற்றுவர்.

குறுந்தொகை :

செந்தாமரை மலரைப் போன்றனவும் அடியார்க்கு விருப்பத்தைச் செய்வனவுமான திருவடிகள், பவழம் போன்று சிவந்த நிறத்தையுடைய திருமேனி. விளங்குகின்ற ஒளியினையுடைய, குன்றிமணி நிறம்போற் சிவந்த ஆடை, கிரவுஞ்ச மலையினது நடுவிடம் பிளக்கும்படி வீசிய அழகிய ஒளியுடைய நெடிய வேல்படை, சேவல் வரையப்பெற்ற கொடி. இவற்றை உடைய முருகக் கடவுள் காத்தருளுதலால் உலகத்திலுள்ள உயிர்கள் இன்ப நாட்களை எய்தின. ஆதலின் உலகுக்கு இடையூறில்லை. குறுந்தொகை நூலை ஓதுவார் நூலின் முடிந்த பயனாகிய வீட்டின்பத்தையும் இம்மையின்பத்தையும் எய்துமாறு இக் கடவுள் வாழ்த்தினைப் பெருந்தேவனார் பாடியுள்ளார்.

ஐங்குறுநூறு :

நீல நிறமான திருமேனியினையும் வாலிய இழையினையுமுடைய உமை நங்கையைத் தன் கூறாக உடைய ஒப்பற்ற சிவபிரானின் இரண்டாகிய திருவடி நிழற்கீழ் மூவகை உலகும் முறையே தோன்றி நிலவுவவாயின ஆகையால் நாமும் அவ்வுலகருள் முதல்வனை வணங்கித் தாள்நிழல் வாழ்க்கையைப் பெறுவோமாக. வாழ்த்து வணக்கம் பொருளியல்பு உரைத்தல் என்ற வாழ்த்து வகை மூன்றனுள், இது பொருளியல்பு உரைத்தல் ஆகும். இருதாள்நிழல் என்பது இரு திருவடிகளின் திருவருள். அங்ஙனம் கூறியது இறைவன் அருளாற்றலைக் குறிப்பதற்காம்.

பதிற்றுப்பத்து :

நெருப்பை இகழ்ந்தாற்போன்ற சிவந்த நிறத்தையுடையவன். விரிந்த பூங்கொத்துகளையுடைய கொன்றைப் பூவால் தொடுக்கப் பெற்ற பசிய மாலையணிந்த மார்பன். கெடாத அவுணர்தம் எயில் மூன்றும் வெந்தழியுமாறு தீக்கொளுவி அழித்த வில்லையுடையவன். செறிந்த இருளின் சுடுகாட்டை விரும்பி அவ்விடத்தே நின்று ஆடிய திருக்கூத்தை யுடையவன். நீண்ட முதுகின் புறத்தே

வீழ்ந்து அதனை மறைத்த தாழ்ந்த சடையை உடையவன். வெள்ளிய மணிகள் மறைந்த தாழ்ந்த சடையை உடையவன். வெள்ளிய மணிகள் துடையின்புடையே இயக்கப்பெற்று ஒலிக்கும் விழாவினையுடையவன். நுண்ணிய நூலால் கட்டப்பெற்ற துடியின் மாறி ஒலிக்கும் விரலையுடையவன். ஆணும், பெண்ணுமாகிய இருவகையுருவும் ஒருருவில் பெற்று அவ்விருவகை யுருவிற் கேற்பத் தோடும்– குழையுமாகிய இருவகை அணிகளால் பொலிந்த அழகையுடையவன். வளர்கின்ற இளம்பிறைத் திங்கள் தங்கிய நுதலையுடையவன் நிறத்தால் களங்கனிதான் நிகரொவ்வாமையை ஏற்றுக்கொள்ளும் கருநிறத்தால் கறையுற்ற திருக்கழுத்தை யுடையவன். தெளிந்த ஒளியையுயை மூவிலை வேலேந்தியவன். ஒளி விட்டுத் திகழும் வேறுபல படைகளையுடையவன். இக் கோலங் கொண்ட காலக்கடவுளாகிய இறைவனுக்கு மிகுந்த வெற்றி உயர்வதாக :

இவ் வாழ்த்து பதிற்றுப்பத்தென வெளியாகியிருக்கும் நூலில் காணப்படவில்லை. ஆயினும் புறத்திணையுரையில் நச்சினார்க்கினியரால் கடவுள் வாழ்த்துக்கு எடுத்துககாட்டாகக் காட்டப்பட்டுள்ளது இப் பாட்டு. இது பதிற்றுபபத்தின் கடவுள் வாழ்த்துப் பாட்டாக இருக்கலாம் என்பதும் இதனைப் பாடியவர் பெருந்தேவனார் என்பதும அறிஞர் கருத்து.

பரிபாடல் :

பரிபாடலில் நமக்குக் கிடைத்துள்ள பாடல்களில் திருமால் மீதும் முருகன்மீதும் ஆகிய 14 பாடல்கள் கடவுள் வாழ்த்துத் துறையிலேயே அமைந்துள்ளன. ஏனைய தொகைகளின் தொடக்கத்தில் அமைந்தனபோலக் கடவுள் வாழ்த்து இல்லை. புலவர் இளவெயினனார் காட்சிப் பொருளில் கடவுளைப் போற்றிக்கூறும் அழகு பன்முறையும் இசைத்து இன்புறத்தக்கது.

நல்லழிசியார் முருகவேளை வணங்கி ''இறைவனே எம்போன்ற மானிடரை அணுகி அவர் மனம் நெகிழும்படி பணிமொழி பற்பல புனைந்து பாடுகின்ற புன் செயலை இனி அறவே நீத்து என்றும்

உன்னையே ஏத்தி ஏத்தி வணங்குவோம். எதற்காக வணங்குகிறோம்! பொன்னும் பொருளும் போகமும் பெறுவதற்காக அன்று. இவையெல்லாம் தோன்றி மறையும் பொய்ப் பொருட்கள். நாங்கள் வேண்டுவனவெல்லாம் அருளும் அன்பும் அறமுமேயாகிய இம்மை மறுமைப் பயன்தரும் பண்புகளேயாம். உருள்கின்ற பூங்கொத்தை உடைய தழைத்த கடப்பமாலையை அணிந்த முருகக் கடவுளே இவற்றை எங்களுக்குத் தந்தருள்வாயாக.

**கலித்தொகை :**

கலித்தொகையில் உள்ள கடவுள் வாழ்த்துச் செய்யுளைப் பாடியவர் நல்லந்துவனார்.

இவ் வாழ்த்து சிவபிரானைப் பற்றியது. இதில் கூறப்பெறுவன : வேதத்தின் அங்கங்களை நன்கறிந்த அந்தணர்களும் தெளிதற்கரிய முறைகள் பலவற்றை அருளியவன் சிவபிரான். அவன் தெளிந்த கங்கை நீரைத் தன் சடையிலே மறைத்தவன். முப்புரங்களைத் தீயினால் எரித்தவன். வாக்கினால் உரைக்கமுடியாதவன். மனத்தினுக்கும் எட்டாதவன், கடுங்கூளிகளைக் கொண்டு புறங்கொடாத போர் புரிபவன். நீலமணிபோலும் கழுத்தை உடையவன். திசைகளாகிய கைகளை உடையவன். எட்டுத் திசைகளிலிருந்தும் அடியவர்கள் வருவார்கள். அவர்களை அப்படி அப்படியே நிறுத்தி "இதோ என் அருளைப் பெற்றுக்கொள்ளுங்கள்" என்று வழங்கும் வன்மை படைத்தவை அவன் கைகள் :

*"ஆறறி அந்தணர்க்கருமறை......எண்கையாய்!"*

எனத் தாம் வழிபடும் தெய்வத்தை விளித்து அவனைச் செவிமடுக்கச் சொல்லிய புலவர், "பெருமானே உன்னுடைய ஊழித்திருநடனம் நினைக்க நினைக்க வியப்பைத் தருவது" என்கிறார்.

"எண் கையன்" யுகாந்த காலத்தில் நடம்புரிந்து எல்லாவற்றையும் அழிப்பன் என்பர் சைவ சித்தாந்திகள். அவ்வாறு அழித்தாடும்போது அவன் கைகொட்டி ஆடுவான். அந்த ஆட்டம் கொடுகொட்டி ஆட்டம் எனப்படும். அழிந்தவற்றின் சாம்பலைப் பூசி

ஆடுவான். அந்த ஆட்டம் பாண்டரங்கம் எனப்படும். தலை ஓடு முதலிய எலும்புகளைத் தாங்கி ஆடுவான். அந்த ஆட்டம் கபாலம் எனப்படும். இவ்வாறு எல்லாவற்றையும் அழிக்கும் காலத்தில் அவன் அருளியல்பு மேலே விளங்கித் தோன்றுவதில்லையாம். அருள் இயல்பாகிய அம்மை அழிக்கும் செயலில் கலந்துகொள்வது முறையாகாது. ஆகவே, நீ அழி நடம் புரியும்போது அவள் உன் ஆட்டத்திற்குத் தாளம் தருவாளா? தூக்குத் தருவாளா? முற் பாணி தருவாளா? என்று முறைப்பட வினவுகிறார் புலவர். தருவாளா என மும்முறை தொடர்ந்து வரும் வினாக்கள் தரமாட் டாள் என்ற குறிப்பைத் தருவன.

ஒலிக்கின்ற துடியாகிய பறை பலவகை ஒலிகளை ஒலிக் கின்றது. வெவ்வேறு உருவமாக இருந்த உயிர்க் கூட்டங்களை அவற்றின் வெவ்வேறு போக்கிலிருந்து மீட்டு உன்னிடத்து அடக்கிக் கொண்டால், இவ்வாறு கொடிகொட்டி ஆடும்போது கொடிபோலும் இடையுடையாள் சீர் என்ற தாளத்தைத் தருவாளா?

"படுபறை....................தருவாளோ?"

மேற்சென்று நெருங்கும் பலவகைப் போரை வென்று அந்த வலிமையால் நீற்றை அணிந்து பாண்டரங்கம் என்னும் கூத்தை நீ ஆடும்போது வண்டரற்றும் கூந்தலாள் தூக்கு என்னும் தாள வகையைத் தருவாளா?

"மண்டமர் பலகடந்து...........தருவாளோ?"

கொலைசெய்ய வந்த புலியின் தோலை இடையே கட்டிக் கொன்றை மாலை கழுத்திலே புரண்டசைய பிரமனுடைய தலை யோட்டை உள்ளங்கையிலே ஏந்திக்கொண்டு நீ கபாலம் என்னும் கூத்தை ஆடும்போது அணியொளிர் முறுவலாள் தாளத்தின் முற்பகுதியாகிய பாணியைத் தருவாளா?

"கொலையுழுவைத் தோலசைஇக் கொன்றைத்தார்
..................தருவாளோ"

ஊழித் தாண்டவத்தில் பரமசிவனும், பார்வதியும் தவிர ஏனைய வெல்லாம் அழிந்தொழியும். ஆதலால் அந்நிலையில் வேறு

யாரும் தானம் தருவதற்கில்லையே! ஒருவகையில் பார்க்கப் போனால் அழிக்கும் தொழிலும் அருள் காரணமாகவே நிகழ்கின்றது. எப்படியும் அம்மையே உன் ஆட்டத்திற்குத் தாளம் தருவது கட்டாய மாக இருக்கின்றது. இது ''பாணியும் தூக்கும் சீரும் என்றிவை மாணிழை அரிவை காப்ப நீ ஆடி அமர்ந்தனை'' என்று கூறி முடிக்கும் ஆற்றால் தெரிகின்றது.

''நாங்கள் உன்னை எய்துவதற்கு ஏற்ற உயர்வு பெறாதவர்கள்; அன்பில்லாதவர்கள் ஆயினும் நீ எங்களுக்கு ஏற்ற வகையில் உருவம் முதலியன பெற்று இரங்கி வந்து அருள் செய்கிறாய். நின் கருணை இருந்தவாறென்னே!'' என்று துதித்து மகிழ்கிறார் புலவர்.

அகநானூறு :

அகநானூற்றுக் கடவுள் வாழ்த்துச் செய்யுளைப் பாடியவர் பெருந்தேவனார்.

சிவந்த வானைப்போன்ற திருமேனி. வானில் விளங்கும் பிறையைப் போன்ற வளைந்த கூரிய எயிறு. அனல் கப்புவிட்டு எரிவதைப் போன்று விளங்கும் முறுக்குண்ட சடை. இளம் பிறை யுடன் ஒளிரும் சென்னி. மூப்புறாத முனிவரும் தேவரும் பிறரும் அறியாத தொன்மையாகிய தன்மை, கோடுகள் விளங்கும் வலிய புலியின் தோல் உடை. மறை இசை பொருந்திய நீலமணி போலும் மிடறு. இவற்றையுடைய அந்தணன் சிவபிரான். இப் பிரான் தாரன் மாலையன் கண்ணியன். இத் தாரும் மாலையும் கண்ணியும் கார்காலத்தில் விரிவனவும் பொன்னைப் போன்றனவுமான கொன் றையின் புதிய மலர்களாலானவை. இவன் மார்பில் உள்ளது குற்ற மற்ற நுண்ணிய பூணூல். நெற்றியில் உள்ளது இமைத்தலில்லாத கண். கையில் உள்ளது பகைவரைக் கொன்று குந்தாலியுடன் விளங்கும் மழுப்படை. தோல்வியில்லாத இவனுக்கு மூன்று தலை யையுடைய சூலப்படையும் உண்டு. இவன் ஏறி நடாத்தியது ஆனேறு. இவனது ஒரு கூற்றில் உறைபவள் உமையம்மை. இத் தன்மையனாகிய இறைவனது அழிதலில்லாத திருவடி நிழலில்

உலகம் தங்கிற்று. ஆதலின் இவ் வையகத்திற்கு இடையூறு இல்லை.

''மேனி முதலியவற்றைக் கூறினார் அவ்வுருவைத் தியானம் பண்ணுக எனற்கு'', என இவ்வாறு உரைப்பர் உரைகாரர். ''வாழ்த்தியல் வகைநாற்பாவிற்கு முரித்தே'' என்னும் தொல் காப்பியச் சூத்திர உரையில் இச் செய்யுளை எடுத்துக்காட்டி இஃது உலகிற்குப் பயன்பட வாழ்த்தியது என்பர் பேராசிரியர்.

புறநானூறு :

புறநானூற்றில் உள்ள கடவுள் வாழ்த்தினைப் பாடியவரும் பெருந்தேவனாரே.

எல்லா உயிர்களுக்கும் ஏமமாவது நீர். அந்நீர் ஒருநாளும் வற்றுதலை அறியாத கமண்டலத்தையும் தாழ்ந்த சடையையும் உடைய அருந்தவத்தோன் சிவபிரான். அப் பிரானுக்குத் தலை மாலை கார்காலத்தில் மணத்தோடு மலரும் கொன்றைமலர். அழகிய மார்பு மாலையும் கொன்றை மலரே. அவன் வாகனம் தூய ஆனேறு. பெருமைமிக்க கொடியும் ஆனேற்றுக் கொடியே. அவன் கழுத்தை அழகு செய்வது நச்சுக்கறை. அதுதான் மறுவாயும் வானோரை உய்யக் கொண்டமையின் வேதம் சொல்லும், அந்தணரால் புகழப் படுவது. பெண் உருவை ஒரு பாகத்தில் அறியக் காட்டியும் தன்னுள் அடக்கி ஒளித்தும் அவன் விளங்குவான். பிறை அவன் நெற்றிக்கு அழகு செய்கிறது. அது பதினெண் தேவரால் போற்றப் பெறுகின்றது. இவனைப் பணிபவர் அறம் பொருள் இன்பம் வீடு எய்தி இன்புறுவர் என்பதை இவ் வாழ்த்தின் கருத்தாக உரைப்பர் உரை வகுத்தார்.

# 21. இலிங்கத் திருமேனிகள்

[பேராசிரியர் ஆ. சுப்பிரமணியன்]

சிவாலயங்களில் இறைவனை நாம் சிவலிங்க வடிவில் வழிபடுகிறோம். இவ் வடிவின் தத்துவத்தைத் திருமூலதேவர் திருமந்திரப் பாசுரங்களில் உணர்த்துவர். அதனைச் சுருக்கமாக எடுத்துக் காட்டுவதே இக் கட்டுரையின் நோக்கம்.

1. அருவுருவத் திருமேனி :

பரசிவன் ஓர் உருவமோ, பெயரோ இல்லாதவன். அவனை நாம் நினைக்கவும் வழிபடவும் தியானிக்கவும் அவன் பல்வேறு வடிவங்களைக் கொள்கிறான். அவன் கொள்ளும் வடிவங்கள் உருவம், அருவம், அருவுருவம் என மூவகைப்படும். உருவத் திருமேனிகள் நடராஜர், சந்திரசேகரர், சோமாஸ்கந்தர் போன்ற வடிவங்கள். அஞ்செழுத்து ஓங்காரம் போன்ற மந்திரங்கள் அவனது அருவத் திருமேனிகள். அருவமும் உருவமும் ஆகிய இரண்டுமாக இருப்பது அவனது சிவலிங்க வடிவாகிய அருவுருவத் திருமேனி. இது முகம் முதலிய உறுப்புகள் இன்மையால் அருவம் எனவும், ஒரு தோற்றம் உண்மையால் உருவம் எனவும் கருதப்படுவது. தீப்பிழம்பு அருவுருவமானது. முன்னொருகால் சிவபெருமான் மாலும் அயனும் அடிமுடி அறியாவண்ணம் நீண்டு நின்ற மாபெரும் தீப்பிழம்பை உணர்த்துவது சிவலிங்கம் எனப் புராணங்கள் கூறும். இம் மூவகைத் திருமேனிகளிலும் இறைவன் எழுந்தருளியிருந்து தன்னை வழிபடுவோர்க்கு அருள் பாலிக்கிறான். "உருவும் அருவும் உருவோடருவும், மருவு பரசிவன்" என்பது திருமூலதேவர் திருவாக்கு (திருமந்திரம் 1763)

## 2. அறுவகை இலிங்கத் திருமேனிகள்

இறைவனது திருவருள் ஆகிற சத்தியே அவனது திருமேனி. சிவனது திருவருள் தொழிற்படும் இடம் சிவலிங்கத் திருமேனி. மக்கள், தேவர், முனிவர் முதலியோர் அவரவர் அறிவுக்கும் பக்குவத்திற்கும் ஏற்ப இறைவனைச் சிவலிங்கத்தில் பாவித்து வழிபடுவர். இவ்வகையில் சிவலிங்கத் திருமேனிகள் அண்டலிங்கம், பிண்டலிங்கம், சதாசிவலிங்கம், ஆன்மலிங்கம், ஞானலிங்கம், சிவலிங்கம் என அறுவகையாகப் பேசப்படும்.

### 2.1. அண்டலிங்கம்

2.1.1. அண்டம் (Cosmos) என்பது உருவங்கொண்ட பொருள் உலகுகளையும் அருவமான சொல் உலகுகளையும் கொண்டது. இவ்விருவகை உலகுகளிலும் இறைவன் கலந்து நின்று அவற்றைத் தொழிற்படுத்துவதால் இவை அவனுக்குத் தூலத் திருமேனி ஆகின்றன. இவையே அவனது அண்டலிங்கத் திருமேனி. இதனைத் திருமூல தேவர்,

> ''இலிங்கம தாவ(து) எண்டிசை எல்லாம்
> இலிங்கம தாவ(து) எண்எண் கலையும்
> இலிங்கம தாக எடுத்த துலகே''

என (திருமந்திரம் 1712) எடுத்துக்காட்டுவர். இங்கு 'எண்டிசை எல்லாம்' என்றது எட்டுத் திக்குகளிலும் பரந்து நிற்கும் பொருள் உலகுகளை ; 'எண் எண் கலை' என்றது 16 கலைகளைக் (கூறுகளைக்) கொண்ட பிரசாதமந்திரமாகிய ஓங்காரத்தை ; சொல் உலகுகளை. அண்டலிங்கத் திருமேனி கொண்ட இறைவனை அப்பர் அடிகள் ''பற்றி உலகை விடாதாய் போற்றி'', ''நீள் அகலம் உடையாய் போற்றி'' போன்ற திருவாக்குகளால் போற்றுவர். இராசராச சோழன் தஞ்சையில் அமைத்துள்ள பெரியலிங்கம் அண்டலிங்கம்.

2.1.2. சொல் உலகை எழுத்து, பதம், மந்திரம் என மூன்றாகவும், பொருள் உலகைத் தத்துவம், புவனம், கலை என மூன்றாக

வும் வகைப்படுத்திச் சைவ ஆகமங்கள் கூறும். இவை ஆறும் உயிர்களது இன்ப துன்ப நுகர்ச்சிகளுக்கும் வீடுபேற்றிற்கும் வழியாக இருப்பதால் இவை அத்துவாக்கள் (படிவழிகள்) எனப்படும். இந்த ஆறுமே அண்டலிங்கத் திருமேனியாதலைத் திருமூலர் "ஆகம அத்துவா ஆறும் சிவமே" என (திருமந்திரம் 1714) உணர்த்துவர்.

2.1.3. 'லிங்' என்பது ஒடுக்கத்தையும், 'கம்' என்பது தோற்றத்தையும் உணர்த்தும் என்பர். சொல் உலகு பொருள் உலகுகளைத் தோற்றி ஒடுக்கித் தொழிற்படுத்தும் இறைவனுக்கு இவ்வுலகுகள் அண்டலிங்கத் திருமேனியாகின்றன.

2.1.4. சைவநூல்கள் 36 தத்துவங்களை (கருவிகளை)க் கொள்ளும். அவற்றுள் நாதமும் விந்துவும் மூலகாரணமான தத்துவங்கள். நாதம் சிவ தத்துவம் எனப்பட்டுச் செயலற்று நிற்பது. விந்து சத்தி தத்துவம் எனப்பட்டு தொழிற்பட்டு நிற்பது. அண்டலிங்கத் திருமேனியில் லிங்க பாகம் நாதம் எனவும், பீடம் விந்து எனவும் திருமூலர் உணர்த்துவர்.

> "விந்துவும் நாதமும் மேவும் இலிங்கமாம்
> விந்துவதே பீடம் நாதம் இலிங்கமாம்"

என்பது அவர் திருவாக்கு (திருமந்திரம் 1757). இந்த அண்டலிங்கத் திருமேனியை அப்பர் அடிகள் "கடிய உருமொடு மின்னே போற்றி" எனப் போற்றுவர். இங்கு 'உரும்' (இடி) என்றது ஒலிகளுக்கு எல்லாம் காரணமான நாதத்தை; 'மின்' என்றது ஒளிக்குக் காரணமான விந்துவை.

2.1.5. எல்லா அணுக்களும் அண்டங்களும் நாதவிந்து தத்துவங்களின் பல்வேறு வகைப்பட்ட காரியங்கள். இவற்றில் சிவலிங்க அமைப்பைத் தற்கால அறிவியல் மூலம் அணுவிலும் அண்டத்திலும் காண்கிறோம். அணுவின் நடுவில் உள்ள மையக் கொளுவை (Nucleus) சுற்றி எதிர்மின் அணுக்கள் (Electrons) வட்டமாகச் சுற்றி வருகின்றன. மையம் இலிங்கம் போன்று நடுவில் செயலற்று நிற்க, அதனை மிக விரைவாகச் சுற்றிவரும் எதிர்மின் அணுக்கள் பீடம் போன்ற காட்சி அளிக்கின்றன. அண்டத்தில்

நம் சூரியன் இலிங்கம் போன்று நடுவில் நிற்க, அதனைச் சுற்றி வரும் 9 கோள்கள் பீடம் போன்று நம் சூரிய மண்டலம் (Solar System) சிவலிங்க அமைப்பினை உடையதாகிறது. மேலும், நம் சூரியனைப் போன்ற 40 கோடி விண்மீன்கள் (Stars) நமது பால் வெளிச் சக்கரத்தின் (Milky-way Galaxy) மையத்தினைச் சுற்றி வருகின்றன. மையம் லிங்கமாகவும் விண்மீன்கள் எல்லாம் பீடமாக வும் தோற்றம் அளிக்க, வெளிச் சக்கரங்களும் சிவலிங்க அமைப்பில் இருப்பதை நாம் காண்கிறோம்.

## 2.2. பிண்டலிங்கத் திருமேனி

2.2.1. பிண்டம் என்ற சொல்லுக்கு உடல் என்ற பொருள் உண்டு. ஆறு அத்துவாக்களையும் தொழிற்படுத்தும் பல்வேறு பக்குவப்பட்ட உயிர்கள் (அதி தெய்வங்கள்) இறைவனது நுண் உடல்; பிண்டலிங்கத் திருமேனி. அக்னி, சூரியன், சந்திரன், இந்திரன், அயன், மால், உருத்திரன் ஆகிய தேவர்கள் எல்லோரும் பிண்டலிங்கத்தில் இடம் பெறுவர்,

''ஒண்சுடரோன் அயன் மால் பிரசாபதி
ஒண்சுட ரான இரவியோ டிந்திரன்
கண்சுட ராகிக் கலந்தெங்கும் தேவர்கள்
தண்சுடராய் எங்கும் தற்பரம் ஆமே''

என்று திருமந்திரம் (1716) இதனை உணர்த்தும். இப் பிண்ட லிங்கத் திருமேனியைத் திருநாவுக்கரசு சுவாமிகள் ''சில்லுயிராய்ச் சென்று திரண்டாய் போற்றி'' ''பல்லுயிராய்ப் பார்தோறும் நின்றாய் போற்றி'' போன்ற திருவாக்குகளாற் போற்றுவர்.

2.2.2. அதி தெய்வங்களிற் சிறந்து விளங்குபவர் அயன், மால், உருத்திரன், மகேசன், சிதாசிவன் என்ற பஞ்ச காரணே சுவரர்கள். இவர்கள் முறையே படைத்தல், காத்தல், ஒடுக்கல், மறைத்தல், அருளல் ஆகிய ஐந்தொழில்களையும் செய்பவர். இவ் வைவரும் சிறப்பாகப் பிண்ட லிங்கத்தில் வைத்து வணங்கப்படுவர். இதனைத் திருமூலர்,

"கோயில் கொண்டன்றே குடிகொண்ட ஐவரும்
வாயில்கொண் டாங்கே வழிநின் றருளுவர்".

என்ற திருவாக்குகளால் (திருமந்திரம் 1720) உணர்த்தியருள்வர். ஈண்டு 'வாயில் கொண்டு' என்றது படிவழிகளாகிய ஆறு அத்துவாக்களையும் காரணேசுவரர்கள் தமது ஆட்சிக்குள் கொள்வதனை; 'வழி நிற்றல்' இறைவனது ஆணையாகிற சத்தியின் வழி நிற்றல். இந்த ஐவரையும் கொண்ட பிண்டலிங்கத் திருமேனியைத் திருநாவுக்கரசு சுவாமிகள்,

"ஆதிபுராணனாய் நின்றாய் போற்றி"
(படைத்தல்-அயன்)

"அமையாவரு நஞ்சம் ஆர்த்தாய் போற்றி"
(காத்தல்-மால்)

"ஊழி ஏழான ஒருவா போற்றி" (ஒடுக்கம்-உருத்திரன்)

"தேவர் அறியாத தேவே போற்றி" (மறைத்தல்-மகேசன்)

"அல்லலறுத் தடியேனை ஆண்டாய் போற்றி"
(அருளல்-சதாசிவன்)

போன்ற மந்திரங்களால் போற்றித் துதிப்பர்.

## 2.3. சதாசிவலிங்கம்

2.3.1. அயன் முதலிய ஐவரையும் தொழிற்படுத்தும் சத்திகள் முறையே சத்தியோசாதம், வாமதேவம், அகோரம், தற்புருடம், ஈசானம் என்ற ஐந்துமாம். இச் சிவசத்திகள் அயன் முதலிய காரணேசுவரர்களைத் தமது ஆணையின்படி தொழிற்படுத்துவன. இவை சிவசத்தியினது பலவேறு கூறுகள் அல்லது நிலைகளாய் நின்று சிவனது சதாசிவத்திருமேனி ஆகின்றன.

சதாசிவர் உருவத்திலும் வைத்து வணங்கப்படுவர். அப்போது ஈசானம் அவரது உச்சி; தற்புருடம் அவரது ஐந்து திருமுகங்கள்; அகோரம் இருதயம்; வாமம் குய்யம்: சத்தியோசாதம் திருவடிகள்.

"நாணுநல் ஈசானம் நடுஉச்சி தானாகும்;
தாணுவன் நன்முகம் தற்புருடம் ஆகும்;
காணும் அகோரம் இருதயம்; குய்யமா
மாணுற வாமம் ஆம்; சத்திநற் பாதமே"

என்பது திருமந்திரம் (1742). இந்த சதாசிவ மூர்த்தியை ஆளுடைய அரசுகள்,

"ஆறேறு சென்னி உடையாய் போற்றி"
(உச்சி-ஈசானம்)

"அடங்கார் புரம்எரிய நக்காய் போற்றி"
(திருமுகம்-தற்புருடம்)

"சாம்பர் அகலத் தணிந்தாய் போற்றி"
(மார்பு-இருதயம்-அகோரம்)

"கொல்புலித் தோல்ஆடைக் குழகா போற்றி"
(புலி அதளால் மறைக்கப்பட்ட சூய்யம்-வாமதேவம்)

"செங்கமலத் திருப்பாதம் போற்றி போற்றி"
(பாதம்-சத்தியோசாதம்)

என்பன போன்ற திருவாக்குகளால் துதிப்பர்.

2.3.2 மேலும் சிவசத்தியினது அயன், மால், உருத்திரன், மகேசன், சதாசிவன், விந்து, நாதம், சத்தி, சிவம் என்ற 9 நிலைகளே சதாசிவத் திருமேனி என்பதும் உண்டு.

"வேதா நெடுமால் உருத்திரன் மேல்ஈசன்
மீதான ஐம்முகன் விந்துவும் நாதமும்
ஆதார சத்தியும் அந்தச் சிவனொடும்
சாதா ரணமாய் சதாசிவம் தானே'

என்ற திருமந்திரம் (1731) இதனை வலியுறுத்தும்.

## 2.4. ஆன்மலிங்கம்

2.4.1. கட்டு நீங்கிய முத்தான்மாக்களும் இறைவனது நுண்ணுடம்பாம். இந்த நுண்ணுடம்பே ஆன்மலிங்கத் திருமேனி. அகவழிபாட்டில் சுத்த மாயையாகிற இதய தாமரையின் மேல் இறைவனை ஆன்மலிங்கத்தில் எழுந்தருளச் செய்து, 16 உபசாரங் களையும் மனத்தினால் பாவித்து வழிபடுவர். இந்த ஆன்மலிங்கத் திருமேனியைத் திருமூல தேவர்,

> "என்றும்நின் றேத்துவன் எம்பெருமான் தன்னை
> ஒன் றிஎன் உள்ளத்தின் உள்இருந் தானே"

என்றுணர்த்துவர் (திருமந்திரம் 1762). இங்கு உள்ளம் என்றது உயிரினை. ஆன்மலிங்கத் திருமேனி கொண்ட இறைவனை ஆளுடைய அரசுகள்,

> "மருவி என் சிந்தை புகுந்தாய் போற்றி"
>
> "நீங்காதென் உள்ளத் திருந்தாய் போற்றி"
>
> "உருவாகி என்னைக் கொண்டாய் போற்றி"

போன்ற மந்திரங்களால் துதிப்பர்.

2.4.2. ஆன்மலிங்கத்தின் இலிங்க பாகத்தில் சிவபெரு மானையும் பீடத்தில் சத்தியையும் வழிபடுவர். சுத்தான்மா இறை வனுடனும், சத்தியுடனும், ஒன்றாகக் கலந்து நிற்கும் நிலையை உணர்த்துவதே ஆன்மலிங்கம். இந்த நிலையை உணர்த்தும் வடிவம் சோமாஸ்கந்தர். (உமையுடனும் கந்தனுடனும் கூடிய மூர்த்தி) இங்குக் கந்தர் வடிவம் முத்தான்மாவை உணர்த்தி நிற்பது. சோமாஸ் கந்தரைத் திருநாவுக்கரசு சுவாமிகள் "செம்பொனே மரகதமே மணியே போற்றி" எனத் துதிப்பர்.

## 2.5. ஞானலிங்கம்

2.5.1. இறைவனது மிகநுண்ணிய உடல் எனக் கருதப்படும் சிவசத்தியே ஞானலிங்கம். லிங்கம் என்ற சொல்லுக்குப் பிரகாசம்

என்ற பொருளும் உண்டு. சிவசக்தி எல்லாப் பொருள்களையும் பிரகாசிக்கச் செய்வது ; பல்வேறு சத்திகளாய் நின்று எல்லாவற்றை யும் அறிவித்து நிற்பது. பக்குவ உயிர்களுக்கு சிவத்தையே அறி வித்துக் காணச் செய்வது. இச் சிவசத்தியே ஞானலிங்கத் திரு மேனி.

> ''எந்தை பராபரன் என் அம்மை கூட்டமும்
> முந்தை உரைத்தது முறைசொல்லின் ஞானமாம்''

என்று (திருமந்திரம் 1770) திருமூல தேவர் நமக்கு இதனை அறிவிப்பர். இதில் 'ஞானமாம்' என்றது ஞானலிங்கத் திரு மேனியை. இத் திருமேனி கொண்ட இறைவனை திருநாவுக்கரசு சுவாமிகள் ''சுடரில் திகழ்கின்ற சோதி போற்றி'' என வழிபடுவர்.

2.5.2. இறைவன் சிவமும் சத்தியுமாக நின்று முத்தான் மாக்களுக்கு பேரானந்தானுபவம் அருளும் நிலையை உணர்த்துவது ஞானலிங்கம். இதனை உருவத்தில் உமையொருபாக வடிவில் வழிபடுகிறோம். ஞானலிங்கத்தைத் திருமூல தேவர் ''பாதியுள் மன்னும் பராசத்தியமே'' (திருமந்திரம் 1767) என்பர். திருநாவுக் கரசு சுவாமிகள் ''உமைபாகம் ஆகத் தணைத்தாய் போற்றி'' எனத் துதிப்பர்.

## 2;6. சிவலிங்கம்

2.6.1. மேலே கூறப்பட்ட ஐந்து திருமேனிகளுக்கப்பாற்பட்ட சிவனது சிறப்பு நிலையில் சிவ ஞானிகள் வழிபடுவதே சிவலிங்கம். இது முத்தான்மாக்களைப் பேரானந்தத்தில் அழுத்துவது. இந்தச் சிவலிங்கத் திருமேனியை நம் சமயகுரவர் நால்வர், திருமூலர் முதலியோர் கண்டு ஆனந்த பரவசமுற்றனர். திருமூலர் நாம் பெற்ற பேரானந்தானுபவத்தை ''எனக்காரமு தீந்த, திறமேதென்று திகைத்திருந் தேனே'' (திருமந்திரம் 1820) என்ற திருவாக்கால் நமக்குக் காட்டியருள்வர்.

இந்தச் சிவலிங்கத் திருமேனியை உருவத்தில் ஆனந்தத்தாண் டவ மூர்த்தியாக நாம் வழிபடுகிறோம். இதனைத் திருமூல தேவர்,

"ஞானம் கடந்து நடம்செய்யும் நம்பிக்(கு) அங்கு
ஆனந்தம் கூத்து ஆடரங் கானதே"

என உணர்த்துவர். ஞானலிங்கத்திருமேனி வழிபாட்டுக்கும் மேம்பட்ட நிலையில் சிவஞானிகள் சிவலிங்கத்தில் வழிபட்டு ஆனந்தத்திலழுந்துவதை இதில் திருமூலர் உணர்த்தியருள்வர். சிவலிங்கத் திருமேனியைக் கண்டு களித்த ஆளுடைய அரசுகள் "அடியார்கட்காரமுத மானாய் போற்றி" எனத் துதிப்பர்.

3. இவ்வாறு பலவேறு அண்டங்கள், பலவேறு சிறு தெய்வங்கள், ஐந்தொழில்களைச் செய்யும் சத்திகள், முத்தான்மாக்கள், பேரறிவு, பேரானந்தம் ஆகியவற்றைத் தமது தூல, சூக்கும, அதி சூக்குமத் திருமேனிகளாகக் கொண்ட சிவத்தினது பலவேறு சத்தி நிலைகளை உணர்த்துவதே சிவலிங்கம் எனவும், அது வழிபடுவாரது பக்குவத்திற்கு ஏற்ப வெளிப்பட்டு நின்று அருள் பாலிப்பது எனவும் திருமூல தேவர் நமக்கு உணர்த்தியருள்வர்.

# 22. இவர்தாம் அவரோ

[பேராசிரியர் கே எம். வேங்கடராமையா]

**கங்கைகொண்ட சோழேச்சுரம் :**

தஞ்சையில் பெரிய கோயிலை எடுப்பித்துப் புகழ் பெற்றவன் முதலாம் இராசராசசோழன். அவன் மகன் முதலாம் இராசேந்திரன், கங்கை வரை படையெடுத்துச் சென்று வாகை சூடிக் கங்கைகொண்ட சோழன் என்று சிறப்பு எய்தியவன். அந் நினைவாக அமைக்கப் பெற்றதே கங்கைகொண்ட சோழபுரமும், அதன்கண் உள்ள கங்கை கொண்ட சோழேச்சரம் எனப்பெற்ற சிவன் கோயிலும் ஆகும். இத் திருக்கோயிலுக்குக் கருவூர்த் தேவர் அருளிய திருவிசைப்பாவும் ஒன்று உண்டு.

**சண்டேசர்க்கு அருள் செய்த பெருமான் :**

இத் திருக்கோயில் சில சிற்பச் சிறப்புக்களையுடையது. அவற்றுள் ஒன்று 'சண்டேசானுக்கிரக மூர்த்தி' என்பது. இக் கோயிலில் கருவறைக்கு முன் உள்ள மண்டபத்திற்குச் செல்லும் வடக்கு வாயில் அடைவதற்குப் பல படிக்கட்டுகளை ஏறுதல் வேண்டும். அப் படிக்கட்டுகளில் ஏறும்பொழுது வலக்கைப்பக்க மாகக் கண்ணையும் கருத்தையும் கவரத்தக்க ஒரு சிற்பம் காணப் பெறுகிறது. சிவபெருமான் உமையம்மையாருடன் பீடத்தில் வீற் றிருக்கிறார். அவர்க்கு முன் தலையில் கிரீடமும், கழுத்திலும், மார்பிலும் பல அணிகலன்களும், தோள்களில் அணிகலன்களும் பொருந்திய ஒருவர் கூப்பிய கையினராய் மண்டியிட்ட நிலையில் இருக்கிறார். சிவபெருமான் அவருடைய முடியில் இண்டை மாலையைச் சூட்டுகிறார். சிற்பம், சண்டேசருக்குச் சிவபெருமான் இண்டை மாலை சூட்டி அருள் செய்தலைக் காட்டுகிற "சண்டேசா

னுக்கிரக மூர்த்தி'' என்பதாகும் என்பது இதுகாறும் யாவரும் ஒப்பக் கூறிவந்த செய்தியாகும். இச் சிற்பத்தைக் கண்டதும் பின்வரும் பெரிய புராணச்செய்யுள் நினைவுக்கு வரும்:

''அண்டர் பிரானுந் தொண்டர்தமக்
கதிப னாக்கி 'அனைத்துநாம்
உண்ட கலமும் உடுப்பனவும்
சூடு வனவும் உனக்காகச்
சண்டீ சனுமாம் பதந்தந்தோம்'
என்றங் கவர்பொற் றடமுடிக்குத்
துண்ட மதிசேர் சடைக்கொன்றை
மாலை வாங்கிச் சூட்டினார்.''

### இவர் சண்டேசரா?

சண்டேசப் பதம் பெற்ற வரலாறு சேய்ஞலூர் திருவாப்பாடி என்ற தலங்களோடு தொடர்புடையது. திருச்சேய்ஞலூர் இந்நாளில் சேங்கனூர் என்று வழங்குகிறது; திருப்பனந்தாளுக்கு அண்மையிலுள்ளது. அங்கு இருந்த விசாரசருமன் என்பார் சண்டேசப்பதம் பெற்றார் என்று பெரியபுராணம் கூறும். சண்டேசப் பதம் பெற்றவர் ஒரு மாணி; வேதம் ஓதும் பருவத்தவர்; தந்தைக்கு அடங்கிய தனயர்; திருமணம் ஆகாதவர்; ஏழையந்தணர்; செல்வ வளம் பொருந்தியவர் அல்லர். அவர் தாம் செய்த சிவத் தொண்டினால்—வன் தொண்டினால்—இப் பதம் பெற்றார். சோழர் காலங்களில் சண்டேசர் பெயராலேயே கோயில் காரியங்கள் எல்லாம் நடந்தேறின. இவருக்கு எல்லாக் கோயில்களிலும் கருவறைக்குப் புறம்பே ஒரு சிறு கோயில் இருக்கும். அங்ஙனமே கங்கைகொண்ட சோழபுரத்திலும் உண்டு. ஆனால் இச் சிற்பத்தை நோக்கினால்—இண்டைமாலை சூட்டப்பெறும் உருவம்—சண்டேசரைக் குறிப்பதாகக் கொள்ள இடம் தரவில்லை.

### ஏன்?

சண்டேசப் பதம் பெற்றவர் ஓர் ஏழைப்பார்ப்பனர்; மாணி; சிறுவர்; ஒற்றை ஆடை; பூணு நூல் பூண்டவர் என்பதாகக்

கற்பனையில் அமையும். இச் சிற்பத்தில் கண்ட உருவம் இந்த எண்ணத்தை ஊட்டவில்லை.

**அந்த உருவத்தின் நிலை :**

அந்த உருவம் வயது முதிர்ந்த ஒருவருடைய உருவம் ; தலையில் கிரீடம், காதிலும் கழுத்திலும், மார்பிலும், தோளிலும் அணிகலன்கள், இடுப்பில் விலை உயர்ந்த ஆடை; கம்பீரமான தோற்றம்-இத்தகைய உருவத்தைக் காணின் இவ்வுருவம் மாடு மேய்த்துக்கொண்டிருந்து சிவபூசை செய்துகொண்டிருந்த தன் தந்தையின் தாளைச் சேதித்த மாணியின் உருவாகக் கொள்ள இயல வில்லை.

**இஃது அரச உருவம் :**

அங்ஙனம் எனின் இவர் யார் என்ற வினா எழும். இவ் வுருவத்தைக் கண்டதும் இ∴து ஓர் அரசனுடைய உருவம் என்ற எண்ணம் வராமல் இருக்க முடியாது. உயரமான உருவம், அரசனுக்குரிய கிரீடம், பிற அணிகலன்கள்—ஆகியவற்றைக் காணின் இவ்வுருவம் மாணியின் உருவம் அன்று ; ஓர் அரசனது உருவம் என்று கூர்ந்து நோக்குவார்க்குத் தோன்றக்கூடும். அங்ஙனமாயின்,

**இவர் யார் ?**

இவர் முதலாம் இராசேந்திரரே ஆவர் என்று கொள்ளலாம். முதலாம் இராசேந்திரன் பல லட்சம் பொன் செலவு செய்து இக் கோயிலை எடுப்பித்தான். "ஏற்ற நூல் எண்பது லக்ஷம்" என்ற ஒரு வரிக் கல்வெட்டினால் இக் கோயில் எடுப்பிக்க ஆன செலவு கணக்கில் அடங்காது என்பது புலப்படும், பெரும் பொருட் செலவில் தன் வீரச் சின்னமாக அமைத்த கோயிலில் இராசேந்திரன் உருவத்தை அமைக்க வேண்டும் என்று கோயில் வேலை மேற் பார்வை செய்யும் 'பெருந்தச்சன்' நினைத்திருக்கலாம் ; அரசனிடம் கூறியும் இருக்கலாம். அரசன் மறுத்தனன் போலும்! ஒரு பெருங்கோயில் எடுப்பித்த அரசனுக்கு இறைவனது அருள் உண்டு

என்பது சொல்லாமலே போதரும். ஆகவே இறைவன் சண்டே சுவரருக்கு அருள் செய்ததுபோலக் கங்கை கொண்ட சோழேச்சுரர் இராசேந்திரனுக்கு அருள் செய்வர் என்பது உறுதி. ஆகவே சண்டேசானுக்கிரக மூர்த்தியை வடிப்பவர் போலப் பெருந்தச்சனார், மாணி இருக்கும் இடத்தில் அரச உருவை அமைத்து இறைவன் இண்டை மாலை சூட்டுவது போன்று சிற்பத்தை வடித்தார். இதனான் அரசனுருவை அக் கோயிலில் அமைத்தலாகிய எண்ணமும் நிறைவெய்தியது ; தன் உருவை வெளிப்பட அமைக் காமையும் நிறைவெய்தியது. (சேய்ஞலூருக்கும் கங்கைகொண்ட சோழபுரத்துக்கும் இடையில் உள்ள தொலைவு 15 கி. மீ. ஆகும் என்பது அறியத்தக்கது.)

இவர் தாம் அவரே :

எனவே கங்கைகொண்ட சோழபுரத்தில் இந்நாளில் சண்டே சானுக்கிரக மூர்த்தி எனப்படும் சிற்பத்தில் காணும் உருவம் சண்டேசப்பதம் பெற்ற மாணி அல்லர் என்றும், இவர்தாம் அப் பெருந்திருக்கோயிலை எடுப்பித்த கங்கைகொண்ட சோழனாகிய முதலாம் இராசேந்திரனாக இருத்தல் வேண்டும் என்றும் கொள்ள லாம்.

திருநாகேச்சுரத்தில் :

திருத்தொண்டர் புராணம் ஆகிய பெரிய புராணத்தை யாத்தவர் சேக்கிழார் பெருமான் என்பது யாவரும் அறிந்ததே. அவர் மனத்துக்கு மிகவும் உகந்த தலம் திருநாகேச்சரம் என்பது. அத் தலம் கும்பகோணத்துக்கு அருகில் உள்ளது. அக் கோயில் கிழக்கு நோக்கியது அக்கோயில் உள்ளே சென்றதும் தெற்குப் புறத்தில் உள்ள மண்டபத்தில் அஃதாவது நடராசர் சன்னதிக்கு நேர் எதிரில் மூன்று உருவங்கள் உள்ளன.

அம் மூவர் யார்?

அம் மூன்று உருவங்களில் இரண்டு பதுமாசனத்தில் வீற்றிருக்கும் நிலையில் உள்ளன. பிறிதொன்று நின்ற நிலையில்

ஒரு பெண். மூவரும் கூப்பிய கையினராய் உள்ளனர். மூவருள் முதலில் நிற்பவர் பெண்; இவரைச் சேக்கிழாரின் தாயார் என்கின்றனர். அடுத்து வீற்றிருக்கும் நிலையில் உள்ளவர் வயது முதிர்ந்தவர் உருவம்-சேக்கிழார் என்று கூறுவர், அடுத்து வீற்றிருக்கும் உருவம்-சற்று இளமைத் தோற்றம்-அவர் தம்பி பாலறாவாயர் என்று சொல்வர்.

**பெண் உருவம் :**

நின்ற நிலை-பெண் உருவம்; சுமங்கலி; கழுத்திலும் காதிலும் கைகளிலும் விலையுயர்ந்த அணிகலன்கள் காணப்பெறுகின்றன. இவ்வுருவைச் சேக்கிழாரின் தாய் என்று கூறுகின்றனர். இவ்வாறு கொள்ளத் தடையொன்றும் இல்லை.

**வீற்றிருக்கும் உருவங்கள் :**

வீற்றிருக்கும் உருவங்களில் ஒன்று சேக்கிழார்; மற்றொருவர் பாலறாவாயர் என்கின்றனர். வீற்றிருப்பவர்-நடுநாயகமாக வீற்றிருப்பவர்-சேக்கிழார் எனின் அது மரபுக்கு ஒவ்வாததெனத் தோன்றுகிறது. தாயைக் கடவுளாகக் கொண்டு வணங்குவது இத் தமிழகப் பண்பு; சமமாகக் கருதலும் உயர்வாகவே கருதுவதும் இந் நாட்டுப்பண்பு. சரிசமமாக வைத்துப் போற்றினும்-கருதினும் இழுக்கு ஆகாது. ஆனால் தான் வீற்றிருந்து தாயின் உருவை நின்ற கோலத்தில் அமைத்தார் என்பது தமிழ்நாட்டுப் பண்புக்கு ஒவ்வாததாகும். அன்றியும் தந்தையின் உருவை அமைக்காமல் தாயின் உருமட்டும் அமைத்தது ஏன் என்ற வினாவும் எழுகிறது. ''தந்தை தாய்ப் பேண்'' என்பதுதான் முறையேயன்றித் தந்தையை விட்டுத் தாயை மாத்திரம் சிறப்பித்தார் எனலும் பொருந்தாது. இச் சிற்பங்கள் சேக்கிழார் காலத்தில் அமைக்கப்பெறாமல் பிற்காலத்தில் அவர் நினைவாக அமைக்கப்பெற்றன என்று கொள்ளலாம் எனினும் இத் தடைக்கு விடை இல்லை. எனவே நடுநாயகமாக உள்ளதும் வீற்றிருக்கும் நிலையிலுள்ளதும் ஆன திருவுருவம் சேக்கிழாருடையதாக இருத்தல் பொருந்தாது. அங்ஙனம் ஆயின்,

**அவர்தாம் யார் ?**

நின்ற நிலையில் உள்ளவர் சேக்கிழாரின் தாய். அடுத்து வீற்றிருந்த நிலையில் இருப்பவர் சேக்கிழாரின் தந்தையாக இருக்க வேண்டும். அடுத்து அமர்ந்த நிலையில் இளமையோடு சிறிது சிறிய உருவில் இருப்பவர் சேக்கிழார் ஆதல் கூடும். இங்ஙனம் கொள்வதாயின் தாய் நிற்கத் தந்தை நடுவில் வீற்றிருக்கத் தனயன் அடுத்து அமர்ந்த நிலையில் இருப்பது பொருத்தமாக இருக்கும் ; மரபுக்கு ஏற்ப அமையும் ; தவறுபடாது.

ஆகவே அமர்ந்த நிலையில் இருப்பவர்களில் மாதராருக்கு அடுத்து வீற்றிருப்பவர் சேக்கிழாரின் தந்தையார் என்றும், அடுத்து அமர்ந்திருப்பவர் சேக்கிழார் என்றும் கொள்ளலாம்.

# 23. மதுரை நாயக்கர்களும் கோயில் திருப்பணிகளும்

[பைந்தமிழ்ப் பாவலர் அ. கி. பரந்தாமனார்]

முன்னுரை :

மதுரை நாயக்கர்கள் என்பவர்கள், மதுரைப் பெரு நாட்டைக் கி. பி. 16ஆம் நூற்றாண்டின் முற்பகுதியிலிருந்து கி. பி. 18ஆம் நூற்றாண்டின் முற்பகுதி வரைக்கும் 207 ஆண்டுகள் ஆட்சி செய்தவர்கள். அப்போது மதுரை நாடு என்பது இப்போதுள்ள மதுரை, இராமநாதபுரம், திருநெல்வேலி, கன்னியாகுமரி சேலம், கோயமுத்தூர் மாவட்டங்களும் திருச்சிராப்பள்ளியும் அடங்கிய பெரு நாடாய் இருந்தது. இப் பெருநாட்டை விசயநகரப் பேரரசின் சார்பில் ஆளுநர்களாய் இருந்து ஆட்சி புரிந்தவர்கள் ஆறு நாயக்கர்கள். அவர்கள் விசுவநாத நாயக்கரும் (1529—1564), முதலாம் கிருஷ்ணப்ப நாயக்கரும் (1564—72), வீரப்ப நாயக்கரும் (1572—1595), இரண்டாம் கிருஷ்ணப்ப நாயக்கரும் (1595—1601), முத்துக் கிருஷ்ணப்ப நாயக்கரும் (1601—1609), முதலாம் முத்துவீரப்ப நாயக்கரும் (1609—1623) ஆவார்கள். ஏழாவது ஆட்சியாளராய் வந்த திருமலை நாயக்கர் (1623—59) அப்போது தலைக்கோட்டைப் போரில் தோற்றுச் சிதைந்து கிடந்த விசயநகரப் பொம்மைப் பேரரசராய் இருந்த மூன்றாம் சீரங்கனோடு போராடி முழுவுரிமை பெற்று அரசரானவர். இவரே விசுவநாதரை அடுத்து மிகுந்த புகழ் பெற்று விளங்கியவர். இவருக்குப் பின்வந்த இரண்டாம் முத்து வீரப்பர் (1659) முழுவுரிமை அரசராய் நான்கு திங்களே ஆண்டு மாண்டார். இவருக்குப் பின்வந்த சொக்கநாத நாயக்கர் (1659—82), மூன்றாம் முத்துவீரப்ப நாயக்கர் (1682—

89), மங்கம்மாள் (1689—1706), விஜயரங்க சொக்கநாத நாயக்கர் (1706—32), மீனாட்சி அரசி (1732—36) ஆகிய வர்கள் முழுவுரிமை அரசர்களாய் மாமதுரை நன்னாட்டைத் திருச்சி யிலிருந்து ஆண்டவர்கள். விசுவநாதர் மதுரை நகரைத் தலை நகராய்க் கொண்டு நாட்டை ஆண்டார். திருமலை நாயக்கரும் மதுரையைக் கோநகராய்க்கொண்டு மதுரைப் பெருநாட்டைச் சீரும் சிறப்புமாக ஆட்சி செய்தார். சொக்கநாதரும் முத்துவீரப்பரும், மங்கம்மாளும், விசயரங்க சொக்கநாதரும், மீனாட்சியரசியும் திருச்சி ராப்பள்ளியைத் தலைநகராய்க் கொண்டு அங்கேயே இருந்து மதுரை நாட்டை ஆண்டார்கள். இவர்கள் மதுரை நகரிலிருந்து ஆட்சி செய்ததாக மக்கள் தவறாகக் கருதுகிறார்கள். சந்தா சாகிப்பின் சதிக்கு இரையாகி நஞ்சுண்டு மாண்ட மீனாட்சி அரசியோடு 1736 இல் மதுரை நாயக்கர் பரம்பரையே முடிவடைந்துவிட்டது. பதின் மூன்று மதுரை நாயக்கர்கள் மதுரைப் பெருநாட்டை ஆண்டார்கள். இவர்கள் விசயநகரத்தைச் சேர்ந்த வடுகர்கள். சென்னை, திண்டி வனம், முதலிய இடங்களில் இருக்கும் நாயக்கர்கள் அல்லது நாய்க்கர்கள் தமிழ் பேசும் படையாட்சி இனத்தவர்கள். இவர்களை வன்னியர் என்றும் கூறுவர்.

**மதுரையில் முஸ்லீம் ஆட்சி :**

விசயநகரப் பேரரசரான புக்கரின் மகனான இரண்டாம் கம்பணரே முதல்முதல் மீனாட்சியம்மன் திருக்கோயிலுக்குத் திருப்பணி செய்து மதுரை நாயக்கர்களுக்கு வழிகாட்டி வைத்தார். 1311 இல் மாலிக்கபூர் தமிழகத்தின்மீது படையெடுத்துவந்து பெரும் பொருளைக் கொள்ளையடித்துச் சென்றான், 1317 இல் தஸ்ருகான் என்பவன் படையெடுத்துவந்து தில்லிக்குத் திரும்பினான். துக்ளக் என்ற பெயரோடு தில்லி சுல்தானான உலுகான் என்பவன் 1324 இல் தமிழகத்தின்மீது ஒரு பெரும்படையை அனுப்பினான். இம் மூன்று படையெடுப்புகளுக்குப் பின்பு தமிழகம் தில்லி சுல்தான் பேரரசுக்குள் அடங்கிவிட்டது. துக்ளக், ஜலால்-உத்தீன் அசன்ஷா என்பவனை மதுரை நாட்டுக்கு ஆளுநராய் அமர்த்தினான். தென்னகத்தில் அப்போது தில்லிக்கு எதிராக ஏற்பட்ட விடுதலை இயக்கத்தினால் ஜலால்-உத்தீன் அசன்ஷா மதுரை நாட்டின் முழு

வுரிமைச் சுல்தானாய் விட்டான். இவனுக்குப் பின் மதுரை நாட்டில் அல்லாவுதீன் உடௌஜி, குத்பூதீன், கியாஸ் உத்தீன் தம்காணி, நாகிர்-உத்தீன், அமல்ஷா, ஹசன்கங்கு, பக்ருதீன் முபாரக்ஷா, அல்லாவுதீன் சிக்கந்தர் ஆகியவர்கள் ஆட்சி செய்தார்கள். இச் சுல்தான் ஆட்சி 48 ஆண்டுகள் நடைபெற்றது. இக் காலத்தில் மீனாட்சியம்மன் கோயில் பாழ்பட்டது. புக்கரால் அனுப்பப்பட்ட இரண்டாம் கம்பணர் 1371இல் இவ்வாட்சியை ஒழித்துக்கட்டித் தமிழகத்தை விஜயநகரப் பேரரசில் இணைத்துவிட்டார். இவரே மகா மண்டலேசுவரராய் (Viceroy) இருந்து தமிழகத்தைக் கண் காணித்து வந்து 1374இல் காலமானார்.

### கம்பணர் கோயில் திருப்பணி

இக் கம்பணர், சுல்தான் ஆட்சியில் பாழ்பட்ட மதுரை நகர மீனாட்சியம்மன் கோயில் மதிற்சுவரைக் கட்டி முடித்து முஸ்லீம் படையெடுப்புக் காலத்தில் நாஞ்சில் நாட்டுக்குக் கொண்டு போயிருந்த திருவுருவங்களைக் கொண்டுவரச்செய்து, அவற்றை இக் கோயிலில் திரும்பவும் வைத்து அவற்றிற்குத் திருவாபரணங்கள் செய்தளித்து நாள்தோறும் வழிபாடு செய்வதற்காகத் திருவிளையாடற் கிராமத்தைவிட்டுக் கொடுத்தார். இச் செய்தியைத் தாண்டவ மூர்த்திக் கவிராயர் இயற்றிய மதுரைத் திருப்பணிமாலைச் செய்யுள் குறிப்பிடுகிறது. அச் செய்யுள் வருமாறு:

''பின்னொரு காலம் திருக்காப்பு
நீக்கித்தன் பேரன்பினால்
முன்னுள ஊர்களும் பின்பதி
தாய்விட்டு முக்கணர்க்கு
மன்னிய பூசை திருப்பணி
கூடல் வளரச் செய்தான்
கன்னியும் பொன்னியும் கங்கையும்
கொண்டருள் கம்பணனே.''

இத் திருப்பணி மாலை நூல், மதுரைத் தமிழ்ச் சங்கத்தின் சார்பில் பல ஆண்டுகளுக்குமுன் பாண்டித்துரைத் தேவரால் வெளி யிடப்பட்டது.

**ஆயிரக்கால் மண்டபம் :**

கி. பி. 1374க்கு முன் இரண்டாம் கம்பணரால் திருப்பணி செய்யப்பட்ட மதுரை மீனாட்சியம்மன் திருக்கோயில், 1529இல் விசுவநாத நாயக்கர், மதுரை நகரிலிருந்துகொண்டு மதுரைப் பெரு நாட்டை ஆட்சி செய்தபோது, பழுதுபட்டுக் கிடந்ததைக் கண்டு, தமது கைப்பொருளைச் செலவு செய்து அக் கோயிலைப் பழுது பார்த்தார் ; பல நகைகளையும் செய்துகொடுத்துச் சில ஊர்களை யும் அளித்தார். இவ் விசுவநாதருக்கு மதியமைச்சராயும் திறமை மிக்க படைத் தலைவராயும் இருந்த தளவாய் அரியநாத முதலியார், மீனாட்சியம்மன் கோயிலில் ஆயிரக்கால் மண்டபத்தைக் கட்டினார். இவ்வாயிரக்கால் மண்டபந்தான் இன்று கலைக்காட்சிக் கூடமாக இருந்து வருகிறது. அமைச்சர் பதவியும் படைத்தலைவர் பதவியும் சேர்ந்ததே தளவாய் பதவி.

**முதலாம் கிருஷ்ணப்பர் :**

இவர் பாளையங்கோட்டைக்கு அருகில் தம் பெயரால் கிருஷ்ணாபுரம் என்னும் நகரத்தை அமைத்து, அங்கே திருவேங்கட நாதர் கோயிலைக் கட்டி, அதற்கு இறையிலியாகப் பல சிற்றூர் களை அளித்தார் ; அக் கோயிலுக்குத் தேர் ஒன்றும் செய்து கொடுத் தார் ; சிவன் கோயிலையும் அங்குக் கட்டினார் ; தெப்பக் குளத்தை யும் வெட்டுவித்தார். இவர் மீனாட்சியம்மன் கோயிலிலும் பல திருப்பணிகள் செய்தார் ; வெள்ளியம்பலமும், வடக்குக் கோபுரமும், திருமடைப்பள்ளியும், மூர்த்தியம்மன் மண்டபமும், இரண்டாம் பிரகாரத் திருச்சுற்று மண்டபமும், கொடிக் கம்பத்துக்கு முன் இருக் கும் வீரப்பர் மண்டபமும் கட்டினார் ; மேலும் மீனாட்சியம்மன் ஆலய மண்டபத்தின் தூண்களுக்குப் பொற்றகடு போட்டார் ; மீனாட்சி யம்மனுக்குப் பொற்கவசம் செய்தளித்தார். திருப்பணிமாலை, 'மத்தகப் போர் விசுவநாதன் குமாரன் மனுமுறைமைக்கு, ஒத்துறப் பார்புரக்கும் கிருஷ்ண பூபகுணக் கொண்டல்' இத் திருப்பணிகளைச் செய்ததாய் விரிவாயும் திட்டவட்டமாயும் கூறுகிறது.

**வீரப்ப நாயக்கர் :**

இவர் தில்லைச் சிதம்பரத்தில் கூத்தப் பெருமானது திருக் கோயிலைச் சுற்றி வலிமைமிக்க மதிலைக் கட்டுவித்தார்; மீனாட்சி யம்மன் திருக்கோயிலில் இடபவாகனமும் பல்லக்கும் செய்து கொடுத்ததோடு மண்டபம் அமைந்த தோப்பும் அளித்தார்.

**திருமலை திருப்பணி :**

திருமலை நாயக்கர் பொதுவாகத் திருப்பரங்குன்றத்து முருகப் பெருமான் திருக்கோயில், திருமாலிருஞ்சோலைக் கள்ளழகர் கோயில், திருவில்லிபுத்தூர் ஆண்டாள் கோயில், திருவரங்கம் பெரிய கோயில், திருவானைக்காவிலிருக்கும் சிவன் கோயில், திரு நெல்வேலி நெல்லையப்பர் கோயில் ஆகிய இக் கோயில்களிலும் திருப்பணிகள் செய்திருப்பினும், மிகச் சிறப்பாக மதுரை நகரிலிருக் கும் மீனாட்சியம்மன் திருக்கோயிலுக்குச் செய்த திருப்பணிகளே அளப்பரியவை; அற்புதமானவை. இவர் மீனாட்சியம்மன் சந்நிதி யில் உள்ள சங்கீத மண்டபத்தைக் கட்டினார். இது கிளிகளை வைத்திருக்கும் இடத்துக்குத் தெற்கு வடக்காய் இருக்கிறது. இது மீனாட்சி சுந்தரேசுவரர் கோயிலில் இருந்து சிதைந்துபட்ட கரிய மாணிக்கப் பெருமாள் கோயில் தூண்களைக்கொண்டு அமைக்கப் பட்டது. கி. பி. 7ஆம் நூற்றாண்டில் நிகழ்ந்த சமண சைவ சமயப் பூசல்களுக்குப் பின் வைணவ—சைவசமயப் பூசல்கள் நிகழ்ந்தன. இச் சைவ—வைணவ போராட்டங்களுக்குப்பின் சிவன் கோயில் களில் பெருமாள் சந்நிதிகளையும் அமைத்தற்குரிய இயக்கம் நடை பெற்ற காலத்தில் சிதம்பரத்தில் கூத்தப் பெருமான் திருக்கோயில், மதுரை மீனாட்சிசுந்தரர் கோயில் முதலிய பெருங்கோயில்களில் இரு சமய ஒருமைப்பாடு ஏற்படப் பெருமாள் சந்நிதிகள் ஏற்பட்டன. இம் முறையில் மதுரை மீனாட்சிசுந்தரர் கோயிலிலும் கரியமாணிக்கப் பெருமாள் சந்நிதி ஏற்பட்டது. இது மாலிக்கபூர் படையெடுப்பிலும் பின்வந்த வேறு இரண்டு படையெடுப்புகளிலும், மதுரை நாட்டில் நடைபெற்ற சுல்தான்கள் ஆட்சிக் காலத்திலும் அழிந்துபோய்விட் டது. இடிந்துபோய்க் கிடந்த இச் சந்நிதியிலிருந்த தூண்களைக் கொண்டே சங்கீத மண்டபம் கட்டப்பட்டது. அம் மண்டபத் தூண்

களிலிருக்கும் அனுமார், பஞ்சபாண்டவர் உருவங்களே, 'இத் தூண்கள் கரிய மாணிக்கப் பெருமாள் சந்நிதியிலிருந்து எடுக்கப் பட்டவை' என்பதற்குப் போதிய சான்றுகளாகும். சிதைந்த கரிய மாணிக்கப் பெருமாள் சந்நிதி, பிற்காலத்தில் ஒருவாறு செப்பனிடப் பட்டது. ஆனால், கரியமாணிக்கப் பெருமாள் உருவச்சிலை இப்போது அதில் இல்லை. இக் கரிய மாணிக்கப் பெருமாள் சந்நிதி மண்டபம், கூட்டுவழிபாடு நடத்தப் பயன்பட்டு வருகிறது. இதற்கு வடக்காடி வீதியில் உள்ள திருவள்ளுவர் கழகத்துக்குப் பக்கத்திலிருக்கும் மொட்டைக் கோபுரம் என்னும் வடக்குக் கோபுர வாயிலுக்கு எதிரில் பெரிய வாயில் இருப்பதைக் காணலாம்.

மேற்குறித்த மண்டபத்திற்குத் திருப்பணி செய்ததோடு திருமலை மன்னர் பின்னும் மீனாட்சியம்மன் திருமுன்பு அறுகாற் பீடத்தில் இருபெரு வாயிற் காவலர் (துவாரபாலர்) உருவங்களையும், சொக்கநாதர் திருமுன்பு அறுகாற் பீடத்தில் இருபெரு வாயிற் காவலர் உருவங்களையும் செய்து வைத்தார்; அந்த இரண்டு இடங்களிலும் பலி பீடங்களையும் கொடிக் கம்பங்களையும் (துவஜஸ்தம்பங்களையும்) அமைத்து அவற்றைப் பொன்னால் கவசம் செய்து மாட்டி அழகு செய்தார். இத் திருப்பணிகளை மதுரைக் கோயில் திருப்பணி மாலைச் செய்யுள்கள் தெரிவிக்கின்றன.

**தெப்ப விழா :**

திருமலை பூபதி வைணவராயினும் சோமசுந்தரப் பெருமான் மீது ஆழ்ந்த பக்தி கொண்டிருந்தார். அவருக்கு நெடுநாள் இருந்த மண்டைச் சளிநோய் சோமசுந்தரப் பெருமான் திருவருளால் நீங்கியது என்பதே இதற்குக் காரணம். ஆதலால், அவர் மீனாட்சியம்மன் கோயில் ஆட்சியை அபிடேக பண்டாரம் என்பவரிடமிருந்து பணமும் நிலமும் கொடுத்து ஏற்றுக்கொண்டு அக் கோயிலில் பற்பல சீர்திருத்தங்களையும் தனிச் சிறப்புகளையும் செய்யலானார். அவர், கோயிலுக்கு 12,000 பொன் (24,000 ரூபாய்) வருவாய் கொடுக்கக்கூடிய ஐராவதநல்லூர் (அயிலுனூர்), வலையபட்டி, வலையன் குளம், தொட்டியபட்டி, நெடுமதுரை, கொம்பாடி, பெரிய ஆலங்குளம், ஒற்றையாலங்குளம், சொக்கநாதன் பட்டி, ஆண்டி

பட்டி, நாதன் பட்டி, சின்னமநாயக்கன் பட்டி, போடிநாயக்கன் பட்டி, கொண்டையன் பட்டி, தும்பிச்சிநாயக்கன் பட்டி, சண்பைக் குளம், விராலிபட்டி, கிள்ளி மங்கலம், சடைச்சி பட்டி முதலிய கிராமங்களை விட்டுக் கொடுத்துத் தம் பெயரால் ஒரு கட்டளை ஏற் படுத்தினார். இக் கட்டளை வருவாயிலிருந்து மீனாட்சியம்மனுக்கு முக்கால வழிபாடுகளும், சொக்கநாதப் பெருமானுக்கு உச்சிவேளை வழிபாடும், இளவேனிற்கால விழாவும் (வசந்தோற்சவம்), தெப்பத் திருவிழாவும் நடத்தப்படுகின்றனவாம்.

**கோயில் நிர்வாகச் சீர்திருத்தம் :**

கோயில் வழிபாடு நடத்தி வந்தவர்களான விக்கிரமபாண்டியர் பட்டர் வகைக்கும் குலசேகர பாண்டிய பட்டர் வகைக்கும் நீண்ட நாளாய்ச் சச்சரவு இருந்து வந்தது. கோயில் வழிபாடு செம் மையான முறையில் நடைபெற வேண்டுமானால் இச்சச்சரவு நீங்க வேண்டும். ஆதலால், திருமலை நாயக்கர் இன்ன இன்ன வகையினர் இன்னவை இன்னவை செய்ய வேண்டும் என்று திட்டம் வகுத்துக் கொடுத்துத் தக்க முறையில் எல்லாம் நடைபெறுமாறு ஏற்பாடு செய்தார். இவ்வேற்பாட்டால் கோயில் ஆட்சியில் ஒழுங்கும் அமைதியும் உண்டாயின.

**கோயில் விழாக்கள் :**

திருமலை, இவ்வாறு பட்டர்கள் நிருவாகத்தை ஒழுங்கு செய்த பின்பு சாத்திர வல்லுநரும், தமக்கு அமைச்சருமாய் இருந்த நீலகண்ட தீட்சிதருடன் ஆராய்ந்து நான்கு பெரு விழாக்களையும், திருவிளையாடற் புராணத்தில் கூறப்பட்டுள்ள சில திருவிளை யாடல்களை விழாக்களாக்கி அவைகளையும் நடத்த ஏற்பாடு செய்தார் ; அவ்விழாக்களுக்கு வேண்டிய திருவாபரணங்களையும் செய்து வைத்தார். குதிரை வாகனத் தலைமுடிப்பாகை, இரத்தினக் கொண்டை, திருக்கலியாண முடி, நீலநாயகப் பதக்கம், குதிரை இரத்தின அங்கவடி, வீரகண்டை, இருதலைப் பட்சிப் பதக்கம், இரத்தின சூரிய காந்திப்பூ, இரத்தின வெண்டயம், நாகர் ஒட்டியாணம், குசாந்தரப் பதக்கம், நுரைப்பதக்கம், சங்கு சக்கரப்

பதக்கம், இரத்தினச் செங்கோல் பள்ளியறைக் காளாஞ்சி, சொர்ணக் கும்பா, பவளக்கொடி மாலை ஆகியவை திருமலை நாயக்கர் செய்து கொடுத்தவற்றுள் சிலவாம். இச்செய்திகளை மதுரைத் தூய மரியன்னை உயர்நிலைப்பள்ளியில் தமிழாசிரியராய் இருந்த மு. கோவிந்தசாமி ஐயரவர்களால் முன்பு ஆராய்ச்சி செய்து 1922இல் வெளியிட்ட 'திருமலை நாயக்கர் சரித்திரம்' என்னும் நூலில் கூறப்பட்டிருப்பதால் அறியலாகும். மாசித் திங்களில் மீனாட்சியம்மன் திருக்கலியாண விழாவும், தேரோட்ட விழாவும் நடந்து வந்தன. இம்மாசித் திங்கள் அறுவடைக் காலமாய் இருந்ததால் திருமலை நாயக்கர் கோயிலுக்காகச் செய்து கொடுத்த தேர்களை இழுக்க ஆள்கள் கிடைப்பது அரிதாகியிருந்தது. அக் காலத்தில் திருமாலிருஞ்சோலை மலையிலிருந்து கள்ளழகர் எழுந்தருளி மதுரைக்கு மிக அருகிலிருக்கும் தேனூர் வரை சித்திரா பௌர்ணமியன்று வந்து போவது வழக்கமாயிருந்தது. இவ் விழாவிற்கு மக்கள் ஆயிரக்கணக்காய் வருவதைக் கண்ட திருமலை, மாசித் திங்களில் நடந்து வந்த திருக்கலியாண விழாவையும் தேரோட்டத்தையும் சித்திரைத் திங்களில் நடக்கவும், சித்திரையில் நடந்துவந்த விழாக்களை மாசியில் நடக்கவும் மாற்றி வைத்தார்; மீனாட்சியம்மன் கோயில் பெருவிழாவை ஒட்டிக் கள்ளழகர் தேனூருக்குப் போவதை விட்டு மதுரை வண்டியூர் வரைக்கும் வருமாறு செய்தார்; சைவத் திருநகராய் விளங்கிவந்த பெருமை மிக்க திருமதுரையில் சிவன் கோயில் பெருவிழாவும், திருமாலிருஞ் சோலைமலை வைணவத் திருவிழாவும் அடுத்தடுத்து வரச் செய்ததால், இரு சமய விழாக்களுக்கும் பெருந்திரளாக மக்கள் கூடுவதற்கு வழி செய்து விட்டார். இன்றும் சித்திரா பௌர்ணமி பெருவிழா இலட்சக்கணக்கான மக்களைக் கவரும் விழாவாக இருந்து வருகிறது. இச்செயலால் இரு சமய ஒருமைப்பாடு ஏற்பட்டது.

புரட்டாசித் திங்களில் அரண்மனையில் நவராத்திரி விழா, சிறப்பாய் நடைபெற்றதைப் போல மதுரைக் கோயிலிலும் நடைபெற மன்னர் திருமலை ஏற்பாடு செய்தார். இந்த விழா இன்றும் புரட்டாசித் திங்களில் சிறப்பாக நடைபெற்று வருகிறது.

மேலும் திருமலை பூபதி, தாம் பிறந்த தைமாதப் பூச நட்சத்திரத்தைக் கொண்டாடும் வகையில் வண்டியூர் மாரியம்மன்

கோயிலுக்கு எதிரில் பெரிய தெப்பக்குளத்தை வெட்டுவித்து அதில் அழகிய மைய மண்டபத்தை அமைத்து, அக்குளத்தில் தெப்பவிழா நடைபெற ஏற்பாடு செய்தார். இத் தைப்பூசத திருவிழா மிகச் சிறப்பாகத் திருமலை பிறந்த நாளை ஒட்டிச் சித்திரைத் திருவிழாவுக்கு அடுத்த பெருவிழாவாக, ஆயிரக்கணக்கான மக்கள் கூடித் தரிசிக்கும் விழாவாக இன்றும் தைத் திங்களில் நடந்து வருகிறது.

புதுமண்டபம் :

திருமலை மேலும் சுந்தரேசுரர் சந்நிதிக்கு எதிரில் மிக அழகிய சிற்ப வேலைகள் அமைந்த புதுமண்டபத்தைக் கட்டி அதில் வசந்தவிழா நிகழ்ச்சி நடத்திவைத்தார். இப்புது மண்டபத்தைக் கட்டிய சிற்பி சுமந்திரமூர்த்தி ஆச்சாரி என்பர். இப்புது மண்டபத்தின் தூண்களில் திருமலை நாயக்கர் உருவமும் அவருக்கு முன்னிருந்தோர் உருவங்களும் செதுக்கி வைக்கப் பட்டுள்ளன.

புதுமண்டபத்தை முடித்துச் சில நாள்களான பின்பு திருமலை ஆவணிமூல வீதியைக் கோயிலுடன் சேர்த்து, அதையும் ஒரு பிரகாரமாக்கக் கருதி, ஆவணிமூல வீதியைச் சுற்றி மதிலெடுத்துப் புதுமண்டபத்துக்கு எதிரில் இராயகோப்ரம் கட்ட எண்ணிக் கி. பி. 1654இல் நந்தன ஆண்டில் வேலையைத் தொடங்கினார். இதைப் போலவே 64 ஊர்களில் இராயகோபுரம் கட்ட வேலை தொடங்கப்பட்டது. மதுரை இராயகோபுரம் ஏறக்குறைய 60 அடி உயரமுள்ளது. இக்கோபுர வேலை எக்காரணத் தாலோ நடைபெறவில்லை. மீனாட்சி சுந்தரேசுவரர் திருக் கோயிலைத் தமிழகத்தில் உள்ள மற்றைக் கோயில்களை விட மிகமிகச் சிறந்த கோயிலாகச் செய்த பெருமை திருமலை வேந்தருக்கே உரியதாகும்.

விஜயரங்கர் :

விஜயரங்க சொக்கநாத நாயக்கர் வில்லாபுரத்தில் மீனாட்சி அம்மனும் சொக்கநாதரும் எழுந்தருளும்போது தங்கியிருக்க

வசதியாய் இருக்கும் பொருட்டு, எழில் மண்டபம் அமைத்தார். இதையும் மதுரைக் கோயில் திருப்பணிமாலைச் செய்யுள் குறிப்பிடுகிறது.

முடிவுரை :

இவ்வாறு மதுரை நாயக்கர்கள் கோயில்களைக் கட்டி மதுரை மீனாட்சியம்மன் கோயிலில் பல திருப்பணிகள் செய்து விழாக்களை நடத்தி மக்கள் மனத்தில் இறைப்பற்று நின்று நிலவுமாறு செய்தார்கள். இந்து சமயத்தையும் நந்தமிழர் பண்பாட்டையும் மதுரை நாயக்கர்கள் கோயில் திருப்பணிகளாலும், கோயில் விழாக்களாலும் பாதுகாத்து வந்ததை நன்றியுடன் தமிழர்கள் என்றும் மறவார்கள்.

கதிர் விழாவைக் (85வது அகவை விழா) காணும் டாக்டர், முத்தமிழ்க் காவலர், கலைமாமணி, தமிழவேள் கி. ஆ. பெ. விசுவநாதர் அவர்கள் செய்துவரும் பலவகைத் தொண்டுகளுள் தமது மணிவிழா நினைவாக மதுரை டாக்டர் ச. சோமசுந்தர பாரதியார் வீட்டில் தமிழகப் புலவர் குழுவைத் தொடங்கி 49 புலவர்களை ஆண்டுதோறும் கூட்டும் அரும்பெருஞ் செயலை 25 ஆண்டுகளாய் உறுப்பினராய் இருக்கும் நானும் அறிவேன்; தமிழ் கூறும் நல்லுலகமும் இல்லை—இந்தியநாடும் நன்கறியும். இச் செயலால் அமிழ்தினும் இனிய தமிழ்மொழி பெருமை பெற்றது என்பதில் ஐயமில்லை, இத்தகைய அருந்தொண்டை ஆற்றிவரும் ஏற்றம்மிகு உயர்திரு. கி. ஆ. பெ. வி. அவர்களும் அன்னார் குடும்பமும் காவிரியாற்றின் மணலினும் நீடு வாழ இறையருளை வேண்டி இக் கட்டுரையை முடிக்கிறேன்.

# 24. முல்லைப்பெரும்பண் எது?

[அறிஞர் வீ. ப. கா. சுந்தரம்]

## 1. முகநிலை :

நால்வகை நிலத்துள் முல்லைநிலம் ஒன்று. அதற்குப் பெரும் பண் உண்டா? முல்லைப்பெரும்பண் என்பது எது? இன்று அதற்குரிய இராகத்தை எப்படிக் கண்டுபிடிப்பது? முல்லைப் பெரும் பண்ணைப்பற்றிச் சங்கச் செய்யுட்கள் என்ன சொல்லுகின்றன? இப்பண்ணைச் சிலப்பதிகார உரையாசிரியர்கள் எவ்வெவ்வாறு எங்கெங்கு விளக்கியுள்ளனர்? முல்லைப் பண்ணைப் பற்றிப் பிற்கால இசைஆய்வுப் பெரியார்கள் என்ன மொழிந்துள்ளார்கள்? இவை போன்ற வினாக்கட்கு இக்கட்டுரை விடையளிப்பதால் பல புதிய செய்திகளை அறிந்து இன்புறலாம்.

## 2. தொல்காப்பியர் கூறிய நானிலமும், யாழும், யாழின் பகுதியும் :

தொல்காப்பியர் நால்வகை நிலங்கூறுங்கால், திணைவளச் சிறப்புக்கருதி—முல்லை நிலத்தை முதற்கண் நிறுத்தினார். முல்லையை முதலாகச் சொல்லும் முறையையும் குறித்துள்ளார் : (வேறு காரணத்துடன் இம்முறையை மாற்றியுங் கூறலாம்)

"முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தலெனச்
சொல்லிய முறையாற் சொல்லவும் படுமே"

(தொல். அகத். 5)

"முல்லை முதலாச் சொல்லிய முறையால்"

(தொல். அகத். 28)

என்று மீண்டும் மீண்டும் முல்லைக்கு முதன்மையும் முன்னமையும் தருகின்றார். எனவே 'முல்லை யாழ்' எது எனத் தெளிவாய்க் காணல் இன்றியமையாதது.

மேற்கண்ட நான்கு நிலங்கள் ஒவ்வொன்றுக்கும் ஒரு பெரும் பண் உரியது. குறிஞ்சிப் பெரும்பண், மருதப் பெரும்பண், நெய்தற் பெரும்பண் என்று இசையாய்வாளர்கள் தம் நூல்களுள் விளக்கி யுள்ளதற்கு ஏற்ப—முல்லை நிலத்திற்கும் பெரும்பண் உண்டு. ஆனால் முல்லைப் பெரும்பண்ணை ஆய்வாளர்கள் தனித்துக் கொள்ளவில்லை; சிறப்பாய் விளக்கவில்லை. அது 'முல்லையாழ்' எனப்பட்டது. யாழ் என்னும் சொல், இடம் நோக்கிப் பண் எனப் பொருள்படுவது. முல்லைக்குப் பெரும்பண் கிடையாது என்போரின் மறுப்புகளுக்குக் காரணங்காட்டி மறுப்புக் கூறுவது இக் கட்டுரை. பெரும்பண் என்பது ஏறு இறங்கு நிரலில் ஏழு நரம்புகள் கொண் டது.

### 3. கருப்பொருள்களுள் பண்ணும் ஒன்று :

தொல்காப்பியர் ஒவ்வொரு நிலத்திற்கும் கருப்பொருள்கள் கூறியுள்ளார் : தெய்வம், உணவு முதலியவற்றோடும் பெரும் பண்ணையும் கிளைப்பண்ணையும் கருப்பொருளாகக் கூறியுள்ளார்:— பெரும்பண்ணை-"யாழ்" என்றும், கிளைப்பண்வகைகளை-"யாழின் பகுதி" என்றும் குறித்துள்ளார். (சிலப். பதிகவுரையில் ஒவ்வொரு நிலத்திற்கும், யாழும் யாழின் பகுதியும் கூறியுள்ளமை காண்க,)

"தெய்வம் உணாவே மாமரம் புட்பறை
செய்தி யாழின் பகுதியொடு தொகைஇ
அவ்வகை பிறவும் கருவென மொழிப".

—(தொல். அகத். 18)

எனவே தொல்காப்பியர் நான்கு நிலங்கள் என வகுத்தும், ஒவ்வொரு நிலத்திற்கும் ஒரே ஒரு பெரும்பண் அமைத்தும் கூறுவ தினின்றும்-முல்லை நிலத்திற்கு உரியது முல்லைப் பெரும்பண் எனக் கொள்ளுதல் வேண்டும். முல்லைப் பெரும்பண்ணை எப் பெயரால் கூறினார்கள் ? முல்லைக்குழல் என்றும் (சீவக, 137)

'முல்லையங் தீங்குழல்' என்றும் (சிலப். 17 : 9 உரை), 'முல்லையாழ்' என்றும் (அடியார்க்...பதிகம்) கூறுவார்கள். முல்லைக்குரிய யாழின் பகுதிக்கு (கிளைப் பண்ணுக்கு) எடுத்துக் காட்டு அகத்திணையியலில் இளம்பூரணர் கூறுங்கால்-யாழின் பகுதி என்பது ''பண்; அது சாதாரி'' என்றார் (அகத். இளம்பூரணர் உரை). சாதாரி என்பது கிளைப்பண்; பெரும்பண் அன்று. (செந்தமிழ்ச் செல்வி. பக். 452. காண்க).

**4. முல்லையாழ் பற்றி ஆய்வாளர்களின் கருத்துகள் :**

4 : (1) மு. ஆபிரகாம் பண்டிதர்—முல்லைப் பெரும்பண்ணைப் பல்வகைச் சுர அடுக்குகளாகக் கொண்டு-அழகிய இணைச்சுர அலகுகளைத் தந்துள்ளார் (கருணாமிர்த சாகரம் :- பக் : 689, 690, 691, 692, 815).

இனி, முல்லைப் பெரும்பண் என்பது குறிஞ்சி, மருதம், நெய்தற் பெரும்பண்கள் போன்றே, ஒரு பெரும் பண்ணாகுமேயன்றி, சுர அடுக்கு வரிசைகள் ஆகா; அது ஏறு இறங்கு நிரல்களில் ஏழ் நரம்புடைய (சுரமுடைய) முழுவைப்பண் (மேளகர்த்தாராகம்) ஆகும்.

4 : (2) விபுலானந்த அடிகளார்—முல்லையாழை நெய்தல் யாழோடு ஒன்றாகக் கருதி-நெய்தல் யாழே முல்லையாழ் என்று கூறியுள்ளார்: ''முல்லை யாழாகிய செவ்வழியாழ்'' என்றார். (யாழ்நூல் 1974 பக். 177); மேலும் அவர் பஞ்சமரபுச் செய்யுள் மூலங்களையும் தம் கருத்திற்கேற்ப மாற்றி அமைத்துக் கொண்டார். சங்க இலக்கியங்களிலோ, சிலப்பதிகாரத்திலோ, அதனிரு பெரும் பழம் உரைகளிலோ முல்லையாழே செவ்வழியாழ் என்பதற்குச் சான்றில்லை. மிகமிகப் பிற்பட்ட உரைகாரர் தவறாகக் கூறிய வற்றை நீக்குதல் வேண்டும்.

எனவே 'முல்லையாழே செவ்வழியாழ்' என்றது ஏற்றற்குரியது அன்று. நெய்தல் நிலம் வேறு; முல்லை நிலம் வேறு; இந் நிலங்களுக்குரிய நெய்தற்பண் வேறு; முல்லைப்பண் வேறு. இவ் விரண்டையும் தொல்காப்பியர் வேறு வேறாகப் பகுத்து, வேறு

வேறான தன்மையுடைய கருப்பொருள்களைக் கூறுவதால், நெய்தல் பண்ணும் முல்லைப் பண்ணும் ஒன்று எனல், தொல் காப்பியப் பகுப்பு முறைக்கு முரண்பட்டது. மேலும் அடியார்க்கு நல்லார் சிலப்பதிகாரப் பதிக உரையில் முல்லையாழ் வேறு, நெய்தல்யாழ் வேறு என்று விளக்கிச் சொல்வதால் (பதிகம். பக். 15) இரண்டும் ஒன்றாகா.

4 : (3) இனி கு. கோதண்டபாணியார் பழந்தமிழிசை என்னும் நூலுள் முல்லைக்குரிய கிளைப் பண்ணாகிய முல்லைப்பாணியை மட்டும் (மோகனம்) விளக்கி அதற்குரிய சுரங்களை நிலைநாட்டி யுள்ளார் ; ஆனால் அவர் முல்லைக்கிளைப் பண்ணாகிய முல்லைத் தீம்பாணியினையே முல்லைப் பெரும் பண்ணாகக் கொண்டது (பக். 56) தவறு.

முல்லைப் பெரும்பண் வேறு ; முல்லைப்பாணி வேறு ; என்பது பல்பொருள் ஒருசொல் ; அது பண்ணைக் குறிக்கும்போது, பாணி என்பது எப்போதும் கிளைப்பண்ணையே குறிக்கும் ; முல்லைப் பெரும் பண்ணினுடைய கிளைப் பண்ணை—முல்லைப்பாணி, இதனைத் தொல்காப்பிய இலக்கணத்தின் வழியாக "முல்லை யாழின் பகுதி,' என்று கூறுதல் வேண்டும். (இளம்பூரணர். அகத்திணை உரை காண்க) முல்லைப் பாணி என்பது மோகன ராகம் எனக் கோதண்டபாணியார் நிலை நாட்டியுள்ளார் ; அது செவ்விய முடிவு.

## 5. முல்லைப் பெரும்பண் எது ? எப்படி அறிவது ?

அடியார்க்கு நல்லாரின் அரிய சீரிய குறிப்புகளை அடிப் படையாகக் கொண்டு முல்லைப்பண்ணை ஆராய்தல் வேண்டும். அடியார்க்கு நல்லார் சிலப்பதிகாரப் பதிகவுரையிலே நான்குவகை நிலத்திற்கும் உரிய கருப் பொருள்கள் சிலப்பதிகாரக் காதைகளுள் எங்கெங்கு எவ்வெவ்வாறு கூறப்பட்டுள்ளன என்று நீளமான கட்டுரை வரைந்துள்ளார்; அதிலே முல்லைப் பெரும்பண் பற்றிச் சிலப்பதிகாரக் கதையுள் எங்கு கூறப்பட்டுள்ளது என்று பதிகத்தில் குறித்துள்ளார்; இக்குறிப்பு—பெருஞ் சிறப்புடையது; பெறற்கரியது; அதன் வழியாக முல்லைப் பெரும் பண்ணைக் கண்டுகொள்ளலாம்.

6. பதிகக் குறிப்பு வருமாறு :

"குடமுதல் இடைமுறை யாக்குரல் துத்தம்
கைக்கிளை உழைஇளி விளரி தாரமென
விரிதரு பூங்குழல் வேண்டிய பெயரே"
—(சிலப். 17 : 13)

என்பதனால் முல்லையாழும் இளங்கோ அடிகள் கூறியுள்ளார்".. "முல்லைத் தீம்பாணி என்றாள் (சிலப். 17 : 17, 18) என்பதனாற் சாதாரியும் இளங்கோ கூறினார்"—இவையே பதிகக் குறிப்புரை.

இக்குறிப்பால்-அடியார்க்கு நல்லாரின் இசைத்துறை நுண்மாண் நுழைபுலம் அறியலாகும்; முல்லை நிலத்திற்குப் பெரும்பண்-"முல்லையாழ்" என்றார்; கிளைப்பண்-"முல்லைத் தீம்பாணி ஆகிய சாதாரி" என்றார். (சாதாரி பற்றிச் செந்தமிழ்ச் செல்வி 452 பக். காணின் மேலும் அறியலாம்).

இனி முல்லையாழுக்குரியனவாகிய "கு.து.கை.உ.இ.வி.தா." என்னும் 7 நரம்புகள் இவை இவை என அடியார்க்கு நல்லார் ஆய்ச்சியர் குரவையுள் பல மேற்கோள்களைக் காட்டிப் பெரிதும் விளக்கியுள்ளார்: முல்லையாழ் என்றது-செம்பாலைப் பண்ணே என்றும் கூறியுள்ளார். (சிலப். 17. 13. அடியார்க்...உரை).

இவர் விளக்கங்களினால் செம்பாலைப் பண்ணே முல்லைப் பெரும்பண் ஆகும் என மிகமிகத் தெளிவாய்த் திட்டமாய் அறிந்து இன்புறலாம்.

7. அடியார்க்கு நல்லாரின் விளக்கங்கட்கு விளக்கம் வருமாறு :

ஆய்ச்சியர் குரவையுள் முல்லை நிலத்து ஆய நங்கையர்கள், முல்லைநிலத் தலைவனாகிய மாயவனை, முல்லைப் பெரும்பண் பாடியும், முல்லைத் தீம்பாணி (சிறுபண்) பாடியும் போற்றிக் கற்புச் செல்வி கண்ணகிக்கு வரும் தீங்கு நீங்குமாறு குரவையாடி வேண்டிக் கொள்கின்றனர்; முல்லை நிலக் கடவுளை அவனுக்குரிய முல்லைப்பண் பாடிப் போற்றி வேண்டுகின்றனர்.

மேலும் இங்கு, இளங்கோவடிகள் - முல்லைப்பண்ணின் நரம்புகளை (சுரங்களை) முல்லைக் கடவுளர்களின் பெயர்களால் சுட்டியுள்ளார். ஏன் ?

முல்லை நரம்புகட்கு முல்லைக் கடவுளர்

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| ச. | ரி. | க. | ம. | ப. | த. | நி. | =சுவரம் |
| கு. | து. | கை. | உ. | இ. | வி. | தா. | =நரம்பு |
| மாயவன் | நப்பின்னை | ஆயநங்கை | மனைவி | பலராமன் | மனைவி | யசோதை | =முல்லைத் தலைவர் |

குரல் - மாயவன் ; துத்தம் - நப்பின்னை ; உழை - பலராமனின் மனைவி ; இளி - பலராமன் ; விளரி - பலராமனின் மற்றோர் மனைவி ; தாரம் - யசோதை.

இவ்விளக்கத்தின் மூலமாகச் செம்பாலைப் பண்ணின் அமைப்பு நயங்களை இளங்கோ சுட்டியுள்ளார். (1) குரலும் இளியும் - மாயவனாகவும் பலராமனாகவும் நிற்பதாகக் குறித்துள்ளது - இணை சுரங்களைச் சுட்டுவதாகும். (2) மற்றைய சுர வீடுகளில் ஆய நங்கையர் நிற்பதாகக் குறித்தார்; ஏன் எனில் - து. கை. உ. வி. தா - ஆகியவை பண் நிறக் கோவைகள் எனக் குறிப்பதற்காகச் சாயலும் நிறமும் மிக்க நங்கையரை நிறுத்தினார் ; (3) தார நரம்பில் தாய் ஆகிய யசோதை நிற்பது ஏன் ? பண் தோற்றத்திற்கு அடிப்படை தாய் நரம்பாவது தாரம் எனக் குறிப்பதன் பொருட்டு எனக் கொள்ளலாம். எனவே முல்லைப் பண்ணின் இலக்கணத்தை இவ்வாறு முல்லைக் கடவுளர் பெயர்க் குறியீடுகளால் இளங்கோவடிகள் சுட்டியுள்ளார். (சிலப். 17 : 14. 15. 16); சுரங்கட்குக் கடவுளர்களின் பெயரை இட்டது பண் இலக்கணங்களைக் குறியீட்டு முறையால் விளக்கும் பொருட்டே. பண்ணிலக்கணக் கருத்து உள்ளே உறைந்து கிடப்பதால் - இவை உள்ளுறை வகை ஆகும்.

## 8. இராசி வீடுகளால் விளக்கம் :

இனி, செம்பாலைக்குரிய ஏழு நரம்புகள் இவை இவை என 12 இராசி வீடுகளில் நிறுத்திப் பண்டைய இசை நூலோர்கள் விளக்கியுள்ளார்கள். இவற்றை ஆய்ச்சியர் குரவையுள் காணலாம். ஏழு சுரங்களாக எழுவர் நின்று குரவைக் கூத்து ஆடினார்கள். அந்த 7 சுரங்களே முல்லையாழின் சுரங்கள் எனப் பதிகத்தில் அடியார்க்கு நல்லார் கலங்கரை விளக்குப் போன்று சுட்டிக் காட்டி யுள்ளார். மேலும் அவரே 12 இராசி வீட்டில் 7 இராசி வீடுகளைப் பிரித்துக் கூறி - அவ்வீடுகளில் நிற்கும் ஏழு சுரங்கள் இவை எனவும் விளக்கிப் பலபல மேற்கோள்கள் காட்டி ஆய்ச்சியர் குரவைக் காதையுள் விளக்கியுள்ளார்.

செம்பாலையின் நரம்புகட்கு இராசிகள்

| நிரல் | 12 நரம்பு | 12 சுரம் | 12 இராசி வீடு | தேர்ந்தது | வரிசை |
|---|---|---|---|---|---|
| 1 | குரல் | (ச) | துலாம்....... | ✓ | 1 |
| 2 | மென்துத்தம் | (சு.ரி) | நண்டு....... | × | |
| 3 | வன்துத்தம் | (ச.ரி) | தனு.......... | ✓ | 2 |
| 4 | மென்கைக்கிளை | (சா.கா) | மகரம்....... | × | |
| 5 | வன்கைக்கிளை | (அ.கா) | கும்பம்...... | ✓ | 3 |
| 6 | மெல்லுழை | (சு.ம) | மீனம்........ | ✓ | 4 |
| 7 | வல்லுழை | (பி.ம) | மேடம்........ | × | |
| 8 | இளி | (ப) | இடபம்...... | ✓ | 5 |
| 9 | மென்விளரி | (சு.த) | மிதுனம்..... | × | |
| 10 | வன்விளரி | (ச.த) | கடகம்....... | ✓ | 6 |
| 11 | மென்தாரம் | (கை.நி) | சிம்மம்...... | ✓ | 7 |
| 12 | வன்தாரம் | (கா.நி) | கன்னி....... | × | |

## 9. முல்லையாழின் இராசிவிட்டால் இன்றைய இராகம் :

மேற்காட்டிய 12 இராசி நிலத்தில் முல்லையாழுக்குரிய வீடுகள் (√) இந்த அடையாளத்தால் காட்டப்பட்டுள்ளன. எனவே அவற்றிற்குரிய சுரங்கள் : ச. ரி$^{3}$. க$^{3}$. ம$^{1}$. ப. த$^{2}$. நி$^{1}$; இந்தச் சுரங்களைக் கொண்ட ராகம்—அரிகாம்போதி; எனவே முல்லைப்பண் அல்லது செம்பாலை என்பது அரிகாம்போதியாகும்.

## 10. முல்லையாழின் நரம்புக்கு இராசிவீடுகள் :

### வெண்பா

குரல்துலை, வில்துத்தம், கைக்கிளையே கும்பம்;
பரிய உழைமீனம் பாவாய்,—அரி தாரம்,
கொல்ஏறு இளி,—விளரி கற்கடகம்—கோப்பமைந்த,
தொல்ஏழ் இசைநரம்பிற் காம்
—(சிலப். 17. ஆய்ச். 13 அடியார்க்...மேற்கோள்)

இந்த மேற்கோள் பாடலும் மற்றும் சில அரிய மேற்கோள் பாடல்களும் செம்பாலைக்குரிய ஏழு நரம்புகளை விளக்குவதினின்றும் செம்பாலை என்பதற்குரிய இன்றைய இராகம் அரிகாம்போதி எனத் தெளிவாய் அறியலாம். 12 இராசிகள்—12 சுரங்கள்; அவற்றில் செம்பாலைக்குரிய 7 சுரங்களை, 7 இராசிப் பெயரால் குறித்துச் சுரங்களின் வகைகளைத் தெளிவுபடுத்துவதால்—அடிப்படை பாலையாகிய செம்பாலை என்பது அரிகாம்போதியே என அறியலாகும். இந்த நூற்றாண்டுத் தொடக்கத்தில்—தமிழக இசை ஆய்வாளர்கள் பலரும் அடிப்படைப் பாலையைச் சங்கராபரணம் என்று எண்ணிப் பலரும் மு. ஆபிரகாம் பண்டிதருடன் ஒப்புக்கொண்டிருந்தனர். ஆனால் அடிப்படைப்பாலை என்பது அரிகாம்போதி என முதன் முதல் தமிழகத்திற்குக் காட்டி அருளியவர்—இசைத் தவமாமலை—விபுலானந்த அடிகளார் ஆவர். இவர் காலத்திலிருந்து இசைத் துறையில் ஒரு திருத்தமும் முன்னேற்றமும் மலரத் தொடங்கிப் படிப்படியாய் வளர்ந்து வருகிறது.

## 11. இணை நரம்புகளால் செம்பாலை தோன்றுதல் :

மேலும் இணை நரம்புகளால் செம்பாலைப் பண் எவ்வாறு பிறக்கும் எனப் பஞ்ச மரபு அறிவனாரும், அடியார்க்கு நல்லாரும் விளக்கியுள்ளார்கள்.

இணை நரம்பு என்பது ஒரு நரம்புக்கு மேல் ஏழாம் வீட்டு நரம்பு. "ஏழாம் நரம்பு இணை" என்பது கல்லாடத்தில் காணும் மேற்கோள் செய்யுள் வரி. மென்தார நரம்பை முதல் நரம்பாகக் கொண்டு இணை நரம்புகளைத் (ச—ப. முறையில்) தொடுத்துக் கொண்டே சென்று தொகுத்தால்—தொகுக்கப்பட்ட 7 நரம்புகள் செம்பாலைக்குரிய நரம்புகளாகும்.

இணை நரம்பு தொடுத்துத் தொகுத்தல்




தாரத்து உழை தோன்றப் பாலை யாழ்

1 —> 2 = தா —> உ ... தாரத்து உழை பிறக்கும்.
2 —> 3 = உ —> கு ... உழையிற் குரல் பிறக்கும்.
3 —> 4 = கு —> இ ... குரலுள் இளி பிறக்கும்.
4 —> 5 = இ —> து ... இளியுள் துத்தம் பிறக்கும்.
5 —> 6 = து —> வி ... துத்தத்துள் விளரி பிறக்கும்.
6 —> 7 = வி —> கை ... விளரியுள் கைக்கிளை பிறக்கும்.

12. இவ்வாறு தொடுத்துச் செம்பாலையை ஆக்குவதைப் பஞ்சமரபு ஒரே வரியால் அடக்கிச் சுட்டியுள்ளது; அந்த இரத்தினச் சுருக்கவரி இதோ :

"தாரத்துழை தோன்றப் பாலையாழ்"

எனவே, இங்குப் பாலையாழ் என்றது செம்பாலையாழையே குறிக்கின்றது என்பதை ஏழ்நரம்புகளின் அடைவுகளால் மிகத் தெளிவாய் அறியலாம். பாலையாழ் என்பது செம்பாலையாகிய முல்லைப்பண்ணைக் குறித்து நிற்பதால் பஞ்சமரபு கூறிய பாலை, குறிஞ்சி, மருதம், நெய்தல் என்னும் நாற்பண்களின் வரிசையும் தொல்காப்பியர் சுட்டிய

"[1]முல்லை [2]குறிஞ்சி [3]மருதம் [4]நெய்தல் எனச்
சொல்லிய முறையாற் சொல்லவும் படுமே"

என்னும் வரிசையும் ஒத்து விளங்குவது அறிந்தின்புறத் தக்கது.

### வெண்பா

1. தாரத் துழைதோன்றப் பாலையாழ்; தண்குரல்
2. கூரத் துழையே குறிஞ்சியாழ்—நேரே
3. இளிகுரலில் தோன்ற மருதயாழ்; துத்தம்
4. இளிபிறத்தல் செவ்வழியா மாம். —(பஞ்சமரபு-22)

13. இனி, 'செம்பாலைக்குப் பாலையாழ்' என ஏன் பெயராயிற்று ?

பாலை என்னும் சொற்குப் பகுப்பு என்னும் பொருண்மை உண்டு. (பகல் > பால் > பாலை; பகு + அல் = பகல்).* செம் பாலையானது 6 பெரும்பாலைகளைப் பண்ணுப் பெயர்ப்பால் பிறப்

---

* பகு + அல் = பகல்; இதில் 'க'— நீங்க, ஈடுசெய்ய முதல் நீளுதல் என்னும் வேர்ச்சொல் நெறியில்—முதல் நீளும்; ப [க.] ல் > பால்; (ஒ. நோ : ஆண்பால் பெண்பால் = ஆண்பகுப்பு, பெண்பகுப்பு) பகல் வகை அல்லது பால் வகைப் படுவது பாலை. பால் = பிரிவு; பாற்றப் படுவது—பாலை; பாற்றுதல் = பிரித்தல். "விடம் பாற்று வித்தார்" என்பது பெரியபுராண வரி.

பித்துப் பகுப்பதால்—''பாலை'' எனப் பெயர் பெற்றது. ''தாரத்து உழை தோன்றப் பாலையாழ்'' என்றது செம்பாலையின் அமைப்பையும் சுட்டுகிறது; பண்ணுப் பெயர்ப்பிலே அடிப்படைப்பாலை யாவதையும் சுட்டுகிறது என்றதைச் செம்பாலைப் பண் எனக் கொள்ளாமல்—வரண்ட சுரமாகிய பாலை நிலத்திற்குரிய யாழ் எனக் கொண்டு பலர் ஆய்வுக் கடலில் திக்குத் தெரியாது அலைந்து இடர்ப் பட்டுள்ளனர். தாரத்துழை தோன்றப் பிறப்பது செம்பாலை ஆதலாலும் முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் என்பது வரிசையாதலாலும் தாரத்துழை தோன்றப் 'பாலையாழ்' என்று குறித்தது செம்பாலையாகிய முல்லையாழையே. இதில் ஐயம் ஒன்றுமில்லை.

**14. ஆதிமுதற்பண் :** அனைத்து இந்தியாவிற்கும் ஆதி முதல் முழுமைப்பண்—முல்லைப்பண்ணே; இது தொல்காப்பியர் காலத்திற்கும் முன்னரே—தோன்றியது. சாமகானம் என்பது இடை ஒலி, முதல் ஒலி, கடையொலி என்னும் மூவொலி கொண்ட இறங்கு நிரல் ஓசை கூட்டமேயன்றி, அது ஒரு வளமான முழுமைப்பண் அன்று. முல்லைப் பண்ணுக்கு மிகத் தொன்மையான எழுத்துச் சான்றுகள் தமிழில் கிட்டியுள்ளதுபோல், இந்திய மொழிகள் வேறு எதிலும் எழுத்துச் சான்றுடன் விளங்கும் தொன்மையும் வளமையும் முழுமையும் வாய்ந்து இசையிலக்கணமும் கூறப்பட்ட பண் வேறு ஒன்றில்லை.

**15. பண்ணீர்மைகள் :**

செம்பாலையின் பண்ணிலக்கணத்தைச் சிலப்பதிகாரம் உரைக்கின்றது. இது குரல் குரலாக நிற்பது; ஏழ்பாலைப் பெயர்ப்பில் அடிப்படைப் பண்ணாவது; இணை நரம்பு மென்தாரமுதல் தொடுத்துத் தொகுத்து நிறுத்தப்பட்டது. இது மங்களப் பண் எனப் போற்றப்பட்டுள்ளது. தொன்மைக் காலத்தில் அரங்கில் முதலில் பாடப்பட்டது. கார்காலமும் மாலைப்போதும் இதனைப் பாடுவதற்குரியன. முல்லையாழ் எனவும் முல்லைக் குழல் எனவும் கூறப்பட்டது. முல்லைப் பெரும் பண்ணுக்கே (அரிகாம்போதிக்கு) முல்லை நிலத்து ஆயர்குழல் துளையிடப்பட்டது. அரிகாம்போதிக்கே இன்றும் குழல் துளையிடப்படுகிறது. இதுவும் முல்லையாழை நிறுவுவதற்கு இமயம்போன்ற சான்றாகும்.

முடிவு: முதன்முதல் முல்லைப் பெரும்பண் இதுதான் என்று விரிவான சான்றுகள் காட்டி நிறுவப்பட்டுள்ளது. (20-8—1983); முன்னர் தஞ்சையில் இது குறிப்பாக விளக்கப்பட்டது. அறிஞர் இந்தக் கண்டுபிடிப்பு பற்றிக் கருத்துக் கூறினால்—நன்றியுடன் ஏற்று நிறுத்துப் பார்க்கப்படும்.

நன்றிப் படையல் :

85 ஆண்டு நிறைவு விழாவில் முத்தமிழ்க் காவலர்க்குக் காணிக்கையாக இக்கட்டுரையைப் பணிந்து பற்றுமையுடன் படைக்கின்றேன். ஒரு நாள் 6 மணிநேரம் என் இசை ஆய்வு ஏடுகள் அனைத்தையும் பார்த்து அருளினார்; என் இசைப்பணியை வாழ்த்தியருள்பொழிந்து ஊக்கமூட்டினார். என் கட்டுரைகள், நூல்கள் மேலும் மேலும் வெளிவர மூலகாரணமாகத் துணைநின்ற முத்தமிழ்ச் சான்றோரை என் வாழ்வும் என்னுயிரும் என்றும் மறவாது நன்றி கூர்கின்றன. கட்டுரைகளால் பயன்பெறும் அன்பர்களே என்னோடு சேர்ந்து நன்றிகூற வாருங்கள்.

# 25. ஓலைச் சுவடி பற்றிய சில குறிப்புகள்

[பேராசிரியர் மு. சண்முகம் பிள்ளை]

## சுவடி பல ஆயினமை

இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட சங்கப் பாடல்கள் முதலாகப் பல்வேறு காலங்களிலும் தோன்றிய தமிழ் நூல்களை நாம் இன்று பெறுவதற்குத் துணை புரிந்தவை காலந்தொறும் எழுதப் பெற்றுவந்த தமிழ்ச் சுவடிகளேயாம். புலவர்களும் அவர்களிடம் பயின்ற மாணவர்களும் நூல்களை எழுதிப் படித்து வந்ததனால் தான் நூல்களுக்குப் பற்பல சுவடிகள் அமைவதாயின.

## புலவர் இல்லமே நூலகம்

முன்னாளில் வாழ்ந்த பெரும் புலவர்களின் இல்லங்கள் நூல கங்களாக அமைந்திருந்தன. டாக்டர் உ. வே. சாமிநாதையர் அவர்களுக்குப் பழந் தமிழ்ச் சுவடி பலவும் கிட்டியது மிதிலைப்பட்டி அழகிய சிற்றம்பலக் கவிராயர் இல்லத்திலிருந்துதான். அதனால்தான் இவருடைய இல்லத்தைத் 'தமிழ்க் கோயில்' என ஐயரவர்கள் தம்முடைய 'என் சரித்திரத்தில்' குறிப்பிடுவாராயினர்.

மேலும் ஐயரவர்கள் 'தமிழ்க் கோயில்' என்று போற்றிப் புகழ்ந்தது திருநெல்வேலி கவிராஜ ஈசுரமூர்த்தியாபிள்ளை யவர்களின் குடும்ப இல்லமாகும். இந்த இல்லத்தில் உள்ள சுவடியறை பற்றி ஐயரவர்கள் குறிப்பிடுவதாவது :

"மேலை வீதியிலுள்ள கவிராஜ பிள்ளை ஈசுரமூர்த்தி வீட்டில் புத்தக அறை இருந்தது. அதுதான் அவர்கள் பரம்பரை

வீடு. புத்தக அறையைத் திறந்து காட்டினார்கள். பார்த்தவுடன் என் உடம்பு சிலிர்த்தது. 'தமிழ்ச் சங்கத்தில் முன்பு இப்படித்தான் சுவடிகளை வைத்திருந்தார்களோ' என்று வியப்படைந்தேன். ஏட்டுச் சுவடிகளை அடுக்கடுக்காகவும் ஒழுங்காகவும் வைத்திருந்தார்கள். சுவடிகளைக் கட்டி வைத்திருந்த முறையே திருத்தமாக இருந்தது. புழுதி இல்லை; பூச்சி இல்லை. ஏடுகள் ஒன்றோடொன்று கலக்கவில்லை. தமிழ்த தெய்வத்தின் கோயிலென்று சொல்லும்படியாயிருந்தது அவ்விடம்.''

இவ்வாறு சுவடிகளை நன்கு பேணிப் போற்றிய புலவர் குடும்பங்களும் அந்நாளில் நம் நாட்டில் அங்கங்கே இருந்தன.

### கவிராயர் குடும்பங்கள்

புலவர் பரம்பரையினர் சிலர் வழிவழிப் புலமையாளராய் இருந்ததும் உண்டு. இத்தகு குடும்பத்தினர் 'கவிராயர்' எனப் போற்றப் பெற்றனர். கவிராயர் குடும்பங்கள் ஸ்ரீவைகுண்டம், ஆழ்வார் திருநகரி. தென்காசி, சேற்றூர், திருநெல்வேலி முதலிய பல ஊர்களில் இருந்தன. இக்குடும்பத்தினர் தம் பெயருடன் கவிராயர் என்னும் சிறப்புப் பெயரையும் சேர்த்து வழங்கினர். திரிகூடராசப்பக் கவிராயர், திருப்பாற்கடனாதன் கவிராயர், தாயவலந்தீர்த்தான் கவிராயர், சுப்பிரமணியக்கவிராயர், கந்தசாமிக் கவிராயர் என்றிவ்வாறு பலர் இருந்தமை குறிப்பிடத் தக்கது. இத்தகு கவிராயர் குடும்பங்களில் நிரம்பியிருந்த சுவடிகள் காலகதியில் சிதறுண்டு கரைந்து விட்டன. என்றாலும் எச்சங்கள் தமிழகத்தில் அங்கங்கே இருக்கலாம். இப்பொழுதும் மூலை முடுக்குகளிலிருந்து அவ்வப்போது சிற்சில சுவடிகள் கிட்டிவருகின்றன.

### ஏடு எழுதுவோர்

சங்ககாலப் புலவருள் ஒருவர் மதுரை எழுத்தாளன் சேந்தன் பூதனார் என்னும் பெயருடையார். இவர் பாடிய பாடல்கள் அகநானூறு (84,207) குறுந்தொகை (80,206), நற்றிணை

(69,261) ஆகியவற்றில் இரண்டிரண்டு காணப்படுகின்றன. இவருக்கு 'எழுத்தாளன்' என்ற பெயர் பாடல்களைப் பாடியமையா லன்றி நூல்கள் பலவற்றைப் படியெடுத்தமையானும் ஏற்பட்டு இருக்கலாம். ஏட்டில் நூல்கள் முதலியவற்றை எழுதியோர் 'எழுத்தாளன்' என்னும் சிறப்புக்குரியராகின்றனர். தமிழ்ச் சுவடிகளை எழுதிப் போற்றுவோரும் எல்லாக் காலத்தும் இருந்து வந்துள்ளனர். பிறர் பொருட்டு ஏடு பெயர்த்து எழுதித்தருதலைத் தொழிலாகக் கொண்டிருந்தோரும் பலர் அங்கங்கே இருந்தனர். அதனால் நூல்கள் பலவிடத்தும் பரந்து சென்று பயன்பட ஏதுவாகியது.

### திருக்கோயிலும் திருமடங்களும்

முன்னாளில் திருக்கோயில்களும் சமயச் சார்பான திருமடங்களும் கல்வி நிலையங்களாகவும் விளங்கியதுண்டு. மாணவர் பலர் இங்கெல்லாம் தங்கியிருந்து கல்வி பயின்றனர். ஆகவே இத்தகு நிலையங்களில் சுவடிகள் பல இருத்தல் இயல்பே. தில்லைச் சிதம்பரங் கோயிலிலிருந்து தேவாரத் திருமுறைகளை அநபாயச் சோழன் கண்டெடுத்து உலகிற்குத் தந்தார் என்பது வரலாறு. திருவாவடுதுறை, தருமபுரம், சித்தாமூர் துறையூர், திருப் பனந்தாள், மதுரை, செப்பறை, வானமாமலை முதலிய ஊர்களில் உள்ள சமயஞ்சார்ந்த திருமடங்களில் சுவடிகள் பல காணப்படுகின் றன. திருப்பனந்தாள் காசிமடத்திலுள்ள சுவடிகள் தமிழ்ப் பல்கலைக் கழகச் சுவடி நூலகத்திற்கு வந்து சேர்ந்துள்ளன. மதுரைத் திரு ஞானசம்பந்தர் ஆதீனத்திலிருந்த சுவடிகள் மதுரை காமராசர் பல்கலைக் கழகத் தமிழ்த்துறைக்குத் தரப்பட்டுள்ளன. மருத்துவம், சோதிடம் ஆகியவற்றைத் தொழிலாகக் கொண்டிருந்த குடும்பங் களில் அப்பொருள்கள் பற்றிய சுவடிகள் பலவாக உள்ளன.

### மாணாக்கர்—ஓலைக்கணக்கர்

'அன்னாய் இவன் ஓர் இளமாணாக்கன்' எனக் குறுந்தொ கையில் (33) தலைமகள் பாணன் ஒருவனைக் குறிப்பிடுவதாக வந்துள்ளது. எனவே மாணாக்கருள் தொடக்க நிலையினர் இள

மாணாக்கராகவும் பயிற்சி முதிர்ந்தவர் மாணாக்கராகவும் குறிப்பிடப் பெற்றனர் என்பது தெரியவரும். எழுத்துகளை எழுதி மை தடவிய ஓலைச்சுவடிகள் மாணாக்கர் கற்பதற்குப் பயன்பட்டன. 'மையாடல் ஆடல் மழபுலவர்' (பரி. 11 : 88) என்பதனால் மைபூசிய ஓலைச் சுவடியைக் கற்பதற்குக் கருவியாகப் பயன்படுத்தியமை தெரியவரும். ஓலைச்சுவடிவழி அந்நாளில் கல்வி பயின்றுவந்தமையால் மாணவர் களை 'ஓலைக் கணக்கர்' என்னும் ஒரு வழக்கும் ஏற்படலாயிற்று.

''ஓலைக் கணக்கர் ஒலியடங்கு புன்செக்கர்
மாலைப் பொழுதில் மணந்தார் பிரிவுன்னி
மாலை பரிந்திட்டு அழுதாள் வனமுலைமேல்
கோலஞ்செய் சாந்தம் திமிர்ந்து'' (நாலடி. 40 : 7)

இந் நாலடியார்ப் பாட்டில் பள்ளியிற் பயிலும் மாணவர் படிப்பொலி அடங்கிய மாலைப்பொழுது குறிப்பிடப்படுவதால் பகல் முழுமையும் அவர்கள பயின்றமை வெளிப்படும்.

சுவடித்தூக்கு

பள்ளிக்கு மாணவர் எடுத்துச் செல்லும் சுவடித்தூக்குப் பற்றித் தமிழ்விடு தூதுடையார் குறிப்பிட்டுள்ளார் :

''எண்முதலா கப்பகரு மீரா றெனும்பருவம்
மண்முதலோர் செய்து வளர்க்குநாள்—கண்மணிபோற்

பள்ளிக்கூ டத்தசையாம் பற்பலதொட் டிலிற்கிடத்தி
தள்ளிச் சிறார்கூடித் தாலாட்டி—உள்ளிவரு

மஞ்சட் குளிப்பாட்டி மையிட்டு முப்பாலும்
விஞ்சப் புகட்ட மிகவளர்ந்தாய்—மஞ்சரையே

பன்னியொரு பத்துப் பருவமிட்டு நீவளர்த்தாய்
உன்னை வளர்த்துவிட வொண்ணுமோ?''

(தமிழ்விடு தூது 23-26)

இங்கே மஞ்சட் குளிப்பாட்டல், மையிடல், முப்பாலைப் புகட்டல், குழந்தைக்கும் சுவடிக்கும் பொது. படிக்கத் தொடங்கு

கையில் எழுதிய ஏட்டில் மஞ்சட் பூசுதலும், பின்பு எழுத்து விளங்க மைக்காப்புச் சாத்துதலும் நாட்டு வழக்கமாகும். குழந்தைக்குத் தாய்ப்பால், பசுவின்பால், ஆட்டின்பால் ஆம் மூவகைப் பாலைப் புகட்டுவது உண்டு. சுவடியோ அறம், பொருள், இன்பம் என்னும் முப்பாற் பொருளையும் கொண்டதாகவே அமையும்.

### ஏட்டெழுத்து

பரஞ்சோதி முனிவர் சந்திரனின் தோற்றம் பற்றிய பாடல் ஒன்றில் வானத்தை ஏடாகவும், அதில் விளங்கும் விண்மீன்களை அவ்வேட்டில் பொறித்த எழுத்துகளாகவும், அவ்வெழுத்துகளின் மேல் இருளாகிய மை தடவி நிலவாகிய வெள்ளாடையினால் துடைப்பவனைப் போலக் கடலிலிருந்து வெண்கதிர்வீசிச் சந்திரன் தோன்றினான் என்கிறார்.

"சேய தாரகை வருணமாத் தீட்டிய வானம்
ஆய வேட்டினை இருளெனும் அஞ்சனம் தடவி
தூய வாணிலா என்னும்வெண் தூசினாற் துடைப்பான்
பாய வேலையில் முளைத்தனன் பனிமதிக் கடவுள்."

(திருவிளை. பரிநரி. 9)

ஏட்டில் எழுத்தாணியால் எழுதி அதன்மேல் மை தடவி, அந்த மை நன்கு படிய வெள்ளைத் துணியினால் துடைக்கும் வழக்கத்தினை இப் பாட்டில் உருவகமாகப் பரஞ்சோதி முனிவர் எடுத்தியம்பியுள்ளமை காணலாம். வருணம் என்றால் எழுத்தாம்; அஞ்சனம் என்பது மையாகும்.

### செய்தியோலை

சங்ககாலத்தில் எழுத்துக்கலை சிறப்புற்றிருந்தது. கல்லில் பொறித்துவைக்கும் அளவிற்கு அக்கலை வளர்ந்திருந்தது. செய்தி தெரிவிக்க ஓலையில் எழுதி அதற்குக் காப்பாக உறையிட்டு அரக்கு முத்திரையிடுதல் பற்றிய குறிப்பு ஒன்று கலித்தொகையில் காணப்படுகிறது.

''துகள்தபு காட்சி அவையத்தார் ஓலை
முகடு காப்பு யாத்துவிட் டாங்கு'' (கலி. 94 : 42-43)

என்பது செய்தியோலையைச் சுட்டுகிறது. இதற்கு நச்சினார்க்கினியர், ''துகள் அறுகின்ற அறிவினையுடைய அவையிலுள்ளார் திரட்சி பொருந்தின ஓலையின் தலையைக் கட்டி அதன் தலையிலே அரக்கிலச்சினை இட்டுவிட்டாற்போல'' என்று விளக்கம் எழுதுதலும் நோக்கத்தகும்.

### நீட்டோலை

அரசனுடைய ஆணைதாங்கிய ஓலை 'நீட்டோலை' எனப்படும்.

''கவையாகிக் கொம்பாகிக் காட்டகத்தே நிற்கும்
அவையல்ல நல்ல மரங்கள் — சவைநடுவே
நீட்டோலை வாசியா நின்றான் குறிப்பறிய
மாட்டாத வன்நன் மரம்''

என அவ்வையார் பாடலில் அரசவையில் தரப்படும் நீட்டோலை பற்றிய குறிப்பு உள்ளது. பின்னாளிலும் அழகியபாண்டிபுரம் பெரிய வீட்டு முதலியார் ஓலைகளில் அரசாணைகள் 'நீட்டு' என்னும் பெயரால் குறிக்கப்படுதலும் இங்கு ஒப்புக்காணத்தகும்.

### கேட்டு எழுதி ஓதி வாழ்வார்

இந்நாளில் மாணவர்க்கு உணவு, உடை, புத்தகம், எழுதுகோல் போன்றவற்றை நன்கொடையாக வழங்குதல்போல அந்நாளிலும் மக்கள் உதவிவந்தனர் என்பதைப் பின்வரும் ஏலாதிப் பாடல் வழி அறியலாகும்.

''ஊணொடு கூறை எழுத்தாணி புத்தகம்
பேணொடும் எண்ணும் எழுத்துமிவை—மாணொடு
கேட்டெழுதி ஓதிவாழ் வார்க்கீய்ந்தார் இம்மையான்
வேட்டெழுத வாழ்வார் விரிந்து''. (ஏலாதி 63)

'கேட்டு எழுதி ஓதி வாழ்வார்' என்றது பள்ளியில் பாடம் ஓதும் மாணவர்களையே. இவர்கள் கேட்டு எழுதி ஓதி வந்ததன் பயனால் வழிவழியாகத் தமிழ்ச் சுவடிகள் நாட்டில் எங்கும் பெருகலாயின.

### சுவடிப் புத்தகம்

பல ஏடுகள் ஒன்றாகக் கோத்த நூற்சுவடி புத்தகம் என்று வழங்கப்பெற்றது. இதனைப் 'பொத்தகம்' என்றும் சொல்வதுண்டு.

''பலவி னியைந்தவும் ஒன்றெனப் படுமே
அடிசில் பொத்தகம் சேனை யமைந்த
கதவம் மாலை கம்பல மனைய''

என ஆசிரியர் அகத்தியனார் இதழ்கள்பல சேர்ந்தது பொத்தகம் என்பதனை எடுத்துரைக்கிறார்.

### கலைமகள் கையில் புத்தகம்

கல்விக்கு அடிநிலை சுவடி நூல்களாகிய புத்தகங்கள். எனவே கலைமகள் திருக்கையில் புத்தகம் ஓர் அணிகலனாக நிலைபெறுவதாயிற்று.

''புத்தகமு ஞானத்து முத்திரையும் பொற்பளிங்கும்
வைத்த கமண்டலமும் வன்னிகையும்—முத்தின்
வடங்கொண்ட தோளினாள் வந்தென் மனத்தே
இடங்கொண்டாள் நீங்கிற் றிடர்''

எனவரும் பாரத வெண்பாவின் கலைமகள் காப்புச் செய்யுளில் அவளுடைய திருக்கரத்தில் விளங்கும் புத்தகத்தை முதலில் எடுத்துக்கூறுவது காணலாம். கம்பராமாயணப் பாயிரத்திலும் கலைமகள் வாழ்த்து 'பொத்தகம் படிக மாலை' எனப் பொத்தகத்தை முதன்மையாக வைத்துப் பாடப்பட்டிருத்தலும் நோக்கத்தகும்.

### புத்தகத்தில் பதிவு செய்தல்

இலக்கிய இலக்கண சாத்திர நூல்கள் கணக்குகள் முதலியன எல்லாமே சுவடிப்புத்தகத்தில் எழுதிப் போற்றப்பட்டன. பட்டினத்

தார் சிவபெருமானை நோக்கிப் பாடிய துதிப்பாடல் ஒன்றில் பெருமான் பார்வதியைத் திருமணஞ் செய்த நாளில் அத்திருமணத்திற்கு வந்திருந்தவர் பெயர்களுடன் தம் பெயரையும் புத்தகததில் எழுதிக் கொள்ளுமாறு வேண்டுகின்றார்.

> "உரிமையிற் பாடித் திருமணப் பந்தருள்
> அமரர் முன்புகுந் தறுகு சாத்திநின்
> தமர்பெயர் எழுதிய வரிநெடும் புத்தகத்து
> என்னையும் எழுத வேண்டுவல்"
> (பதினொராந். கோயில் நான். 4 : 20-23)

என்பது பட்டினத்தாரின் வேண்டுதலாகும்.

இறைவன் பத்திசெய்து வாழ்வாரையும் அல்லாரையும் குறித்து வைக்கிறான் என்றும் அவ்வாறு அவன் எழுதும் புத்தகம் 'கீழ்க் கணக்கு' எனப்படும் என்றும் திருநாவுக்கரசர் தேவாரத்தில் குறிப்பிடுகிறார்.

> "தொழுது தூமலர் தூவித் துதித்துநின்று
> அழுது போற்றி அரற்றுகின் றாரையும்
> பொழுது போக்கிப் புறக்கணிப் பாரையும்
> எழுதுங் கீழ்க்கணக் கின்னம்பர் ஈசனே".
> (தேவாரம் 5 : 21 : 8)

இவ்வாறாக எழுத்தும் சுவடிப்புத்தகமும் எல்லாக் காலத்தும் செய்திக் களஞ்சியங்களாகத் திகழ்ந்தன என்பது தெளிவாம்.

### ஏட்டில் எழுதிவந்த காலம்

காகிதமும் அச்சுயந்திரமும் பெருகப்பெருக ஏட்டில் எழுதும் நிலை குறைந்து வரலாயிற்று. 1876ஆம் ஆண்டுவரை வாழ்ந்த மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் காலத்தில் ஏட்டில் எழுதும் பழக்கம் பரவலாயிருந்தது என்பது தெரியவருகிறது. ஒரே மாதிரியாக அமைந்த வெற்றேட்டுச் சுவடிகளில் நூல்களை எழுதிவைத்துக் கொள்வதில் பிள்ளையவர்கள் பெருவிருப்புடைய

வராயிருந்தனராம். மகாவித்துவான் அவர்கள் கவி பாடியபோது மாணவர்கள் அதனைக் கேட்டு ஓலையில் எழுதிய நிகழ்ச்சிகள் அவர்தம் சரித்திரத்தில் காணப்படுகின்றன. பழைய நூல்களை ஏடுகளிலிருந்து காகிதத்தில் பெயர்த்து எழுதும் நிலையும் சென்ற நூற்றாண்டுப் புலவர்களிடையே புகுந்துவிட்டது. இதற்கு முக்கிய காரணம் ஏட்டிலிருந்து பழைய நூல்களை அச்சுக்குக் கொண்டுவர அறிஞர் பலரும் முயன்றமைதான்.

### பதிப்பாசிரியரிடம் வந்த சுவடிகள்

அச்சு நூல்கள் 16ஆம் நூற்றாண்டு முதலாகத் தமிழகத்தில் ஏற்பட்டபோதிலும் பண்டைத் தமிழ் இலக்கண இலக்கிய காவிய நூல்கள் அச்சுருவம் பெறத்தொடங்கியது 19ஆம் நூற்றாண்டில் தான். ஓரிரு நூல்களை அச்சிட்டாரும் பற்பல நூல்களை அச்சிட்டாருமாகப் பலர் பதிப்புப் பணியில் ஈடுபட்டு வரலாயினர். இவர்களுள் சென்னைக் கல்விச் சங்கப் புலவர் சிறப்பாகக் குறிப்பிடத் தக்கவர்.

பற்பல நூல்களை அச்சிட்ட பதிப்பாசிரியர்களுள் ஆறுமுக நாவலர், களத்தூர் வேதகிரி முதலியார், இராமாநுச கவிராயர், இராசகோபாலப் பிள்ளை, திருமயிலை சண்முகம் பிள்ளை, சி. வை. தாமோதரம் பிள்ளை, சிவன் பிள்ளை, டாக்டர் உ. வே. சாமிநாதையர், மகாவித்துவான் ரா. இராகவையங்கார், கா. நமச்சிவாய முதலியார், பேராசிரியர் எஸ். வையாபுரிப் பிள்ளை முதலியோர் குறிப்பிடத்தக்கவர் ஆவர். இவர்கள் எல்லாரும் பற்பல ஓலைச் சுவடிகளைத் தொகுத்துவைத்துப் போற்றுவாராயினர். 1956இல் மறைந்த பேராசிரியர் வையாபுரிப் பிள்ளையவர்கள் 336 சுவடிகளைச் சேர்த்து வைத்திருந்தனரென்றால் அவருக்கு முற்பட்டோராகிய ஏனையோர் எத்தனையோ சுவடிகளைச் சேர்த்து வைத்திருக்கவேண்டும் அன்றோ? பேராசிரியர் பிள்ளையவர்கள் தொகுத்த சுவடிகள் இப்பொழுது கல்கத்தாத் தேசிய நூலகத்தில் பாதுகாப்பாக வைக்கப்பட்டுள்ளன. டாக்டர் சாமிநாதையர் தேடித் தொகுத்த ஆயிரக்கணக்கான சுவடிகளை அவர் பெயரால் சென்னையில் இயங்கும் நூலகத்தில் வைத்துப்போற்றி வருகிறார்கள். ஏனையோர்

தொகுத்த சுவடிகளின் கதிஎன்ன? அவர்கள் காலத்திற்குப் பின் சிதறுண்டு போயிருக்கும். அருமையறியாமல் அழிய விட்டவரும் பலரே.

### தனியார் பெரும் தொகுப்பு

யாழ்ப்பாணம் சுவாமிநாத பண்டிதர் தேவாரம் அடங்கல் முறையைத் தலமுறைப்படி அமைத்து அச்சிட்டவராவர். இவர் சென்னையில் ஜார்ஜ்டவுன் பகுதியில் தாம் வாழ்ந்திருந்த வீட்டில் ஏராளமான சுவடிகளைத் தொகுத்து வைத்திருந்தாராம். இவர் தம் தொகுப்பைப் பேராசிரியர் வையாபுரிப் பிள்ளையவர்கள் பார்த்தமை பற்றித் தெரிவித்ததுண்டு. பண்டிதர் காலத்திற்குப்பின் அச் சுவடிகள் அழிந்துபட்டமைபற்றிப் பேராசிரியர் சொல்லிச் சொல்லி வருந்தினர். சுவாமிநாத பண்டிதரைப்போல எத்தனையோ பண்டிதர்களிடமிருந்த சுவடிகளும் காலப்போக்கில் சிதைவுற்றுப் போயின என்பதும் எண்ணியெண்ணி இரங்கத்தக்கதாகும்.

### ஏடுகளின் சிதைவு

ஏட்டுச் சுவடிகளின்வழிப் படிக்கும் நிலை மாறியபோதே அவற்றின் சிதைவிற்கும் அழிவிற்கும் வித்திட்டாயிற்று. போற்று வாரின்றி மூலை முடுக்குகளில் பெட்டி பேழைகளில் வீட்டுப் பரண்களில் எல்லாம் கிடந்து சுவடிகள் பூச்சி புழுக்களுக்கும் கறை யானுக்கும் இரையாயின. சுவடிகளின் அருமையறியாத மக்கள் அவற்றை நீருக்கும் நெருப்புக்கும் இரையாக்கி மகிழ்ந்தனர். இத்தகைய இன்னல்களையெல்லாம் தாண்டி இந்நாளிலும் சுவடிகள் அங்கங்கே இருந்துவருவது வியப்புத்தான்.

### வெளிநாடுகளில் தமிழ்ச் சுவடிகள்

நம் நாட்டிற்கு முந்தைய நூற்றாண்டுகளில் வந்த மேலை நாட்டினர் பலரும் தத்தமக்குக் கிடைத்த பல தமிழ்ச் சுவடிகளைத் தத்தம் நாடுகளுக்கு எடுத்துச் சென்றனர். இவ்வாறு பற்பல காலங்களில் சென்றவை ஐரோப்பிய நாடுகளில் உள்ள நூலகங்கள்

பலவற்றில் இடம்பெற்றுள்ளன. குறுந்தொகைப் பிரதியின் நுண் படச்சுருள் அண்மையில் பிரிட்டிஷ் அருங்காட்சியகத்திலிருந்து தமிழ்ப் பல்கலைக்கழக ஓலைச்சுவடித் துறைக்காகப் பெறப்பட்டது. இலங்கை, மலேசியா முதலிய கீழை நாடுகளிலும் தமிழ்ச் சுவடிகள் உள்ளன. மேலைநாட்டு, கீழைநாட்டு நூலகங்கள் மற்றும் நிறுவனங்களில் தேடி ஆராய்ந்தால் நம் நாட்டில் காணப்பெறாது அழிந்துபட்ட சுவடிகூடக் கிடைப்பதற்கு வாய்ப்புண்டு.

சுவடிகள் விரைவில் மறைந்த காட்சி

ஒரு சமயம் பார்த்த சுவடிகள் பிறிதொரு சமயம் காணாமற் போனதும் உண்டு. இத்தகைய அனுபவங்கள பலவற்றை டாக்டர் சாமிநாதையர் அவர்கள் தம் 'என் சரித்திர'த்தில் குறிப்பிட்டுள்ளார். ஒருசமயம் திருவாவடுதுறை மடத்தில் வளையாபதிச் சுவடியைப் பார்த்தார்களாம். பின்னொருகால் சென்றபோது அந்தச் சுவடி குறித்த இடத்தில் இல்லையாம். இதுகுறித்து டாக்டர் ஐயர் அவர்கள் எழுதியுள்ள செய்தி மிகவும் உருக்கமாகவுள்ளது.

''சீவகசிந்தாமணியோடு சேர்ந்து ஐம்பெருங்காப்பியங் களென்று வழங்குபவை சிலப்பதிகாரம், மணிமேகலை, வளை யாபதி, குண்டலகேசி என்பன. இவற்றுள் சிலப்பதிகாரம் மணிமேகலை என்னும் இரண்டு நூல்களின் ஏட்டுப்பிரதிகள் என்னிடம் இருந்தன. வளையாபதி, குண்டலகேசி என்னும் இரண்டும் கிடைக்கவில்லை. பிள்ளையவர்கள் இருந்த காலத்தில் திருவாவடுதுறை மடத்துப் புத்தகசாலையில் வளை யாபதி ஏட்டுச்சுவடியை நான் பார்த்திருக்கிறேன், அந்தக் காலத்தில் அத்தகைய பழைய நூல்களில் எனக்குப் பற்று உண்டாகவில்லை. அதனால் அந்நூலை எடுத்துப் படிக்கவோ பாடங் கேட்கவோ சந்தர்ப்பம் நேரவில்லை. பழைய நூல்களை ஆராய வேண்டுமென்ற மனநிலை என்பால் உண்டான பிறகு தேடிப்பார்த்தபோது அந்தச் சுவடி மடத்துப் புத்தகசாலையில் கிடைக்கவில்லை. தமிழ்நாடு முழுவதும் தேடியும் பெற்றிலேன். எவ்வளவோ நூல்கள் அழிந்தொழிந்து போயினவென்று தெரிந்து அவற்றிற்காக வருத்தமடைவது

என் இயல்பு. ''கண்ணினால் பார்த்த சுவடி கைக்கெட்டாமல் போயிற்றே'' என்ற துயரமே மிக அதிகமாக வருத்தியது. 'கண்ணிலான் பெற்றிழந்தான் எனவுழந்தான் கடுந்துயரம்' என்று கம்பர் குறிக்கும் துயருக்குத்தான் அதனை ஒப்பிட வேண்டும்.''

இச்செய்தியைப் படிப்பவரும் கேட்பவருமாகிய தமிழன்பர் களுக்கும் டாக்டர் ஐயரவர்கள் அடைந்த மனத்துயரம் நிச்சயம் ஏற்படும்.

பிங்கல நிகண்டினை முதன் முதல் 1890இல் அச்சிட்டு வெளிப்படுத்திய வீராட்சிமங்கலம் தி. சிவன்பிள்ளையவர்கள் இனித் தாம் பதிப்பிக்க இருக்கும் நூல்களாக வளையாபதி, பன்னிருபடலம், இசை மரபு, பரதசூடாமணி, இசை நுணுக்கம் என்பனவற்றைக் குறிப்பிட்டுள்ளார். 14ஆம் நூற்றாண்டில் திரட்டப்பட்டதாகக் கருதப்படும் புறத்திரட்டில் 66 வளையாபதிச் செய்யுட்கள் சேர்ந் துள்ளன. இசை பற்றிக் குறித்தவை அடியார்க்கு நல்லார் முதலிய உரைகாரர் மேற்கோளாக எடுத்தாண்டவை. புறப்பொருள் வெண் பாமாலைக்கு மூலமான முதல்நூல் பன்னிருபடலம். இத்தகைய அரிய நூல்கள், 1890ஆம் ஆண்டு பதிப்பாசிரியர் சிவன்பிள்ளை யவர்களிடமிருந்த நூல்கள் இன்றுவரை நமக்குக் கிட்டாதே போய் விட்டன. எங்காவது ஒளிந்திருந்து நமக்கு இன்று கிட்டினால் பெரும்பேறே.

**தகடூர் யாத்திரை**

சி. வை. தாமோதரம் பிள்ளையவர்கள் தொல்காப்பிய எழுத்ததிகார நச்சினார்க்கினியர் உரைப்பதிப்பின் (1891) பதிப் புரையில், ''தகடூர் யாத்திரை முதலியன விரைவில் வெளிவரும்'' என்று குறிப்பிட்டுள்ளார். தகடூர் யாத்திரை என்பது அதிய மானுக்குரிய தகடூரின்மேல் சேரமான் படையெடுத்துச் சென்ற வரலாற்றைக் கூறுவது. இந்நூலினைக் குறித்துப் பேராசிரியரும் நச்சினார்க்கினியரும் தாம் எழுதிய தொல்காப்பிய உரையில் சுட்டி யுள்ளனர், புறத்திரட்டில் இந்நூற் செய்யுட்கள் 44 காணப்

படுகின்றன. பதிப்புமேதை தாமோதரம் பிள்ளையவர்களிடமிருந்த இந்நூற் பிரதி அவர்தம் காலத்திற்குப்பின் என்னாயினதோ ? நூல் முழுமையும் நமக்கு இதுவரை கிட்டவே இல்லை.

திருநெல்வேலி கவிராஜ ஈசுவரமூர்த்தியா பிள்ளையவர்கள் வீட்டில் டாக்டர் ஐயர் அவர்கள் ஏடுகளைப் பரிசோதித்தபோது தகடூர் யாத்திரைப் பிரதி நாங்குனேரியில் ஒருவருக்குக் கொடுக்கப் பட்டதாக ஒரு குறிப்பினைக் கண்டார்கள். இப்பழஞ் சுவடியைத் தேடி நாங்குனேரிக்கும் சென்றார்கள்; சுவடிதான் கிட்டவில்லை.

> ''பிற்காலத்தில் நாங்குனேரியில் நான்குமுறை ஏடு தேடியபோதும் தகடூர் யாத்திரை கிடைக்கவேயில்லை. பழைய நூல்கள் பல இந்த உலகத்தைவிட்டு யாத்திரை செய்துவிட்ட தைப்போல அந்த அருமையான நூலும் போய்விட்டது என்று தான் நினைக்கிறேன்''

என்று டாக்டர் ஐயர் அவர்கள் தம் 'என் சரித்திரத்'தில் குறிப்பிட்டுள்ளார்.

சென்ற நூற்றாண்டில் பதிப்புப்பணியில் ஈடுபட்டிருந்த அறிஞர்களிடமிருந்த நூல்கள்கூட இன்று கிட்டாத நிலையாயிற்று. அவர்கள் காலத்திற்குப்பின் அச் சுவடிகள் எங்கெங்கு கைம்மாறிப் போயினவோ !

## நாககுமார காவியம்

நாககுமார காவியம் என்பதை ஐஞ்சிறு காப்பியத்துள் ஒன்றாகத் தாமோதரம் பிள்ளையவர்கள் குறிப்பிட்டுள்ளார். இந் நூலுக்குச் சில ஆண்டுகளுக்குமுன் (1973) ஒரு கையெழுத்துப் பிரதி தச்சாம்பாடி சின்னசாமி நயினார் அவர்களிடமிருந்து எனக்குக் கிடைத்தது. இதனை ஆதாரமாக வைத்துச் சென்னைப் பல்கலைக் கழக வெளியீடாக நான் பதிப்பித்தேன். ஆயினும் இதற்குரிய மூலச் சுவடி இன்னும் கிட்டியபாடில்லை.

### சுவடி ஓர் அருங்காட்சியகப் பொருள்

இத்தகு சூழ்நிலைகளில் சுவடி என்பது எப்படியிருக்கும் என்று பாராதார் இன்றைய தலைமுறையில் பலராவர். பார்த்தாலும் எடுத்து வாசிக்க அறிந்தவர் தொகை மிகமிகக் குறைவு. ஆகவே இந்நாளில் அங்கங்கே கிட்டும் சுவடிகளைப் பொது நிறுவனங்களில் சேர்த்துவைத்துப் பாதுகாப்பது மிகமிக இன்றியமையாததாகும்.

### ஓலைச்சுவடித் துறை

தமிழ்ப் பல்கலைக்கழகம் ஒன்றில்தான் சுவடிகளின் ஆராய்ச்சிக்காக ஒரு துறை தனியாக ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. இப் பல்கலைக்கழகம் தோன்றி இரண்டாண்டுகளுக்குள் 800 சுவடி களுக்குமேல் தேடித் தொகுக்கப்பட்டுள்ளன. ஏடுகளை நவீன விஞ்ஞான முறையில் பூச்சி, புழு அண்டாவண்ணம் தக்க பாதுகாப்பு அளிக்கப்பட்டுவருகிறது. சுவடிகளைத் தேடித் தொகுத்துக் காப்பது ஒருபாலாகச் சுவடிகளிலிருந்து படியெடுத்து அச்சுக்குக் கொண்டு வந்து வெளியிடும் பணியும் நடைபெற்று வருகிறது. அரிய நூற் சுவடிகளை நுண்படச் சுருளாக எடுத்துவைத்துப் போற்றும் வசதியும் இங்குள்ளது. மேலும் மேலும் சுவடிகளைத் தேடித் தொகுக்கும் பணியிலும் இப் பல்கலைக்கழகம் ஈடுபட்டு வருகிறது.

### தாமோதரம் பிள்ளை அறைகூவல்

சென்ற நூற்றாண்டில் தொல்காப்பியம், கலித்தொகை, வீர சோழியம், இறையனாரகப்பொருள் முதலிய பல நூல்களை ஏட்டுச் சுவடிகளை ஆராய்ந்து அச்சில் பதிப்பித்தவர் யாழ்ப்பாணம் சி. வை. தாமோதரம் பிள்ளை அவர்களாவர். சுவடிகளைத் தொகுத்து ஆராய்ந்த இவர் சுவடிகளின் நிலைமைபற்றி உரைப்பவை முக்கிய மாகக் கவனிக்கத்தக்கன. இவர் தாம் 1887ஆம் ஆண்டு வெளி யிட்ட கலித்தொகையின் பதிப்புரையில் நாட்டில் உள்ள ஓலைச் சுவடிகளின் அவலநிலையை நன்கு எடுத்துக்காட்டியுள்ளார். சுவடி களை விரைந்து பாதுகாக்கவேண்டும் என்று தமிழ் மக்களை அறை கூவி அழைத்து இவர் உரைத்த உரைகளை இங்கே காண்போம் :

''ஏடு எடுக்கும்போது ஓரஞ் சொரிகிறது. கட்டு அவிழ்க்கும்போது இதழ் முரிகிறது. ஒற்றைப் புரட்டும்போது துண்டு துண்டாய்ப் பறக்கிறது. இனி எழுத்துக்களோவென்றால், வாலுந் தலையுமின்றி நாலுபுறமும் பாணக் கலப்பை மறுத்து மறுத்து உழுது கிடக்கின்றது.''

''பழைய சுவடிகள் யாவுங் கிலமாய் ஒவ்வொன்றாய் அழிந்துபோகின்றன. புது ஏடுகள் சேர்த்து அவற்றை எழுதி வைப்பாரும் இலர். துரைத்தனத்தாருக்கு அதின்மேல் இலட்சியம் இல்லை. சரஸ்வதியைத் தம்பால் வகிக்கப்பெற்ற வித்வான்களை அவள் மாமி எட்டியும் பார்க்கின்றாளில்லை. திருவுடையீர்! நுங் கருணை இந்நாட் தவறினால் பின்பு தவம் புரிந்தாலும் ஒருதரம் அழிந்த தமிழ் நூற்களை மீட்டல் அரிது. யானை வாய்ப்பட்ட விளம்பழத்தைப் பின் இலண்டத்துள் எடுத்துமென்? ஓடன்றோ கிட்டுவது? காலத்தின் வாய்ப்பட்ட ஏடுகளைப் பின் தேடியெடுப்பினும் கம்பையும் நாராசமும்தான் மீரும்.''

* * *

''சங்கம் மரீஇய நூல்களுட் சில இப்போதுதானும் கிடைப்பது சமுசயம்............எத்தனையோ திவ்ய மதுர கிரந்தங்கள் காலாந்தரத்தில் ஒன்றன்பின் ஒன்றாய் அழிகின்றன சீமான்களே! இவ்வாறு இறந்தொழியும் நூல்களில் உங்களுக்குச் சற்றாவது கிருபை பிறக்கவில்லையா! ஆச்சரியம்! ஆச்சரியம்! அயலான் அழியக் காண்கிலும் மனந்தளம்புகின்றதே! தமிழ் மாது நும் தாயல்லவா? அவள் அழிய நமக்கென்னென்று வாளா இருக்கின்றீர்களா! தேசாபிமானம், மதாபிமானம், பாஷாபிமானமென்று இவை இல்லாதார் பெருமையும் பெருமையாமா? இதனைத் தயை கூர்ந்து சிந்திப்பீர்களாக.''

பிள்ளையவர்களின் உருக்கமான உரைகள் நமது உள்ளத்தைக் கிளர்ந்தெழச்செய்யும் பேராற்றல் பெற்றவை. இத்தகு அறைகூவல் வெளிப்பட்டுக் கிட்டத்தட்ட ஒரு நூறு ஆண்டுகள் நெருங்கிவிட்டன. இந்நாளில் சுவடிகளின் நிலைமையைக் கேட்கவா வேண்டும்?

அவைகள் புதைபொருள்போல எங்கெங்கோ அடைபட்டுக் கிடக்கின்றன. அவையெல்லாம் இயற்கைக் கோளாறுகளால் பழுதுபடு முன்னம் தேடிக் காபபது அறிஞர் கடமை. தமிழன்பர்கள் தம்மிடமுள்ள சுவடிகளையும் தாம் பிற இடங்களில் காணநேரும் சுவடிகளையும் தமிழ்ப் பல்கலைக் கழகத்திற்கு நன்கொடையாக வழங்கி அவையெல்லாம் அழியாமல் நிலைபெறத் துணைபுரிவார்களாக.

# 26. சங்க காலத்தில் கலைவளம்

[அறிஞர் மெ. சுந்தரம்]

ஓவியம் :

சங்கத்தமிழர் ஓவியக்கலையின் உயர்வினை நன்கு அறிந்தவர்கள். பலவகைப்படக் கூரிதாக உணர்ந்த தொழில்களையெல்லாம் உவமம்காட்டி அது எந்தச் செய்தியாயிருந்தாலும் அந்தச் செய்தி முழுவதும் நன்கு விளங்கும்படி எழுதும் கூரிய அறிவினையுடையவர்கள் சித்திரக்காரர்கள் (மதுரைக். 516—518). ஓவியம் எழுதுபவரைக் 'கண்ணுள் வினைஞர்' என்னும் பெயரால் குறித்தனர் (மதுரைக். 518).

"ஓவத்தன்ன இடனுடை வரைப்பு" (புறம். 251)

சித்திரத்தைப் போல வீடு இருக்கிறது என்று சொல்வதை அறிக. சித்திரம் வீடு போல் இருக்கிறது என்ற நிலை போய், சித்திரத்தைப் போல இருக்கிறது என்று சொல்கிற நிலை வரவேண்டும் என்றால் ஓவியத்தில் நன்கு பழகியிருந்தால்தானே இயலும்.

பெண்டிர் தம் உடம்பில் கரும்பும் கொடியும் எழுதும் பழக்கம் உண்டு என்று அறிகிறோம் (நற். 39, 298).[1]

செம்பினால் பண்ணியது போன்ற தொழிற் சிறப்புடைய சுவரிலே வடிவ அழகு பொருந்திய பல பூக்களையுடைய கொடியை எழுதி இருக்கிறார்கள் என்று அரண்மனைச் சுவரில் சித்திரம் வரைந்தபடியை நக்கீரர் காட்டுவர் (நெடுநல். 113).

---

1. "கரும்புடைப் பணைத்தோள்" (நற். 298 : 7)
"நின் கரும்புடைத் தோள்" (நற் 39 : 11)

கோயில் சுவர்களில் பலவிதமான சித்திரங்களை எழுதி அழகு படுத்துதல் உண்டு. (மதுரை. 485)

புகார் நகர மாளிகைச் சுவர்களில் ஓவியம் வரைந்திருந்தனர் என்று பட்டினப்பாலை (49-50) சொல்கிறது.

இங்ஙனம் அமைந்த ஓவியக்கலை வேறு வகையிலும்கூடப் பயன்பட்டுள்ளது என்பதை அறியலாம்.

சிறுவர்கள் விளையாடுவதற்காகத் தடித்த தாளிலோ மெல்லிய தகரத்தாலோ, தோலாலோ விளையாட்டுப் பறை செய்து தருவார்கள். அந்தப் பறையில் அடிக்கின்ற இடத்தில் (தோல், தாள், தகரத்தில்) பலவிதமான சித்திரங்களை எழுதுகின்ற பழக்கம் உண்டு என்று அறிகிறோம். அவ்வாறு எழுதப்படும் சித்திரங்களில் பெரும்பாலும் குருவியைத்தான் எழுதுவார்கள் என்று சங்க நூல் மூலமாக அறிந்துகொள்ளலாம் (நற். 58).[2]

இன்னும் கஜலக்ஷ்மியின் உருவத்தையும் ஓவியமாகப் படைத்துக் காட்டியுள்ளார் கபிலர் என்னும் புலவர்.

இரண்டு பக்கத்திலும் இரண்டு யானைகள் நின்றுகொண்டு பூவையும் நீரையும் மேலே சொரிகின்றன. அவற்றின் இடையே தாமரை மலர் மேல் திருமகள் வீற்றிருக்கிறாள் என்பதைக் கலித்தொகையில் குறிஞ்சிக்கலி காட்டுகிறது (கலி. 44, 5-7).[3]

கட்டிலின் மேல் உள்ள விதானத்துணியில் ஓவியம் எழுதுதற்காக வண்ணமெழுகினைப் பூசுவார்கள். அவ் விதானத்தில்

---

2. ''பெருமுது செல்வர் பொன்னுடைப் புதல்வர்
சிறுதோட் கோத்த செவ்வரிப் பறையின்
கண்ணகத் தெழுதிய குரீஇப் போல'' (நற். 58 : 1-3)

3. ''வரிநுதல் எழில்வேழம் பூநீர் மேற் சொரிதரத்
திருமலர் தாமரை மலர் அங்கண் வீறெய்தித்
திருநயந் திருந்தன்ன'' (கலி. 44 : 5-7)

சந்திரன் உரோகிணியோடு கூடியிருப்பதாகிய படம் வரையப்பெற்றிருக்கும். (நெடுநல் 159 - 163).

இயற்கை ஓவியங்கள், கற்பனை ஓவியங்கள் என்னும் இரு வகை ஓவியங்களையும் படைத்துக் காட்டுகின்ற ஆற்றல் பழந்தமிழ் நாட்டில் இருந்திருக்கிறது என்பதை இந்தக் குறிப்புகள் அறிவிக்க வில்லையா ?

**சிற்பம் :**

சங்ககால அரசர்களின் கோட்டைகள் சிறப்புற அமைக்கப் பட்டிருந்தன என்பதனைச் சங்க நூல்கள்மூலம் நிரம்ப அறியலாம். கோட்டை மதிலின்கண் பல்வகைப் பொறிகள் நிரம்பிய வேலைப்பாடுடையனவாகப் பல்வகைப் பறவைகள் விலங்குகள் ஆகியவற்றின் உருவத்தில் அமைக்கப்பட்டிருந்தன என்பதையும் நாம் அறிகிறோம்.

தெய்வ உருவங்களையும், தெய்வத்தன்மை படைத்ததெனப் பிறரால் மதிக்கத்தக்க உருவங்களையும் பழந்தமிழர் படைத்தனர் (நற். 185, 192).[4]

அத்தகைய பாவைகளில் இயந்திரங்களையும் அமைத்திருந் தார்கள் என்பதனையும் சுட்டுகின்ற பகுதிகள் வருகின்றன (அகம். 98).

"வல்லோன் பொறி அமைபாவையின் தூங்கல்"

மண்ணினாற் செய்து வண்ணம் தீட்டி அமைக்கின்ற பொம்மை களையும் பார்க்கின்றோம் சங்க நூல்களில்.

4. "தேனுடை நெடுவரைத் தெய்வம் எழுதிய
வினைமாண் பாவை அன்னோள்" (நற். 185 : 10-11)

"கொல்லிக் குடவரைப்
பூதம் புணர்த்த புதியல் பாவை
விரிகதிர் இளவெயில் தோன்றியன்ன"
(நற். 192 : 8-10)

"பெயல் உற நெகிழ்ந்து வெயில் உறச்சாய்
வினை அழி பாவை" (அகம். 157 : 12—13)

என்பது இதையே காட்டும். மழையால் நெகிழ்தலும், வெயிலால் அழிதலும் மண்ணும் வண்ணமும் கொண்டு ஆக்கப்பட்டவைகட் கன்றோ. கற்கோயில்களின் நிலைக் கோபுரங்கள் செங்கல்லாற் கட்டப்படுதலும், அங்கே சுதை மண்ணாலும் வண்ணத்தாலும் உருவாக்கப்பட்ட பொம்மைகள் வைக்கப்படுதலும் பழங்காலத்தில் வளர்ச்சி பெற்றிருந்த கலை என்பது அறிக.

**சோழர், பல்லவர் காலச் சிற்பக்கலை :**

பலவிதமான அணிகலன்கள் சிற்பக்கலையின் உயர்வை நமக்கு எடுத்துக்காட்டுகின்றன.

"ஒள்ளழல் புரிந்த தாமரை" (புறம். 11 : 17-18)

"தவளை வாய பொலம்செய் கிண்கிணி" (குறுந். 148)

என வருவனவற்றைக் காண்க.

சிறுவர் விளையாட்டுப் பொருள்களும் செய்யப்பட்டது என் பதனை,

"தத்துநீர் வரைப்பின் கிலுகிலி ஆடும்" (சிறுபாண். 61)

என்னும் வரி கூறுகிறது.

கல், மண், வண்ணம், மரம், பொன் முதலிய உலோகங்கள், பிற ஓலை முதலிய பொருள்கள் அனைத்தாலும் பல நல்ல அழகுடைய கவர்ச்சி தரும் உருவமுடைய பொருள்களைப் படைக்கும் ஆற்றல் பழந்தமிழ் நாட்டில் விரிந்து வளர்ந்த ஒன்று.

**வான நூல் :**

வானநூற் கலையில் தமிழரது தேர்ச்சி சொல்லவொண்ணா அளவினது. இதைப்பற்றிய குறிப்புகளில் வான மண்டிலத்தைப்

யற்றிய பொதுவான செய்திகளே ஆராய்ச்சித் திறனை விளக்கு வன.

ஞாயிற்றினது செலவு, ஞாயிற்றின் ஈர்ப்புச்சக்தி, அவ் ஈர்ப்புச் சக்திக்குட்பட்ட ஓர் வட்டம் (கோளும் நாளும் அடங்கியது) என்று சொல்கிறபொழுது வானநூல் அறிவில் தமிழர் சிறந்து விளங்கினர் (புறம். 30).[5]

ஞாலம் என்னும் சொல் பூமி தொங்குவது (ஞாலுவது) என்னும் பொருள்பற்றி எழுந்தது.

"ஞாலங் காக்கும் கால முன்பு"

என்பது புறநானூறு (56).

வடக்குத் திசையைக் குறிக்க ஊசி என்னும் சொல்லைப் பயன் படுத்தினர் தமிழர். உலக உருண்டையின் முனையாக வட துருவத்தை நோக்கியே காந்த ஊசி நிற்கிறது அன்றோ ; அதனால் ஊசியை வடக்காக்கினர்.

கிழக்குத் திசையைப் பாசி என்னும் சொல் குறிப்பிடுகிறது. தமிழ்நாட்டின் கிழக்கே பசுமை பரவிய கடல் இருப்பதும், பயிர் களுக்கு வளர்ச்சியைத் தரும் கதிரவன் உதிக்கும் திசை கீழ்த்திசையா வதும் ஆதலின்.

"பாசிச் செல்லாது ஊசி முன்னது" (புறம். 229)

பொருள்களுக்குப் பெயர் இடுவதற்குக் காரணம் காணுவது போலவே கோளுக்கும், நாளுக்கும் அவைபற்றிய ஏனைய பொருள் களுக்கும் பெயரிட்டுள்ளமை அறிக.

சங்ககாலச் சோதிடக் கலையின் மாட்சியை விளக்கும் சான்றுகள் பல.

---

5. "செஞ்ஞாயிற்றுக் செலவும் அஞ்ஞாயிற்றுப் பரிப்பும்
பரிப்புச் சூழ்ந்த மண்டிலமும் வளிதிரிதரு திசையும்
வறிது நிலைஇய காயமும்" (புறம். 30 : 1—5)

வையை யாற்றைச் சிறப்பிக்கும் பரிபாடல் 11ஆம் பாட்டு கார்காலத்து மழைபெய்தல் கூறும்வழி அப்பொழுது வான மண்டலத்தே கோள்கள் நின்ற நிலையைச் சுட்டுகிறது. மதியத்தொடு கார்த்திகை என்னும் விண்மீன் நேர் பொருந்தும் நாள் என்று காட்டுவர். கார்த்திகைக்கு எரி என்னும் பெயரும், திருவாதிரைக்குச் சடை என்னும் பெயரும், பரணிக்கு வேழம் எனனும் பெயரும் கூறப் பட்டுள்ளன. இத் தமிழ்ச் சொற்களால் தமிழில் வானநூற்கலை முழுமை பெற்றிருந்தது என்பதை அறிகிறோம்.

ஆவணித் திங்கள் அவிட்ட நாளில் வெள்ளி இடபத்தையும், செவ்வாய் மேடத்தையும், புதன் மிதுனத்தையும், ஆதித்தன் சிங்கத்தையும், வியாழன் மீனத்தையும், சனியும், மதியும், இராகுவும் மகரத்தையும், கேது கடகத்தையும் சேர இராகு மதியினைத் தீண்ட, அகத்தியன் என்னும் மீன் தன்னிடத்தைத் தவிர்ந்து மிதுனத்தைப் பொருந்த கார்காலத்தே சையமலைக்கண் மழை பொழியப் பெருகிவரும் வையைப் புனல்'' என்று கூறுவர் (பரி. 11).[6]

காலம் கணிக்கின்ற முறையினை மேலே கண்டோம். அது போலவே பயன் அறிகின்ற வகையிலும் வானநூலைப் பயன்படுத்தி வெற்றி கண்டவர் தமிழர்.

சேர நாட்டிலே பங்குனி மாதக் கார்த்திகை நாளில் ஒரு நேரம் விண்மீன் ஒன்று பிதிர்ந்து கிளர்ந்து விழுந்தது. அதனைக் கண்டு புலவர் கூடலூர் கிழார் அரசனுக்கு ஏதம் வரும் என்று எண்ணினார். அது உண்மையாயிற்று. ஏழாம் நாள் யானைக்கட் சேய் மாந்தரஞ் சேரலிரும்பொறை இறந்தனன் என்று புறநானூறு (229) கூறுகிறது.

விண்மீன் விழும்பொழுது வானவீதியின் அமைப்பும் பிறவும், நாள்கள் நின்ற நிலையும் பிறவும் வியப்புற அப் பாட்லில் பேசப் படுகின்றன. பங்குனி மாதத்தில் நட்சத்திரம் வீழ்தல் அரசர்க்கு அழிவாகும் என்னும் கோள்விதி ஏழு நாட்களில் பயன்பட்டது குறிப்பிடப்படுகிறது.

---

6. ''விரிகதிர் மதிய மொடு'' (பரி 11)

வானத்திலே காணுகின்ற விண்மீன்களின் தோற்றத்தைக் கண்டு அதற்குப் பெயர் வைத்துள்ளனர். பரிபாடல் 11ஆம் பாட்டில் திருவாதிரைக்குச் சடை என்னும் பெயர் சொல்லப் பட்டுள்ளது. திருவாதிரை என்னும் விண்மீன் நடனமாடும் சிவனது (நடராஜா) தோற்றத்தில் இருக்கும். அதனால் திருவாதிரையைச் சிவபிரானது நாளாகக் குறிப்பது வழக்கம் (கலி. 150: 20) சிவ பிரான் சடையன் ஆதலின் ஆதிரையைச் சடை என்றார்கள் (புறம். 56).

கார்த்திகை விளக்குப்போல ஒளிவிடும் விண்மீன் ஆதலின் 'எரி' என்னும் பெயரால் அழைத்தனர்.

'அனுவி விண்மீன் ஆறு விண்மீன்களின் கூட்டத்தால் முடப்பனை போலும் வடிவையுடையது. அதனால் 'அனுடம்' என்று தமிழர் பெயர் வைக்காது 'முடப்பனை' என்றே குறித்தனர். குளம் போன்ற வடிவம் உடையது புனர்பூசம். அதனால் அதனைக் கயம், கடைக்குளம் என்னும் பேயரால் அழைத்தனர் (புறம். 229).

காரணங்கண்டு தமிழ்ச் சொற்களால் கோளும், நாளும், ஒரையும் அழைக்கப்பட்டவற்றை இதனால் அறியலாம்.

இவ்வாறு வானத்தைக் கணித்துக் கூறுகின்றவர்களைக் கணிவன் என்னும் பெயரால் சங்க நூல்களில் அழைக்கிறார்கள். சிறந்த கணிவன் சொல்லியன தவறவே தவறாது என்பது சொல்லப் படுகிறது (கலி 39, 46).[7] அரைகுறைக் கணிவர்கள் சோதிடத்தையே பொய்யாக்கிவிடுவர் அன்றோ.

காலம் கணித்தலும், பயன் கூறலும், வருவன முன்னர் அறிந்து காத்தலும் வானநூற்கலையில் தமிழர் மிக்கிருந்தமையால் பெற்ற பயன்களாகும்.

---

7. ''நெறிஅறி செறிகுறி புரிதிரிபு அறியா அறிவன்''
(கலி. 39, 46)

''கூந்தல் ஆம்பல் முழுநெறி அடைச்சி'' (குறுந். 80)

**ஒப்பனைக் கலை:**

அழகு செய்தல் என்னும் கலையில் தேர்ச்சி பெற்றிருந்தது சங்க காலத்துத் தமிழகம்.

கூந்தலை அழகுபடுத்துவதில் காட்டிய ஆர்வம்தான் எவ்வளவு கூந்தலிலே ஆம்பலின் முழு இதழ்களை அடைத்து வைத்து மணத்தை ஊட்டினார்கள் என்று பார்க்கிறோம் (குறுந். 80).

> ''உடுத்தும் தொடுத்தும் பூண்டும் செரீஇயும்
> தழையணி பொலிந்த ஆயம்'' (குறுந். 295)

என்பதைப் படித்தால் எத்தனைவிதமாக அழகு செய்தார் என்பதை அறியலாம்.

ஒப்பனைக் கலையின் ஒவ்வொரு பிரிவும் தனித்தனியாக ஆராய்ந்து அறியத்தக்கது. இதனை உடை, அணிகள், மலர்கள், வாசனைப் பொருள்கள் என்னும் பிரிவுகளில் விரிவாகக் காண்போம்.

**உடை:**

மரபுக்கும் தொழிலுக்கும் நிலைக்கும் ஏற்ப ஆடைகளை அணிந்தார்கள் என்பதை அறிகிறோம். முனிவர்கள் மரப்பட்டைகளைத் தைத்து ஆடையாக உடுத்திக்கொண்டார்கள். அது 'சீரை' என்னும் பெயர் பெறுகிறது (முருகு. 126).

பார்ப்பார்கள் (சிறந்த உண்மைப் பொருளை எப்பொழுதும் நோக்குகிறவர்கள்) கல்லிலே அடிக்கடி தோய்த்து உடுத்துவர். காவியாடையை உடுத்துவர் என்பது தெரிகிறது (முல்லை. 37). அரசர்கள் அணிந்த ஆடைகளைக் காணும்பொழுது நெய்தல் தொழிலாயினும் அதனையும் கலை என்ற வகையில் செய்த அருமை தமிழருடையது என நினைக்கிறோம்.

"வினை மாண் காழகம்" (கலி. 7; 9)

"கொட்டைக் கரைய பட்டுடை" (பொருநர். 154)

என்பன காண்க.

இந்திரகோபப் பூச்சியைப் போன்ற செந்நிறம் வாய்ந்த சாயம் தோயாத துகிலைக் காண்க.

"கோபத் தன்ன தோயாப் பூந்துகில்" (முருகு. 152)

என்பது காண்க.

புகையை முகந்து வைத்தது போன்ற தூய மெல்லிய ஆடைகள் (முருகு. 128)[8] கண்களால் பார்க்கமுடியாத (பார்த்தால் எதிரில் ஒரு பொருள் இருப்பது போலவே தோற்றாத) பாம்புத்தோலை உரித்தாற் போன்ற மெல்லிய ஆடைகளை (பொருநர். 82-83) நெய்ததைப் பற்றிப் படிக்கின்றபொழுது நெய்தல் தொழில் அல்ல; கலை என்று சொல்லத் தூண்டுகிறது.

பட்டாடை 'நூலாக்கலிங்கம்' என்னும் பெயரால் அழைக்கப் பெறுகிறது (பதிற். 12 : 21). அரசர்கள் பட்டாடை இடையில் அணிதலேயன்றித் தோளிலும் ஓர் ஆடையணிந்து கொண்டிருப்பர். அவ்வாடை கீழ்வரை தொங்கிக்கொண்டிருக்கும் (நெடுநல். 181). அரசர்கள் அணிந்த பட்டாடைகளின் ஓரங்களில் குஞ்சங்கள் கட்டப் பெற்றிருக்கும் (பொருந. 153).

இந்த ஆடைகள் அணியும்பொழுது விறைப்பாக இருத்தற் பொருட்டுச் சோற்றுக் கஞ்சியிட்டுச் சலவை செய்யப்பட்டது. 'புலத்தி' எனப்படும் இழிகுலமகள் காடியாகிய பசையூட்டிச் சிறந்த ஆடைகளைச் சலவை செய்தாள் என்று அறிகிறோம்.

---

8. "புகை முகந்தன்ன மாசுஇல் தூஉடை" (முருகு. 128)

"நோக்கு நுழைகல்லா நுண்மைய பூக்கனிந்து
அரவு உரியன்ன அறுவை" (பொருநர். 82-83)

(மதுரைக். 721; நெடுநல். 134; குறுந். 330; அகம். 387; நற். 90; சீவக. 71; பெருங். 1-549).

அதிகாரிகளும்கூட அவர்கள் நிலைக்கேற்ற ஆடை அணிந்தனர். காவிதிப்பட்டம் பெற்றவர்கள் தம் நிலையில் மென்துகிலால் சுற்றப்பட்ட தலைப்பாகை (சீக்கியர்கள் அணிவதுபோல அணிந்தனர் (மதுரைக். 493-494). மெய்காப்பாளர் சட்டையிட்டுத் திரிந்தனர் (முல்லை. 53-54). காவலர்களாகிய மிலேச்சர்கள் முன்னும் பின்னும் தொங்கும்படி விட்ட துகிலினை யுடையவராய் தமக்கு வேண்டியவிடத்தே திரிந்தனர் (நெடுநல். 34-35).

அரசர் அணியும் ஆடையனைய ஆடைகளைச் செல்வர்களும் உடுத்தனர். அவ்வாடைகளில் பூத்தொழில் வேலைகள் நிரம்பியிருந்தன (மதுரைக். 431-5). வாளைச் சொருகியிருக்கும் இறுக்கமான உடைகளைப் பண்டங்களைக் கொண்டு விற்கும் வணிகர்கள் பாதுகாப்புக்காக அணிந்தனர் (பெரும். 69-72).

மறவர்கள் நீலநிறம் பொருந்திய கச்சையை அணிந்தார்கள். அவர்கள் ஆடைகள் பூத்தொழில் வேலைப்பாடுகள் உடையனவாய் விளங்கின (புறம். 274). இம்மறவர்கள் செந்நிறம் பொருந்திய ஆடையை உடுத்தினர் எனவும் அதன்மேல் நீலக்கச்சை அணிந்தனர் எனவும் கருதலாம் (நற். 33).

மேலொன்று கீழொன்று என இரண்டு ஆடைகளை உடுத்தியது பற்றிப் புறநானூறு சொல்கிறது. ஆனால் இடையர்கள் ஒரே ஆடையைத்தான் உடுத்தியிருந்தார்கள் என்று தெரிகிறது. (பெரும். 175)

காலத்திற்கேற்ற உடையினை உடுத்தினர் என்பதனையும் அறிகிறோம். கணவனொடு புணரும் மகளிர்கள் பட்டாடைகளை நீக்கி நூலாடைகளையே அணிந்தார்கள் என்பது நோக்கத்தக்கது. (பட்டினப். 106-108) நீராடுவதற்கென்றே தனித்த ஓர் உடை உண்டு என்பதும் அறியப்படுகிறது. புட்டகத்தில் நன்கு இறுக்கமாகப் பொருந்தக்கூடிய ஆடையினை உடுத்தி மகளிர் நீராடற்குச் சென்றனர் என்பது அறிக (பரி. 12 : 17).

தழை உடைகளும்கூட அழகுடைகளென அணியப்பெற்று வந்தன என்பது அறியத்தக்கது (நற். 123, 204, 390; அகநா. 20).

ஆடைகள் நறுமணத்துடன் இருக்கவேண்டி நறும்புகைகளை ஆடைக்கு ஊட்டும் பழக்கத்தை உடையவர்களாயிருந்தனர் (நற் 380; மதுரைக். 554).

அணிகள் :

ஆடவர்கள் காலில் தோலால் ஆகிய செருப்பினை அணிந்திருந்தனர். இந்தச் செருப்பு என்னும் சொல் பழங்காலத்தில் நிறையக் கையாளப்பட்டுள்ளது. 'அடிபுதை அரணம்' என்றும் இதைக் குறித்துள்ளனர் (பெரும் 169; புறம். 257). செருப்பு மலை என்ற மலையைக் குறிப்பிட்டபொழுது ''மிதியாச் செருப்பு'' என்று பதிற்றுப்பத்து கூறுகிறது.

காடுகளில் திரியும் இடையர்கள் (பெரும். 169), கள்வர்கள், மறவர்கள் செருப்பணிந்தனர் என்று தெரிகிறது (மதுரைக். 636; பட்டினப். 265).

ஆடவர் காலில் கழலும் மகளிர் காலில் சிலம்பும் அணிகலன்களாயின (குறுந். 7). கழலும் சிலம்பும் பெருவாரியாகச் சங்க நூலில் பேசப்படுகிறது.

அணியப்படுவதால் அழகு செய்வதால் 'அணி' என்றும் (மதுரைக். 722), உடலுடன் இழைவதால் 'இழை' என்றும் (முருகு. 18) கொள்ளுவதால் கலம், கலன் என்றும் (மதுரைக். 322) உடலை உள்ளே அகப்படுத்தி மேல் தான் இருத்தலால் (மோதிரம், வளைபோல) 'பூண்' என்றும் (சிறுபாண். 26) பல பெயர்கள் அணிகலன்களுக்கு வழங்கிவந்துள்ளன.

இடுப்பில் பொன்னாற் செய்யப்பெற்ற பொலங்காசினை மகளிர் அணிவர் (அகம். 269; ஐங் 310). இது மேகலை என்று அழைக்கப்பெறுகிறது. பருமம் என்ற இதுபோன்ற இடை மணியும் உண்டு (முருகு. 145).

குழை, தொடி முதலியன ஆடவரும் மகளிரும் அணியும் அணிகளாகும் இதனுள் குழை என்பது குண்டலமாயின் ஆடவர்க்கும், தோடாயின் மகளிர்க்கும் உரியதாம். இந்த வேறுபாடு கருதாது குழையானது பொதுவாகவே இருபாலார்க்கும் வழங்கப்பட்டதாயினும், முருகாற்றுப்படையுள் முருகன் அணிந்த குழைகள் விண் மீன்களைப் போன்றன என்பதால் சிறியது என்றும்,

"செந்துட் டொண் குழை வண்காது துயல்வர"

என வருவனவற்றால் மகளிர் அணிவது கீழே தொங்கி அசையக் கூடிய வகையில் மிகப் பெரிதாக இருக்கும் என்றும் அறியலாம்.

வளை என்னும் அணி பெண்டிர்க்கே பெரும்பாலும் வருகிறது. ஆடவர்க்குத் தொடியைக் குறிப்பிட்டுள்ளனர். இத்தொடி மகளிக்கும் ஏற்பட்டது அல்ல என்பதும் அறியலாம். தலைக்கண் அணியப்பெறும் முடி அரசர்க்கும் தெய்வங்கட்கும் உரியதெனக் குறிப்பிடப்பெறுகிறது. அம்முடியில் ஐந்து பிரிவுகள் உண்டு என்று தெரிகிறது (முருகு. 83).

இன்னும் சிறுவர்கள் காலில் கிண்கிணி அணிவர் என்றும் அறிகிறோம் (புறம். 77 ; 198) இதனைச் சிறு சதங்கை என்னும் பெயரால் மதுரைக்காஞ்சி அழைக்கிறது. இவ்வாறு செய்யப்பெற்ற ஆபரணங்கள் எல்லாம் பொன், துகிர், முத்துமாலை, மணி ஆகியன கொண்டு அமைக்கப்பட்டன என்று சங்க நூல்கள் கூறுகின்றன (புறம். 218; பதிற். 16).

சிறு குழந்தைகளுக்கு அணியப்பெற்றது 'குறுந்தொடி' என அழைக்கப்பட்டது (புறம். 77).

விரல்களில் அணியும் மோதிரமும் இருந்தது, ஆடவர் அணிந்த மோதிரத்திற்கு 'விளக்கம்' என்பது பெயர். (மதுரைக். 719) மகளிர் மோதிரம் வாளையின் திறந்த வாய் போல உள்ளது (நெடுநல். 143) இதனை 'முடக்கு மோதிரம்' என்பர் நச்சினார்க்கினியர்; 'நெளி மோதிரம்' என அடியார்க்கு நல்லார் கூறினர் (சிலம்பு. 6, 95).

முத்துவடங்களால் செய்யப்பெற்ற அணியினை ஆடவரும் மகளிரும் அணிந்தனர். 'திருமங்கலம்' என்னும் அணியும் இருந்தது என்று தெரிகிறது. இது நூலொடு கலந்த மஞ்சள் கயிற்றில் பிணைக்கப்பெற்றது. ஆதலின் நூல் என்னும் பொருளுடைய 'இழை' என்னும் சொல்லால் குறிக்கப்பெற்றது. இதனை ''ஈகையரிய இழை'' என்று புறநானூறு சொல்கிறது. மற்ற அணிகளைக் கழற்றலாம், பிறர்க்குக் கொடுக்கலாம் இது அவ்வாறு கழற்றவோ கொடுக்கவோ இயலாது என்பதைப் புறநானூறு சொல்கிறது. புலிப்பல் கோத்த புலம்புமணித் தாலிகளைச் சிறுவர்கள் அணிந்தது அறிகிறோம் (புறம். 374). இதுவே 'தாலி' எனவும் வழங்கியது. இத்தகைய தாலிகளை இளமைப்பருவம் கழிந்த பின்னர்க் கழற்றிவிடுவர் (புறம். 77).

தெய்வ உத்தி, வலம்புரி என்னும் சில அணி வகைகள் மகளிர் அணியும் அணிகளாக முருகாற்றுப்படையில் குறிப்பிடப்பட்டுள்ளன (முருகு. 23). நெற்றியின் உச்சியிலிருந்து சுறவின் அங்காந்த வாயாக கீழ்நோக்கித் தொங்கவிடப்பட்ட அணியும் உண்டு (முருகு. 25 நச். உரை). இதனை 'மகரவாய்' என்பர்.

தலைக்கண் அணியும் அணி 'முடி' எனப் பெயர் பெறும். இதனைக் 'குடுமி' எனக் கூறும் வழக்கம் உண்டு. தொல்காப்பியர் போரில் தோற்ற வேந்தன் முடிக்கலம் கொண்டு வென்றான் நீராடுவதைக்

''குடுமி கொண்ட மண்ணு மங்கலம்''

என்று கூறுவர்.

**மலர் சூடுதல் :**

சங்ககால மக்கள் அரசர் முதல் அடியார் வரை மலர் அணிதலை மேற்கொள்ளாதவர் இல்லை, மலர் அவர்கள் வாழ்வில் முதலிடம் பெற்றது. பூ அணிதல், மலர் சூடுதல் பற்றிச் சங்க நூல்கள் அளவிறந்த இடங்களில் சான்று தருகின்றன. (பட்டினப். 88, 109; பதிற். 76.78; கலி. 28 : 12-13). மகளிர்

தம் கூந்தலை நெய்யும் மயிர்ச் சாந்தும் பூசி மணப்படுத்துவர் என்பதும், கலவைச் சாந்துகளாலும் நறும் புகையாலும் கூந்தலுக்கு மணமூட்டுவர் என்பதும் கூந்தலுக்கு மணம் உண்டாக்க முழு மலர்களை வெளித் தெரியாதவண்ணம் சூடுவர் என்பதும் அறியப் படுகிறது (107-112; பதிற். 89 : 16-17; அகம். 358; கலி. 55 : 2-3, 32 : 1; அகம். 73; பரி. 12 : 19; 22 : 12-13).

தார், மாலை, கண்ணி என்னும் மூவகை மாலைகள் சொல்லப் பட்டுள்ளன. 'தாரன்', 'மாலையன்', 'மலைந்த கண்ணியன்' என்று அகநானூற்றின் கடவுள் வாழ்த்தில் வருகிறது. இதனுட் 'கண்ணி' என்பது அடையாள மாலை. மறவரும், அரசரும், மற்றும் கலை வல்லோரும் தத்தமக்கு அடையாளமான பூவால் இதனை அணிவர். தார் என்பது நெடுக அணிவது; இருமுனை உடையது. மாலை என்பது வளைந்த வடிவினது என இதன் வேறு பாட்டை நோக்கும்போது மாலையினும் அலங்காரக் கலையினும் பழந்தமிழர்க்கிருந்த ஈடுபாடு விளங்குகிறது.

காதில் தளிர்களை அணியும் பழக்கமும் உண்டு என்று அறிகிறோம் (பரி. 11 : 95-96).

மணப் பொருள்கள் :

நறுமணம் பொருந்திய சந்தனத்தைத் தம் மார்பில் மைந்தரும் மகளிரும் பூசிக் கொண்டனர் (மதுரைக். 225-227; 493, 553, நெடுநல். 51-2; பட்டினப். 295-297, குறிஞ்சிப். 120-1; மதுரைக். 745). மகளிர் தம் மார்பின்மீது சந்தனத்தை அப்பிக் கொண்டு அந்த ஈரம் காய்வதற்கு முன்னே வேங்கைத் தாதினை அப் பிக்கொள்வர் (முருகு. 32-6).

மணப்பொருள்கள் பலவற்றைச் சேர்த்து இடித்த சுண் ணத்தைத் தம் மேனியில் பூசிக்கொள்வர். நவமணிகளும் பொன்னும், சந்தனமும், கருப்பூரம் முதலியனவும் புழுகிலும், பனி

நீரிலும் நனைய வைத்து இடிக்கப்பெறுவது இச்சுண்ணம் என்பது நச்சினார்க்கினியர் உரையால் விளங்குகிறது (மதுரைக். 399).

நெற்றிக்குத் திலகம் இடுதலும் உண்டு என்று தெரிகிறது (முருகு. 24 : பரி. 11). கண்ணுக்கு மை இட்டனர். சந்தனம் பூசிய மார்பிலும், தோளிலும் மகளிர் கரும்பும் கொடியும் ஆகிய ஓவியங்களை வகைப்பட எழுதிக் கோலஞ் செய்தனர் (நற். 39, 298).

# 27. தமிழ் இலக்கியங்களில் அறிவியல் கூறுகள்

[பேராசிரியர் கு. சுந்தரமூர்த்தி]

1.1. காலம்தோறும் முகிழ்த்துவரும் புதிய சிந்தனை களையும், தொன்மை மரபினின்றும் நிகழ்வாக்கம் (Evalution) பெற்று வழங்கும் கருத்துக்களை விளக்கிக் காட்டவல்ல சொற் களையும், அவை உணர்த்தும் பொருளையும் தன்னகத்தே கொண்டு மிளிரும் மொழி, வளர்ந்து வரும் மொழியாகும்.

1.2. புதிய சிந்தனைக்கேற்ற ஆக்கச் சொற்களையும், பழையனவற்றிலிருந்து கிளைத்துத் தோன்றும் சொற்களையும், சொல் விளக்கங்களையும் காலம்தோறும் கருக்கொண்டு பெற் றெடுத்தவள் தமிழ்த்தாய்.

1.3. கால நெருப்பில் வெந்தழிவுறாமல் புடமிட்ட பொன் போல் பொங்கி நின்றொளிரும் சங்க நூல்கள் தொடங்கி, இடைக்காலத் தமிழ் இலக்கியங்கள், சிற்றிலக்கியச் செல்வங்கள் ஈறாக ஆங்காங்கே, பட்டில் பொன்னிழை ஓடியமை போன்று, அறிவியல் கருத்துக்கள் பதிந்துள்ளன.

1.4. என்றும் நிலைபெற்று இருக்கக்கூடிய அறிவியல் உண்மை காலந்தோறும் மாறுபடும் இயல்புடையது, காலந் தோறும் புதிய வடிவமும் பெறுவது.

1.5. அறிவியல் உண்மைகளையோ அன்றி அறிவியல் விளக்கங்களையோ அன்றி அறிவியல் கொள்கைகளையோ நேரிடையாக நம் பண்டைச் சான்றோர்கள் கூறாராயினும், வேறு பல செய்திகளை இயம்ப வந்தவிடத்து, அச்செய்திக்கு விளக்கமாகத்

''தாம் செல்லும் போக்கில்'' அறிவியல் கருத்துக்களைக் கூறிச் சென்றுள்ளனர்.

## 2.1. மூலக்கூறுகளும் உலகமும் :

மூலக் கூறுகள் (Molecules) நூற்றுக்கு மேற்பட்டு விளங்குகின்றன என்பது இக்காலத்திய அறிவியல் ஆய்வாளர்களின் மதிப்பீடு.

''நிலம்நீர் தீவளி விசும்போடு ஐந்தும் கலந்த மயக்கம் உலகம்'' என்பது தொல்காப்பியர் கூறும் அறிவியல் உண்மை.

நிலம், நீர், தீ, காற்று, விசும்பு என்னும் ஐந்து மூலக்கூறுகள் தொல்காப்பியரால் சொல்லப்படுகின்றன.

இவ் ஐந்தும் தம்முள் ஒன்றோடு ஒன்று இயைந்த ஒரு கலவைதான் உலகம்; ஐம்பெரும் பூதங்களால் வடிவம் பெற்றதே இவ்வுலகம் என்பது தொல்காப்பியர் கண்ட கோட்பாடு.

''பஞ்ச பூதங்களாகவும், பிற பொருள்களாகவும் நாம் காண்கின்ற இப்பேருலகம்...'' எனப் பரிபாடல் இயம்புகின்றது.

'' நீர்மிகின் சிறையும் இல்லை, தீமிகின் மன் உயிர் நிழற்றும் நிழலும் இல்லை; வளிமிகின் வலியும் இல்லை'' என்பன புறநானூற்று அடிகள்.

ஐம்பெரும் பூதங்களால் ஆனது உலகம். அப்பூதங்களுள், நிலைபெயர்ந்து, தம் இடம் விட்டு இடம் மாறி, அளவில் மிகுந்து ''பேருருவம்'' எடுத்துவரக்கூடியவை நீர், தீ, காற்று ஆகிய மூன்றும்தான் என வரையறை செய்து கூறுவதினின்றும் அவர்களுடைய இயற்பியல் (Physics) நுண்மாண் நுழைபுலத்தை அறியலாம்.

இம்மூன்றும் நிலைமாறிப் பேருருவம் கொண்டு வருமாயின் அதனைப் பொறுத்துக் கொள்ளும் வலிமை இங்கு இல்லை என்பது அப் புறப்பாடலின் பொதிந்த பொருள் ஆகும்.

நீர்தான் அடிப்படைப் பொருள்; நீரில் இருந்துதான் ஏனைய பூதங்கள் தோன்றின. இவ்வண்ணம் படிப்படியாகத் தோன்றிப் பிறகு ஐம்பெரும் பூதங்களிலிருந்து உலகமும் தோன்றியது என்பது வேத நூல்களில் கூறப்படும் கருத்தாகும்.

2.2. நிலம் - குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை எனும் ஐவகை நிலப் பாகுபாடு நம் முன்னோரின் நிலவியல் (Geological knowledge) மதி நுட்பத்தைச் செவ்விதின் புலப் படுத்தும்.

குறிஞ்சி முதல் மருதம் வரை ஒன்றிலிருந்து மற்றொன்று பண் படுத்தப்பட்டு வருகிறது. பாலை, தனித்ததோர் நிலம் இன்மையின் கூறவில்லை என்னும்போது, பாலையின் இயல்பை நன்கு அறிந் திருந்தமை புலனாகிறது.

''மண் திணிந்த நிலனும்'' என்று [புறம்] கூறும்போது, மண்ணுக்கு அணு என்று பொருள் கொண்டார் பழைய உரை யாசிரியர்.

எல்லாப் பொருள்களும் அணுக்களின் செறிவால் (Atomic Density) ஆனவை என்னும் புதிய அறிவியல் கொள்கையைப் பழைய உரைகாரர் அறிந்துள்ளார்.

2.3. ஞாலமும் உலகமும் : ஞாலம் என்னும் சொல்லுக்குத் தொங்கக்கூடிய ஒன்று [ஞாலுதல் - தொங்குதல்] என்பது பொருள்.

இப்பேரண்டத்தில் கோள்கள் ஒன்றனுக்கு ஒன்று ஈர்ப்புவிசை அடிப்படையில் நின்று இயங்குகின்றன. புவியும் அவ்வாறே எவ்வித ஆதாரமும் இன்றி ஈர்ப்புவிசை ஒன்றினால் இப்பேரண் டத்தில் நிற்கிறது. ஞாலம் என்னும் சொல் இவ் அறிவியல் உண்மையின் அடிப்படையில் எழுந்தது.

''அண்டப் பகுதியின் உண்டைப் பிறக்கம்'' என்பது திருவாசகம் [திரு அண்டப் பகுதி] அண்டப்பகுதி - இப் பேருலகின் [Universe] ஒரு பகுதியே உலகம். ''உண்டைப்

பிறக்கம்'' உருண்டை வடிவம். உலகம் உருண்டை வடிவினது என்பதை முன்னரே கண்டறிந்த தகைமை. ஆக, உலகத் தோற்றத்தைப்பற்றி நம் முன்னோர்கள் தெளிந்து கூறிய கொள்கைகள் அறிவியல் உலகத்துக்கு உடன்பாடே.

2.4. பேருலக அறிவு: ''இருமுந்நீர்க் குட்டமும் வியன் ஞாலத்து அகலமும், வளி வழங்கு திசையும் வறிது நிலைஇய காயமும் என்று ஆங்கு அவை அளந்து அறியினும் அளத்தற்கு அரியை''—[புறநானூறு].

கடலின் ஆழம், நிலவுலகின் பரப்பு, காற்று வழங்குகிற திசை, வெற்றிடமாகிய வானம் [Vaccum Space] ஆகிய இவற்றை அளந்து அறியினும் அளத்தற்கரியை என்பது இப் பாடற் பகுதியின் கருத்தாகும். எதிர்மறை உம்மையால், அவை அளக்லாகா அளவும் பரப்பும் உடையவை என்னும் அறிவியல் உண்மை புலனாகிறது.

''வறிது நிலைஇய காயத்தின்'' பரப்பியல்பு அறிய விண்வெளிக் கோள்கள் இன்று செலவு மேற்கொண்டு வருகின்றன.

திசைகளில் வளி வழங்கும் பகுதி எதுவரையிலும் உண்டு என்பதை இப்போது கண்டறியினும் முன்பே நம் முன்னோர் கால்கோள் இட்டனர்.

2.5. நிலவின் ஈர்ப்பு: ''இரவுத் தலை மண்டிலம் பெயர்ந்தென, உரவுத் திரை எறிவன போல வருஉம்'' என்பது நற்றிணையில் வரும் ஒரு குறிப்பாகும். இரவுத தலை மண்டிலமான திங்கள் இடம் பெயர்ந்து சற்றே புவியை நெருங்கி வருவது முழுநிலா நாளில் ஆகும். அக் காலை நிலவின் ஈர்ப்பு விசை காரணமாகக் கடல் அலைகள் துள்ளிப் பொங்கி எழும்.

உவமை சொல்லவந்த இந் நற்றிணைப் புலவர், இவ் அறிவியல் உண்மையைக் காட்டிச் செல்லும் நுணுக்கம், நம் பாராட்டை எதிர்நோக்கிச் சொல்லவில்லையே.

**2.6.** புள்ளின் வாழ்க்கை : பறவைகள் பறந்து திரிந்து பற்பல இடம் சென்று இரை தேடுவன. ஆயிரக்கணக்கான கி. மீ. தொலைவு வரை அவை இடம் பெயர்ந்து செல்லும். சில திங்கள் சென்ற இடங்களில் தங்கிப் பின்னர், பழைய இடங்களுக்கு வந்து சேரும். பறவையியலார் இதனை Birds Migration என்பார்கள். இக்குறிப்பைச் சங்கச் செய்யுட்கள் ''புலம் பெயர் புள்'' என்னும் தொடரால் குறிப்பிடுகின்றன. இதனால் நம் புலவர் பெருமக்களின், திப்பிய புலமையை அறிந்துகொள்ள ஏதுவாகிறது.

''புதுப்புள் வரினும் பழம்புள் போகினும்''—இத் தொடரும் புலம் பெயர் புள்களின் இடப்பெயர்ச்சியைக் குறிப்பதேயாம்.

**2.7.** வேதியியலும் பூஞ்சேக்கையும் : களைத்து வந்த மோசிகீரனார், முரசுகட்டில் என அறியாது, அதன்மீது இடப்பட்டிருந்த மெத்தைமீது சற்றே அமர்ந்தார். அயர்வால் கண்ணயர்ந்து விட்டார். வெற்றி முரசு வைக்கக்கூடிய முரசு கட்டிலில் யாரோ ஒருவர் கண்ணயர்வதைக் கண்ட மன்னன் சேரமான் தகடூர் எறிந்த பெருஞ்சேரல் இரும்பொறை கடுஞ் சினத்துடன் கட்டிலை நெருங்கி வந்தான். புலவரை மாய்க்கவில்லை. மாறாகக் கவரி வீசினான். இந் நிகழ்ச்சியைச் சொல்ல வந்த புலவர், முரசு கட்டிலில் கிடக்கும் மெத்தையின் மென்மையைப் புலப்படுத்த, ''எண்ணெய் நுரை முகந் தன்ன மென்பூஞ் சேக்கை'' என்று குறிக்கிறார்.

தண்ணீரின் நுரை என்று இயல்பாகச் சொல்லவில்லை. எண்ணெய் நுரை என நுவலுகிறார். தண்ணீரின் அடர்த்தியைவிட எண்ணெய் கனம் குறைவானது. தண்ணீரின் அடர்த்தியைவிட எண்ணெயின அடர்த்தி குறைவு என்பது வேதியியல் உண்மை.

இவ் வேதியியல் உண்மை, ''எண்ணெய் நுரை'' எனக் கூறுவதால் புலப்படுகிறது.

**2.8.** திண்மப்பொருளும் நீர்ப்பொருளும் : திண்மப் பொருள் [திடப்பொருள் - Solid] அளவில் சுருங்கும். நீர்ப் பொருள் [திரவப்பொருள் - Liquid] அளவில் சுருங்காது என்பது அறிவியல் அறிஞர் பாஸ்கல் கண்ட உண்மை.

"ஆழ அமுக்கி முகக்கினும் ஆழ்கடல் நீர்
நாழி முகவாது நானாழி"

என்பது ஔவையார் வாக்கு.

ஆழத்திலே கொண்டு அமுக்கி முகந்தாலும் ஒரு நாழி, நான்கு நாழி தண்ணீரை முகக்காது என்று ஔவையார் கூறுகின்றார்.

ஒரு நாழி கொள்ளளவு உடையதில், நான்கு நாழி நீரை அடக்கிவிட முடியாது. ஏன்? நீர்ப்பொருள் அளவிலே சுருங்காது.

"ஆழ்கடல் நீர்" என்பதிலும் ஓர் உண்மை உண்டு. நீரின் ஆழத்தில் செல்லச் செல்ல, நீரின் அழுத்தம் மிகுதியாகிறது. மிகுந்த அழுத்தத்தின் காரணமாக நீர் மிகுதியும் புகவேண்டும் என்று ஆழத்திலே கொண்டுபோய் அமுக்கி முகந்தாலும் மிகுதியும் புகாது; உரிய கொள்ளளவே ஏற்றுக்கொள்ளும் என்னும் வேதியியல் உண்மை புலனாகிறது.

ஒருபடி தவிட்டை முக்கால் படியாக அழுத்தி அளந்து அடக்கிக் காட்டமுடியும். இதுபோன்ற திண்மப்பொருளை அடக்கிக் காட்டமுடியும். ஆனால் நீர்ப்பொருளை அவ்வாறு செய்ய இயலாது; அளவில் சுருக்க இயலாது.

எனவே, திடப்பொருள் அளவிலே சுருங்கும்; நீர்ப்பொருள் அளவிலே சுருங்காது.

திடப்பொருள், நீர்ப்பொருள் பற்றிய இவ் அறிவியல் உண்மையை ஔவையார் பாடல் சுட்டிச் செல்கிறது.

2.9. மணிவாசகர் கண்ட வேற்றுவிசை: "வேற்றுவிசை [External Force] தாக்காத வரையிலும் நடந்துகொண்டிருக்கும் பொருள் நடந்துகொண்டே இருக்கும். நிற்கின்ற பொருள் நின்று கொண்டே இருக்கும். கிடக்கின்ற பொருள் அப்படியே கிடக்கும்". இது நியூட்டனின் விசைபற்றிய கொள்கை.

நகர்ந்துகொண்டிருக்கும் பொருளின் எதிர்ப்புறத்திருந்து வேற்றுவிசையாகிய மற்றொரு விசை எதிர்த்துத் தாக்கும்போது,

நகர்தலின் வேகம் தடைப்பட்டு பொருள் நிற்கிறது. அசையாத பொருளின்மீது வேற்றுவிசை தாக்கும்போது பொருள் நகர்கிறது.

இதுபோன்று விசைத் தத்துவம் விளக்கிச் சொன்னவர் ஐசக் நியூட்டன்.

மாணிக்கவாசகப் பெருமான் தம் திருவாசகத்தில், ''நடப்பன நடாஅய்க் கிடப்பன கிடாய் நிற்பன நிறீஇ, சொற்பதம் கடந்த தொல் லோன்'' என்று சிவபெருமானைக் குறிப்பிடுகின்றார்.

நடக்கக்கூடிய பொருளை நடக்கும்படியே செய்தவன்; கிடக்கக் கூடிய பொருளைக் கிடக்கும்படியே செய்தவன்; நிற்கக்கூடிய பொருளை நிற்கும்படி செய்தவன்—சிவபெருமான்.

நடக்கக்கூடிய பொருளை அவன் நடக்கும்படி செய்யாது போனால், வேற்றுவிசை தாக்கி அப்பொருள் நின்றுவிடுமன்றோ?

கிடக்கும் பொருளைக் கிடக்குமாறு செய்தவன் அவன். இன் றெனில் வேற்றுவிசை தாக்கி, கிடக்கும் பொருள் நகருமன்றோ?

எனவே ''விசைத் தாக்கம்'' பற்றி ஐசக் நியூட்டன் கூறிய கொள்கைகள் மணிவாசகரின் திருவாசகத்தில் படிந்துள்ளதைக் காணலாம்.

**3.1.** காலந்தோறும் புத்தாக்கம் பெற்று வளர்ந்து வருவது தமிழ்மொழி. காலத்துக்கு ஏற்ற கருத்துகள் வளரும் மொழியில் புகுவது தவிர்க்கமுடியாத ஒன்று.

''தொன்மையவாம் எனினும் எவையும் நன்றாகா; இன்று தோன்றிய எனினும் எவையும் தீதாகா'' என்பது திறனாய்வாளரின் அனுபவ மொழி, நமது சிந்தனையில் நமது மொழியின் வளமும், வளர்ச்சியும் அடங்கியுள்ளன.

# 28. சங்க இலக்கியக் காலமுறைப் பதிப்பு

[அறிஞர் வ. சுப. மாணிக்கம்]

எட்டுத்தொகை பத்துப்பாட்டு என்ற சங்கவிலக்கியங்கள் ஒரு நூற்றாண்டுக் காலமாகப் பல முனையிலும் ஆய்வுபெற்று வருகின்றன. சங்கப்பனுவல்களே நாம் பெற்றுள்ள தமிழ்க் கருவூலங்கள். ஆதலின், அவை ஆய்வு முதன்மையும் பரப்பும் பெறுவது இயல்பேயாகும். பெருகிவரும் இவ்வாய்வுப் பொலிவில் ஒரு முழுக் குறைபாடு உண்டு என்பதனைப் பலர் உணர்வதில்லை.

## அடியளவுப் பதிப்பு

சங்கத்தொகைகள் பெரும் பங்கு அடியளவாலும் திணை முறையாலும் அமைந்தன. 2381 பாடல்களுள் 1200 பாடல் குறுந்தொகை நற்றிணை அகநானூறு என அடிய்ளவால் அமைந்தவை; அடியளவோடு அகத்திணைப் பொருள் வரம்பும் உடையவை. திருமுருகாற்றுப்படை முதலான பத்துப்பாட்டு நூற்றிலும் மேம்பட்ட அடியளவால் ஒரு தொகுதிப்பட்டவை : அகமும் புறமும் கொண்டவை. 498 ஐங்குறுநூறும் 150 கலித்தொகையும் அகத்திணை முறையானவை. 22 பரிபாடல்கள் திருமால் செவ்வேள் வையை என்ற முப்பொருள் மேலன. 80 பதிற்றுப்பத்து சேர மன்னர்களைப் பற்றிய புறச் செய்யுட்கள். 398 செய்யுள் கொண்ட புறநானூறு ஒரு தொகையாயினும் தொகை முறையில் ஆங்காங்கே சில நெறிகள் உள.

ஐங்குறுநூறு, கலித்தொகை என்றவற்றைத் தொகைப் போலிகள் என்று சொல்லலாம். இவை தனிப்பாடல்கள் அல்ல.

ஓர் ஆசிரியன் ஒரு பொருள்மேல் திட்டமிட்டு எழுதிய தொடர் பாடல்கள். ஓரம்போகியார், அம்மூவனார், கபிலர், நல்லந்துவனார் முதலிய சான்றோர்கள் சங்ககால நூலாசிரியர்கள் என்ற தகுதிக்கு உரியோராவர். பத்துப்பாட்டும் இத் தன்மையவே.

## ஆசிரியப் பதிப்பு :

அடியளவாலும் பிறவாற்றாலும் வகைபெற்ற இத் தொகைகள் கற்பவர்க்கு எளிய துணையாவனவன்றி ஆராய்ச்சி முடிவுக்கு நுண் துணையாகும் புலத்தொகுதிகள் அல்ல. சைவ சித்தாந்த மகாசமாசம் 1940இல் வெளியிட்ட சங்கவிலக்கியப் பதிப்பு ஆசிரியர் அகர வரிசையாக அமைந்தது. ஓர் ஆசிரியனின் புலமையைக் காண் பதற்கும், ஒரு சேர்ந்த மூலக்கையடக்கமாதலின் எளிமையாகப் புரட்டிப் பார்த்து ஒப்பிட்டாய்வு செய்வதற்கும் இப் பதிப்பு பெருந் துணை சான்றது. இப் பதிப்பினையும் ஒரு தொகை என்றே கருத லாம். இப் பதிப்பின் அருமை பெருமையை எவ்வளவு பாராட்டினா லும் தகும். பழந்தொகைகளைப்போல இவ்வாசிரியத் தொகைப் பதிப்பும் என்றும் கிடைக்குமாறு போற்றிக்கொள்ள வேண்டும்.

## திணைப் பதிப்பு :

குறிஞ்சித்திணை, மருதத்திணை, பாலைத்திணை, வாகைத் திணை, பாடாண்டிணை என்றாங்கு திணைவகையாய்வுகள் அறிஞப்பட்டத்துக்கு வழங்கப்பெற்றன. இவ்வாய்வாளிகள் தமக் குரிய திணைப் பாடல்களைத் தொடுத்துக்கொண்டு ஆய்வுக்களம் புகுந்துள்ளனர். இக் கைத் தொகைகள் பதிப்புருவம் பெறாவிடினும், ஒரு நெறிப்பட்ட தொகைகள் என்று வைத்துக்கொள்ளலாம். முதல்கரு அடிப்படையில் நோக்குவார்க்கு இத் திணைத் தொகைகள் நல்வாய்ப்பின. ஆய்வுக்கு இவ்வாறு வகைப்படுத்தப்பட்ட தொகை யேடுகள் இன்னும் சிலவுள.

அடியளவுப்பதிப்பு, ஆசிரியப்பதிப்பு, திணைப்பதிப்பு இவை யெல்லாம் ஆய்வுக்கு உகந்த மரபாக இருந்து வருகின்றன என்பதில் ஐயுறவில்லை. இவ்வகைப் பதிப்புகளும் தொடர்ந்து நிலைபெற்று

வரல் வேண்டும் என்பதிலும் அவை சிலதுறை ஆராய்வுக்கு ஏற்ற பெற்றியன என்பதிலும் மறு சிந்தனையில்லை. எனினும் சங்க விலக்கியம்பற்றி இதுகாறும் வந்த பல்வகைப் பதிப்புகளிலும் இனி வரும் புதிய வகைப்பதிப்புகளிலும் எல்லாம் ஒரு பொதுநெறி என்றும் அடிப்படையொழுங்கு இருக்க வேண்டும் என்பது இக் கட்டுரையின் முடிவு. அனைத்துப் பதிப்புகளிலும் இடங்கொண்டாக வேண்டிய இந் நெறியைச் சிறப்பு நெறி என்று கொள்ளலாம்.

காலமுறைப் பதிப்புகள் :

'காலம் உலகம் உயிரே உடம்பே' என்று தொல்காப்பியம் வரிசைப்படுத்தியபடி இயற்கைக்கும் செயற்கைக்கும் இன்னநாளில் இது பிறந்தது. இது முன். இது பின் என்ற காலவட்டம் இன்றி யமையாதது. ஒன்றன் காலப்பிறப்பும் பிறவற்றோடு அதன் கால நிற்பும் செய்திச் செம்மைக்கு வேண்டற்பாலன. இவ்வொழுங்கு வரலாற்றுக்கு மட்டும் உரியதன்று. ஓராற்றால் நோக்கின், எல்லாமே வரலாறு என்ற ஊழுக்கு வந்து சேருபவை. ஆதலின் சங்க இலக்கியத்தின் 2381 பாடல்களையும் இதுமுன், இதற்குப்பின் இது என்ற காலவடைவுக்குக் கொண்டுவரல் வேண்டும். நான் அண்ணாமலைப் பல்கலைக்கழகத்துப் பேராசிரியராக இருந்தபோது, சங்கப்பதிப்புக் காலத்திட்டத்தில் தமிழ்த்துறை ஈடுபட்டது. முயற்சி பதிப்புத் திருவை ஆக்காவிட்டாலும், இவ்வகைப் பதிப்பு வரன் முறை ஆய்வுக்கு ஒருவந்தம் வேண்டும் என்ற கருத்து வலுப் பெற்றது. குறிப்பாக ஈரிடங்களைக் காண்போம்.

எழுவர் :

புறநானூற்றில் (158) குமணனைப் பாடும் பெருஞ்சித்திரனார் பாரி முதலாக எழு வள்ளல்களைச் சுட்டி இவரனைவோரும் இறந்த பின் குமணன் வள்ளலாக விளங்குகின்றான் என்று காலம் சுட்டுவர். சிறுபாணாற்றுப்படை பாடிய இடைக்கழி நாட்டு நல்லூர் நத்தத்தனார் பேகன் முதலாக வள்ளல் எழுவரை வரிசைப்படுத்தி, இவ் வனைவரும் தாங்கிய ஈகைநுகத்தை ஓய்மான் நல்லியக்கோடன் ஒருவனே தாங்கினான் எனக் காலமுறையைப் புலப்படுத்துவர்.

இதனால் குமணனும் நல்லியக் கோடனும் எழுவர்க்குப்பின் வெவ்வேறிடத்து ஒரு காலத்து வாழ்ந்த வள்ளல்கள் என்ற காலக் குறிப்பையும் பெறுகின்றோம்.

எழுவர்பற்றிய இவ்வீரிடங்களையும் இவ்வெழுவரைப் பாடிய பல்வேறு புலவர்களின் பாடற் குறிப்புகளையும் அடித்தளமாகக் கொண்டால், ஆயிரத்துக்கு மேற்பட்ட சங்கப்பாடல்கள் காலமுறை பெறும். இவ்வெழுவரும் ஒரு குறிப்பிட்ட ஆண்டிற் பிறந்து அனைவரும் ஒரு குறிப்பிட்ட ஆண்டில் இறந்தார்கள் என்று சொல்ல வியலாது. புறநானூறு தொகுக்கப்பட்ட முறையில் இவ்வெழுவரின் வரிசை வேறாகவுள்ளது. மூன்றையும் பின்வருமாறு அட்டவணைப்படுத்தலாம்.

| | சிறுபாண் | புறம் : 158 | புறநானூறு |
|---|---|---|---|
| 1. | பேகன் | பாரி | அதிகமான் |
| 2. | பாரி | ஓரி | பாரி |
| 3. | காரி | மலையன் | காரி |
| 4. | ஆய் | எழினி | ஆய் |
| 5. | அதிகன் | பேகன் | பேகன் |
| 6. | நள்ளி | ஆய் | நள்ளி |
| 7. | ஓரி | நள்ளி | ஓரி |

இவ்வெழுவர்பற்றிய செய்யுட்களைக் கூர்ந்து நோக்கின் ஒழுங்கான காலமுறை கிடைக்கும். அதிகமானும் அவன் மகன் பொகுட்டெழினியும் பாடப்பெற்றிருத்தலால், புறநானூற்றுத் தொகுப்பின் படி, எழுவருள் அதிகமான் முதியவனாகவும் முன் இறந்தவனாகவும் கருத இடமுண்டு.

மேலும் சிறுபாணாற்றுப்படை வள்ளல் எழுவரோடு நில்லாது இன்னும் வரலாறு பொதுளத் தமிழகவரசு நிலைபற்றிச் சில குறிப்புகளைத் தருகின்றது.

''எழுவுறழ் திணிதோள் இயல்தேர்க் குட்டுவன்
வருபுனல் வாயில் வஞ்சியும் வறிதே''

''கண்ணார் கண்ணிக் கடுந்தேர்ச் செழியன்
தமிழ்நிலை பெற்ற தாங்கரு மரபின்
மகிழ்நனை மறுகின் மதுரையும் வறிதே''

''நாடா நல்லிசை நற்றேர்ச் செம்பியன்
ஓடாப் பூட்கை உறந்தையும் வறிதே''

என்ற பகுதிகள் சேரநாட்டிற் குட்டுவனும் பாண்டிய நாட்டிற் செழியனும் சோழ நாட்டிற் செம்பியனும் ஆண்டனர் என்ற செய்தியையும், மூன்று தலைநகரும் 'வறிதே' என்பதனால் அங்குக் குறிப்பிடத்தக்க நல்லாட்சிகள் இல என்ற காட்சியினையும்,

''எழுவர் பூண்ட ஈகைச் செந்நுகம்
விரிகடல் வேலி வியலகம் விளங்க
ஒருதான் தாங்கிய உரனுடை நோன்தாள்''

என்பதனால் தமிழக முழுதிற்கும் நல்லியக் கோடன் ஒரு வள்ளலாக விளங்கினான் என்ற கருத்தினையும் புலப்படுத்துகின்றன. இவ்வரசியற் சூழ்நிலையைக் கருத்திற் கொண்டால், இன்னும் பல சங்கப் பாடல்கள் காலவடைவு பெறலாம்.

இங்ஙனம் 2381 செய்யுட்களையும் இது முன் இது பின் என்ற கால வரம்புகாட்டும் பதிப்பு பலநலம் பயப்பதோடு ஆய்வு முடிபுகளையும் திறப்படுத்தும். பல்வேறு குழும வழக்காறுகளை அறுதியிடுதற்கும் இலக்கண யாப்பு வளர்ச்சிகளைத் தொடுப்பதற்கும் இப்பதிப்பே நல்லடியாகும். வேற்று மொழிகள், அயல் வழக்குகள், புராணக் குறிப்புகள், மீயியற்கைகள் என்றவற்றின் வரவினை மதிப்பிடுதற்கு இப் பதிப்பே வலிவு தரும்.

முற்சங்கப் பாடல்கள் :

தொல்காப்பியத்துக்கும் இன்றுள்ள சங்கச் செய்யுட்கும் நீண்ட இடைவெளியுண்டு என்று கருதி வருகின்றோம். தொல்காப்பியம்

முழுமையாகக் கிடைத்திருக்கும்போது அக்காலச் செய்யுள் சிலவாவது நிலைபெற்று வந்திருக்க மாட்டாவா? மேலும் 2381 செய்யுட்களின் காலவெல்லைகள் என்ன? எல்லாம் குறிப்பிட்ட ஒரு நூற்றாண்டைச் சார்ந்தன என்று அடக்கிவிட முடியுமா? செவ்விய காலவடைவு செய்ய முடிந்தால், இச் சங்கத் தொகுதியுள் சில செய்யுட்கள் தொல்காப்பியத்துக்கு முந்தியனவும் உடனானவும் உடன்மருவினவும் இருத்தல் கூடும்.

பாடியோர் பெயர் தெரியாமல், கூகைக்கோழியார், சிறுவெண்டேரையார், அணிலாடு முன்றிலார், குப்பைக்கோழியார் என்றின்ன சிறப்புப் பெயர் பெற்ற பாடல்கள் தொல் சங்ககாலத்தனவாகவும் இருக்கலாமன்றோ? புறநானூற்று இறுதியில்வரும் தாபதவாகை, மூதின்முல்லை, மகட்பாற்காஞ்சி முதலான சில துறைப் புறங்களும், வான்மீகியார், கோதமனார், மார்க்கண்டேயனார் முதலானோர் புறங்களும் முற்சங்கத்துக்குரியனவா என்று சீர் தூக்க வேண்டும். தொல்காப்பியம் வாழ்ந்த நிலையில் அதற்கு முன்னோ உடனோ அடுத்துப் பின்னோ ஒரு செய்யுளும் வாழவில்லை என்ற் பொது முடிபு தெற்றெனப் படவில்லை. மொழிநிலையிலும் ஒழுகலாறு நிலையிலும் வைத்துப் பார்த்தால், தொல்காப்பியம் கண்ட இலக்கணத்துக்குச் சில இலக்கியச் செய்யுட்களாவது சங்கத் தொகையிற் காண முடியும். இங்ஙனம் வரும் முடிபு தவறான ஒரு கருததுக்குத் தோற்றரவு ஆகாது. எட்டுத்தொகையுட் சில செய்யுட்கள் தொல்காப்பியத்துக்கும் பொருந்திய இலக்கியங்களாகப்படின், அவற்றைத் தொல்காப்பியத்துக்கும் முன் அல்லது உடன்காலமாகக் கொண்டு போகவேண்டுமேயன்றி, கி. மு. காலத்துக்குக் கணிக்க வேண்டுமேயன்றித் தொல்காப்பியத்தைக் காலக்கீழிறக்கம் செய்யக் கூடாது.

**தனிப்புலவரின் கால வடைவு:**

சங்கப்பாடற் காலமுறைப் பதிப்புக் காண்பதற்குப் பல நெறிகள் உள. அவற்றுள் தலையாய ஒன்றினை இக் கட்டுரையிற் சுட்டுவல். முதற்கண் தனித்தனியாக ஒவ்வொரு புலவரின் செய்யுட்களையும் காலமுறைப்படுத்திக்கொள்ள வேண்டும். இப் பாடல்கள் அகத்திலும் புறத்திலும் இருந்தாலும் திணை நோக்காமல் கால வரலாற்று

நோக்கில் வகை செய்ய வேண்டும். அகத்திணைச் செய்யுட்களைக் காலக் கணிப்புச் செய்வது இடர்ப்படுமென நானும் அறிவேன்; எனினும் குறுந்தொகை நற்றிணை அகநானூறு என்ற தொகைகளில் அறுபது விழுக்காடு வரலாற்றுக் குறிப்புடையன ஆதலின் நேரிய ஆய்வுக்கு அத்துணைத் தொல்லையில்லை. எவ்வளவு கூர்த்து ஆராய்ந்தாலும் கணிசமான செய்யுட்கள் கால முறைப்படா. அன்னவற்றை 'ஆசிரியர் பெயர்காணாப் பாடல்கள்' என்று சமாசப்பதிப்பு தொகைப்புறவைப்புச் செய்வதுபோல, 'காலமுறை காணாப்பாடல்கள்' என்று தலைப்பிட்டு எதிர்கால ஆய்வுக்கு வழி காட்டலாம்.

காலவடைவு காண்பதற்கு வரலாற்றுச் சான்றுதான் முதன்மை என்பதில்லை. இலக்கணம், மொழி. மரபு, நடை, கொள்கை, ஒப்பீடு என்றிவையும் சான்றாவன. இந் நெறிகளை மேற்கொளின் 2381 சங்கச் செய்யுட்களுள் மூன்றில் இரண்டு பங்கு ஏறக்குறைய 1500 செய்யுட்குப் பேரிடரின்றிக் கால முறை காட்ட முடியும். சான்றுகள் புதிதுபடக் கிடைக்குந்தோறும் ஆய்வுக் கூர்மைகள் பெருகுந்தோறும் காலமுறை காணாப் பாடல்கள் சிலவும் பலவும் காலவயப்படலாம்.

முன் சொல்லியாங்கு ஒவ்வொரு சான்றோரின் தனித்தனிச் செய்யுட்களையும் முதற்கண் காலவளைவு செய்து கொள்ளல் தகும். இப் பதிப்புக்கு இதுதான் பெரிய முதற்படி. பல செய்யுள் யாத்த கபிலர், பரணர், நக்கீரர், மாமூலனார், ஔவையார், பெருங்கடுங்கோ, வெள்ளிவீதியார், கோவூர்கிழார் பாடல்களைக் காலக்கோட்படுத்தினல் பெரும்பகுதி காலவடைவு துலங்கிவிடும். சில செய்யுள் பாடிய சான்றோர் பலரையும் சிறு சிறு கட்டுரைகளில் ஆராயலாம். இவ்வடிப்படைத் தமிழாக்கத்தில் பல்கலைக் கழகத் தமிழ்த்துறைகள் ஆள்வினை மேற்கொள்ளல் தகும். முதுகலைக் கட்டுரைக்கும் முதுகலை ஆய்வுப் பட்டத்துக்கும் அறிஞர் பட்டத்துக்கும் பிற மேலாய்வுக்கும் சங்கவிலக்கியங்களின் கால முறைப் பொருளைச் சிற்றளவாகவோ பேரளவாகவோ வரம்புபடுத்தி நிறைவு காணலாம். காலமுறையிற் கட்டுண்ணா எவ்வகை ஆய்வும் ஆய்வு முடிவுகளும் வேருன்றா மரம் போலவும் கருங்கட்டு

இல்லா அரமியம் போலவும் சரிவுபடுவன ஆதலின் நீண்ட இக் குறையைத் தமிழாய்வுலகம் விரைவில் நீக்க வேண்டும். இப் பதிப்புக்குப்பின் எழும் ஆராய்வுகள் தனி வனப்புடையனவாகப் பிறக்கும் என்பது என் துணிவு.

எடுத்துக்காட்டு :

ஒரு நிகழ்ச்சியைக் கரு வைத்துச் சில பாடல்களின் கால முறையை எடுத்துக்காட்டாக விளக்க விரும்புகின்றேன். ஆதி மந்தியின் காதலனைக் காவிரி அடித்துக்கொண்டு போயிற்று எனவும் அதனை அறியாது நாடு நாடாக ஊர் ஊராகத் தேடியலைந்து ஆதிமந்தி பேதுற்று அலமந்தனள் எனவும் மருதி என்பவள் காவிரி கவர்ந்ததை ஆதிமந்திக்கு உணர்த்திக் கடலில் மாய்ந்தாள் எனவும் பரணர் பாடிய அகநானூற்றில் நான்கு (76, 135, 222, 236) பாடல்களாலும் வெள்ளிவீதியார் பாடிய ஓர் அகநானூற்றுப் பாடலாலும் (45) அறிகின்றோம். தன் காதலன் பிரிவைத் தாங்க மாட்டாது நெடிய பாலை வழிகளில் வெள்ளிவீதி புறப்பட்டு அலைந்தாள் என்று ஔவையார் ஓர் அகப்பாடலில் (147) உவமை யாகச் சுட்டியுள்ளார், ஆதிமந்தியும் வெள்ளிவீதியும் பாடிய குறுந்தொகைப் பாடல்கள் (31, 27) பெயர் சுட்டா, சுட்டுதல் கூடா அகப்பாடல்களாயினும், காலப் பதிப்புக்குக் குறிப்புப் பொருண்மையுடையனவாக எடுத்துக்கொள்ளலாம். இச் செலவு வரலாற்றை மையமாக வைத்து இவை குறித்த எட்டுச் செய்யுட் களைக் கால்வடைவு செவ்விதாகச் செய்யலாம், தொகைகளில் இவற்றின் கிடக்கை வேறு : காலமுறைப் பதிப்பில் வரும் இவற்றின் வரிசை நிலை வேறு.

| | | |
|---|---|---|
| 1. | குறுந்தொகை (31) | ஆதிமந்தி யாண்டும் காணேன் மாண்டக்கோனை என்று தானே புலம்புதல். |
| 2. | அகநானூறு (135, 236, 222, 76) | பரணர் பாடல்கள் ; ஆதிமந்தியின் வெளிச் செலவை மேற்கோள் காட்டுதல். |

3. குறுந்தொகை (27) வெள்ளிவீதியார் பாடல்; தலைவன் பிரிவால் வந்த தன் ஆற்றாமையை வெளிப்படுத்தல்.

4. அகநானூறு (45) வெள்ளிவீதியார் பாடல்; ஆதி மந்தியின் துன்ப அலைவை மேற் கோள் காட்டல்.

5. அகநானூறு (147) ஔவையார் பாடல்; வெள்ளி வீதியின் ஊர் கடந்த செலவை மேற்கோள் காட்டல்.

இங்ஙனம் பாடல்களைக் கணித்த காலமுறைப்பாடு மேலும் சில தெளிவுகளைப் பிறப்பிக்கின்றது. ஔவையாருக்கு முற்பட்ட வர் பரணர் எனவும் வெள்ளிவீதியின் புறச்செலவுக்கு முந்தியது ஆதிமந்தியின் தேடற் செலவும் எனவும் அறிகின்றோம். ஆதி மந்தியின் அலைந்த திரிவுக்கு முன் எப் பெண்ணையும் பரணர் மேற்கோள் காட்டாமையால், அகநானூற்றின் ஐந்திடங்களில் இஃதொன்றே பரக்கப் பேசப்படுவதால், இத்தகைய தேடுபடலத்துக்கு முன்னோடி ஆதிமந்தியேயாவள் என்ற ஒரு வழக்காற்றின் தோற்றக் காலத்தையும் ஊகிக்கலாம். ஆதிமந்தியைப்போல என்று வெள்ளி வீதியும், வெள்ளி வீதியைப் போல என்று ஔவையாரும் சுட்டுவதனால், வெள்ளிவீதி இத்தகைய ஒரு புதுமைப்பெண் ஆவதற்கு ஆதிமந்தியின் வாழ்வறிவே தூண்டுதலாக இருந்திருக்க வேண்டும் எனவும் புதிய குமுமப் போக்கை உணர்கின்றோம்.

நாணிலும் செயிர்தீர் காட்சிக் கற்புச் சிறந்தது என்ற தொல் காப்பியத்தின்படி, நாணம் கடந்தது எனக் கருதத் தகும் இப் புறம் போக்கு அக்காலத்து ஆதிமந்திக்குப் பின், காதலர்களை நெடுங் காலம் பிரிந்திரங்கும் தலைவியரிடத்து எண்ணவடிவாயிற்று எனவும் கொள்ள இடனுண்டு. இவ்வகையான செந்தெளிவுக்கு ஆய்வுகாட்டியாக இருத்தலாலும், சங்கத்துக்குப் பின்வந்த வளர்ச்சி கட்கும் சங்கத் தெளிவு இன்றியமையாதது ஆதலாலும், சங்க விலக்கியக் காலமுறைப் பதிப்பு நம் எதிர்கால எழுத்துத் திட்டங் களுள் முதலுரிமை பெறல் வேண்டுமென அவாவுகின்றேன்.

# 29. நாட்டு அமுக்கிராக் கிழங்கின் பண்புகள்

[பேராசிரியர் ஜ. சாதிக்]

பரம்பரை வைத்திய முறையை இன்று உலக மக்களில் முக்கால் பகுதியினர் பின்பற்றுகின்றனர். குறிப்பாக இம் முறையில் மக்கள் மருத்துவப் பயனுள்ள மூலிகைகளைப் பயன்படுத்துகின்றனர். இம்முறை இன்று பரவலாக இந்தியா, சீனா, மலேயா, ஆப்பிரிக்கா, தென் அமெரிக்கா ஆகிய நாடுகளில் நடைமுறையில் இருந்து வருகின்றது. பரம்பரை வைத்தியம் சமய நம்பிக்கைகளுடனும், பரம்பரை முறைகளுடனும் பின்னப்பட்டுள்ளது.[1] அறுபது வகையான மூலிகைகள் மூட்டுவலிக்கு நிவாரணியாக உபயோகப்படுத்தப் படுகின்றன.[1] இவற்றுள் நாட்டு அமுக்கிராக் கிழங்கும் ஒன்றாகும்.

நாட்டு அமுக்கிராக் கிழங்கு கத்தரிக்காய்க் குடும்பத்தைச் சார்ந்தது. இது நீருள்ள பகுதிகளில் செறிந்து வளரக்கூடிய செடியாகும்; உலகில் பல பகுதிகளில் காணப்படுகிறது.[2] இதற்குத் தமிழில் பல பெயர்கள் உண்டு. அவைகளாவன: அமுக்கிராக் கிழங்கு, அமுக்கிரி, அமுக்குராவு அமுக்கிரா, அச்வகந்தி, அசுவம், அச்வகந்தா, இருளிச்செவி, கிடிச்செவி, வராகக்காணி, சமஸ்கிருதத்தில் இதனை அஸ்வகந்தா என்றழைக்கின்றனர். இந்தியில் இதற்குப் புணர் அல்லது அஸ்கரந்த் என்று பெயர். அரபிய மொழியில் ஹப்துல் என்று இதனைக் கூறுகின்றனர்.[3]

சித்த மருத்துவத்தில் இது சிறப்புமிக்க மருந்தாகும். பதார்த்த குண சிந்தாமணியில் இதன் மருத்துவப் பயன்கள் விளக்கப்பட்டுள்ளன.[4]

''கொஞ்சந் துவர்ப்பாங் கொடியகயஞ் சூலையரி
பிஞ்சுகரப் பான்பண்டு வெப்பதப்பு—விஞ்சி
முசிவுரு தோவும்போ மோகமன லுண்டா
மசுவகந் திக்கென் றறி''.

(இ - ள்.) கொஞ்சந் துவர்ப்புள்ள அமுக்கிராக் கிழங்கினால் க்ஷயம், வாதசூலை, வாரக்கரப்பான், பாண்டு, சுரம், வீக்கம், சலதோஷம் ஆகியவை போகும்.

அமுக்கிராக் கிழங்கைப் பொடி, நெய் முதலியன செய்து பயன் படுத்தினால் உறுதி, அழகு, நீண்ட ஆயுள் முதலியவைகள் உண்டாகும். இக் கிழங்கினைக் கட்டிகள் கரைய மேல் பூச்சாகப் பூசுகின்றனர். கிழங்கைப் பாலில் வேகவைத்து அலம்பி, உலர்த்திப் பொடி செய்து 2 முதல் 4 கிராம் வரை தேனில் கலந்து கொடுக்க, வளி ஐயம், இவற்றால் பிறந்த நோய்கள், வீக்கம், பசியின்மை, உடல் பருமன் இவை போம். நெய்யுடன் கலந்து கொடுக்க ஓய்ச்சல், பெருமூச்சும் போம். உடற்கு வன்மை தரும். விந்துவைப் பெருக்கும்.[3]

அமுக்கிராக் கிழங்குப் பொடி 1 பங்கும் கற்கண்டு மூன்று பங்கும் சேர்த்து வேளைக்கு 4 கிராம் காலை, மாலை உட்கொண்டு, 200 மி. லி. பசும்பால் சாப்பிட்டுவர நரம்புத்தளர்ச்சி நீங்கும், உடல் வன்மை பெறும், அழகு தரும்.

அமுக்கிராக் கிழங்கின் உயிர்ச்சத்துக்களை ஆராய்ந்த அறிஞர்கள் இதில் 13 வகையான ஆல்கலாய்டுகளும், வைத்தாபெரின்-எ, வைத்தனலாய்டுகளும், பிளேலினாய்டுகளும் அடங்கியுள்ளன (5—12) வென்றும், வைத்தாபெரின்—எ என்ற உயிர்ச்சத்தே மூட்டு வலியைக் குணப்படுத்தவல்லதென்றும் கண்டறிந்துள்ளனர். 13—14 வைத்தாபெரின்—எ என்ற சத்தானது நச்சுத்தன்மை வாய்ந்ததென்றும், புற்றுக் கட்டிகளைக் கரைக்குமென்றும் கண்டறிந்துள்ளனர். 15—16.

சித்த மருத்துவத்தில் பல நூறாண்டுகளாகப் பயன்படுத்தப்படும் அமுக்கிராக் கிழங்கானது மூட்டுவலி நிவாரணி என்றறிய

மூட்டுகளில் வீக்கம் உண்டாக்கப்பட்ட வெள்ளை எலிகளுக்கு வெவ்வேறு அளவில் வாய்வழியாகச் செலுத்தப்பட்டது. 1.5 கிராம்/கிலோ உடல் நிறை என்ற அளவே 40 விழுக்காடு வீக்கத்தைக் குறைப்பதாக அமைந்துள்ளது. இம் மருந்தானது செயல்பட மூன்று மணி நேரம் தேவைப்படுகின்றது. அமுக்கிராக் கிழங்கின் வீக்கத்தைக் குறைக்கும் தன்மை 3 மணி நேரம் நீடிக்கிறது. நாட்டு அமுக்கிராக் கிழங்கினைப் புரத உற்பத்தியைக் குறைக்கும் மருந்துகளான ஆக்டினோமைசின் டி, சைக்லோஹெக்சமைடு போன்ற மருந்துகளுடன் கலந்து கொடுக்கும்போது குறிப்பாக சைக்ளோ-ஹெக்சமைடுடன் சேர்ந்து 80 விழுக்காடு வீக்கத்தைக் குறைக்கின்றது. ஆகவே நாட்டு அமுக்கிராக் கிழங்கு புரத உற்பத்தியில் தூதுரைபோ நியூக்லிக் அமிலம் (MRNA) மொழி பெயர்க்கப்படும் செய்கையினைக் கட்டுப்படுத்துகின்றது என்று அறியப்படுகின்றது. மேலும் நாட்டு அமுக்கிராக் கிழஙகில் வைத்தாபெரின்—எ போன்ற ஸ்டிரோய்டுகள் இருப்பதால் இவை உயிரணுவில் உள்ள மூலக் கூற்றில் மாற்றங்களை உண்டுபண்ணி வீக்கமுறுக்கிச் செய்கையை வெளிப்படுத்துகின்றன. ஆகவே இது நவீன மருத்துவத்தில் மூட்டு வீக்கத்துக்குப் பயன்படுத்தும் டெக்மாமெத்தாசோன் என்ற ஸ்மீராய்டு மருந்தினை ஒத்துள்ளது.[17]

கேர்ராஜினின் என்ற இரசாயனப் பொருள் கடல்பாசியிலிருந்து தயாரிக்கப்படுகின்றது. இதனை உப்புநீரில் கரைத்து எலிகளின் காலில் செலுத்தும்போது வீக்கத்தை உண்டுபண்ணுகிறது. இவ் வீக்கமானது 4 மணி நேரத்தில் அதிக அளவை அடைந்து 24 மணி நேரத்தில் முற்றிலும் குறைந்துவிடுகிறது. இப்படி வீக்கத்தை உண்டுபண்ணும்போது குருதியில் உள்ள 24 புரதங்கள் மாறுதலடைகின்றன. இப் புரதங்களில் குறிப்பாக ஆல்வா-2-மேக்ரோகுளோபுளின் என்ற புரதம் வீக்கம் உண்டு பண்ணிய பிறகு 1 நாளில் குருதியில் 7 அல்லது 8 முறை அதிகமாகிக் காணப்படுகின்றது. வீக்கமுண்டான காலிலிருந்து எடுக்கப்படும் உப்புநீரில் இந்தப் புரதம் வீக்கமுண்டாக்கிய பிறகு 4 மணி நேரத்தில் அதிகமாகிக் காணப்படுகின்றது. பல்வேறு மருந்துகளை வீக்கம் உண்டாக்கப்பட்ட எலிகளுக்கும் கொடுத்து ஆல்பா—2 மேக்ரோகுளோபின் அளவைக் கண்டறியும்போது, இதன் அளவு

வீக்கத்தின் அளவை ஒத்துக் காணப்படுகிறது. நாட்டு அமுக்கிராக் கிழங்கானது வீக்கத்தைக் கட்டுப்படுத்துவதோடு ஆல்பா-2 மேக்ரோகுளோபின் அளவைக் குருதியிலும், வீக்கம் உண்டாக்கப்பட்ட பாதத்திலும் குறைக்கின்றது. வீக்கம் ஏற்படுத்தப்பட்ட எலிகளின் குருதியில் ஆல்புமின், பிரி—ஆல்புமின் என்ற புரதங்கள் குறைகின்றன. நாட்டு அமுக்கிராக் கிழங்கு செலுத்தும்போது இப் புரதங்களின் அளவும், குருதியில் உள்ள மொத்தப் புரதங்கள் அளவும் கூடுகின்றன. இம் மாதிரியான செய்கை தற்காலத்தில் கண்டுபிடிக்கப்பட்ட நீண்டகால மூட்டுவலிக்குப் பயன் அளிக்கவல்ல டி—பென்சில்லமின் போன்ற மருந்தின் செய்கையை ஒத்துக் காணப்படுகின்றது. மேத்தாக் போன்ற அறிஞர்கள் குருதியின் தாமிதநிலைப் புரதங்களை (Acute phase protins) மாறுதல் அடையச் செய்யும் மருந்துகள் மூட்டுவலிக்கு நிவாரணமளிப்பது மட்டுமன்றி மூட்டுவலிக்குக் காரணமாக இருக்கும் காரணங்களையும் கட்டுப்படுத்தும் என்று கூறியுள்ளார்கள்.[18] ஆகவே நாட்டு அமுக்கிராக் கிழங்கும் மனிதனின் மூட்டுவலிக்கும் (Rheumatoid arthritis) நீண்ட நாள் நிவாரணம் அளிப்பதாகவும், நோயின் அடிப்படைக் காரணிகளையும் கட்டுப்படுத்துவதாக அமையுமென்று எதிர்பார்க்கப்படுகின்றது.

வீக்கம் உண்டுபண்ணும்போது பலவித வேதியியல் மாற்றங்கள் நடைபெறுகின்றன. குறிப்பாக ஹிஸ்டமின், கைனின்கள், புரோஸ்ட்டாகிளான்டின் போன்ற வினைப்பொருள்கள் வீக்கமுண்டான இடத்தில் வெளிப்பட்டுக் குருதி ஓட்டத்திலும் கலக்கின்றன.[19] நாட்டு அமுக்கிராக் கிழங்கானது இவ் வேதியியல் பொருள்கள் உண்டாவதைத் தடுக்கின்றது. பொதுவாக ஆஸ்பிரின் போன்ற நவீன மருந்துகள் புரோஸ்டாகிளான்டின்களை (Prostaglandins) உண்டாவதைத் தடுக்கின்றன என்று மேல்நாட்டு அறிஞர்கள் கண்டுபிடித்துள்ளார்கள்.[20] நாட்டு அமுக்கிராக் கிழங்கும் கேர்ராஜினின் உண்டு பண்ணும் வீக்கத்தில் புரோஸ்டாகிளான்டின் தூண்டும் வீக்கத்தைக் குறைக்கின்றது. மேலும் புரோட்டாகிளான்டின்களை எலிகளுக்குச் செலுத்தும்போது ஆல்வா-2-மேக்ரோகுளோபின் புரதம் கல்லீரலில் உற்பத்தியாவதைக் கூட்டுகிறது.[21] ஆகவே நாட்டு அமுக்கிராக் கிழங்கு வீக்கநிலையில் உண்டாகும் ஆல்வா-2-மேக்ரோகுளோபின்

அளவைக் குறைப்பது புராஸ்டாகிளான்டின் உற்பத்தியைத் தடுப்ப தன் மூலம் செயல்படுத்துகின்றது.

மேலும் தாபிதநிலைப் புரதங்கள் கல்லீரலில் உற்பத்தியா கின்றன. இப் புரதங்களைத் தயாரிக்க நிறையச் சக்தி தேவைப்படு கின்றது. இச் செய்கைக்காகக் கல்லீரலில் காணப்படும் நுண் உயி ரணுவின் அங்கமான மைட்டோகாண்டிரியாவில் மெக்னீசியம் தூண்டும் ஏடிபேஸ் ($Mg^{2}+$ dependent atpase) என்ற நொதி வீக்கநிலையில் அதிகரிக்கின்றது. இதனை நாட்டு அமுக்கிராக் கிழங்கும், நவீன மருந்தான ஆஸ்பிரினும் குறைக்கின்றன.[22]

மேலும் எலிக்காலில் வீக்கத்தை உண்டுபண்ணும்போது வீக்க முற்ற இடத்தில் வெள்ளணுக்கள் வந்தடைகின்றன. வெள்ளணுக்கள் வீக்கக் காரணிகளை எதிர்த்துச் செயல்படும்போது வெள்ளணுக்கள் சிதைகின்றன. வெள்ளணுக்கள் தன்னுள் லைசோசோம் (Lysosomes) என்ற திசுக்களைச் சேதப்படுத்தும் நொதிகளடங்கிய அணுக்களைக் கொண்டுள்ளது. வெள்ளணுக்கள் அழியும்போது லைசோசோம்களும் சேதமடைந்து வீக்க அளவை அதிகரிக்கத் தூண்டுகோலாக இருக் கிறது. மூட்டுவலி நிவாரணத்திற்குரிய தற்கால மருந்துகள் லைசோ சோம்களின் அங்க அமைப்பை வலுப்படுத்தி இவைகளின் அழிவைத் தடுக்கின்றன.[23] இதுபோன்றே நாட்டு அமுக்கிராக் கிழங்கும் லைசோசோம்களின் சவ்வு அமைப்பை நிலைப்படுத்துவதாக அமைந் துள்ளது.[24]

ஆகவே நாட்டு அமுக்கிராக் கிழங்கானது புரோஸ்டாகிளான் டின்கள் போன்ற வீக்கக்காரணி வேதியியல் பொருள்களைக் குறைப்ப தாலும், தாபிதநிலை புரதமான ஆல்பா-2-மேக்ரோகுளோபினைக் குறைப்பதாலும், இப் புரதங்கள் உண்டாக்கவேண்டிய சக்தியைக் குறைப்பதாலும், வீக்கம் பரவுவதற்குக் காரணியான லைசோசோம் களின் அங்க அமைப்பை நிலைப்படுத்துவதாலும் வீக்கத்தைக் குறைப் பதோடு மூட்டுவலிக்கு ஒரு சிறந்த நிவாரணியாக அமைந்துள்ளது.

இதுபோன்ற பல்லாயிரக்கணக்கான மூலிகை மருந்துகள் உயிர்வேதியியல் அடிப்படையில் ஆராயப்படாமல் இருக்கின்றன.

இம்முறையில் ஆராய்ந்தால் இத் தமிழகப் பொக்கிஷங்கள் சித்த வைத்தியத்தில் மட்டுமல்லாது நவீன மருத்துவத்திலும் பயன்படுத்தப் படும் என்பது உறுதி. இத்தகைய முயற்சியிலேயே தற்போது தமிழ்ப் பல்கலைக்கழகம் முனைந்துள்ளது.

## REFERENCES


1. Latif. A. Ismail, J., Omer. M., said I. M. and Kadri. A. (1980), In ‘Proc. Med. plants symp. Natl. Univ., Singapore.
2. Chadha, Y. C (1976) *In*: The Wealth of India. Raw Materials Vol. X. P. 581, CSIR New Delhi, India.
3. கா. ச. முருகேச முதலியார் (1957), பொருட் பண்பு நூல், பயிர் வகுப்பு குணபாடம் (மூலிகை வகுப்பு) கவர்மெண்ட் பிரஸ், பக்கம் 20.
4. காசிம் முகைதீன் (1934), பதார்த்த குண சிந்தாமணி, பூமகள் விலாச பதிப்பகம், சென்னை. பக்கம் 138.
5. Power, F. B. and Salway, A. H. (1911), J. Chem. Soc. *99*: 490.
6. Majumdar, D. N. and Guha P. C (1933) J. Indian Inst. Sci. *16* A 29.
7. Majumdar, D. N. (1955), Indian. J. Pharm. *17*: 158.
8. Covello, M. and Ciampa (1960), J. Chromatog. 3 : 591.
9. Rother, A., Atal, ct., Gold, D. and Schwarting, A. E. (1961) J. Chromatog. *5*: 178.

10. Schwarting, A. E., Bobbitt, J. M., Rother, A., Atal C. K., Khanna K. L. Leary, J. P. and Walter. w. c. (1963), Lloydia, *26* (4) : 258.

11. Srivastava, S. K., Iyer, S. S. and Ray, G. K. (1960), Indian. J. Pham. *22* : 94.

12. Dhalla, M. S., Sastry, M. S. and Malthotra, C. 4. (1961), J. Pharm. Sci. *50*: 876.

13. Sethi, P. D. and Sankara Subramanian, S. (1972), Indian. J. Pharmacol. *4* : 30.

14. Sankara Subramanian. S. and Vadanthan, T. N. C. (1977), Indian. J. Pharm. Educn. Prof. G. P. Srivastava Memorial Number, Jan. 58.

15. Sadique. J., Somasundaram, S., Anbalagan, K., Hazeema begum, V., Selvaraj, S., Subramaniam, A., Sammathu, M., and Thas; J. (1980) *In* : Ashwagendha—a remedy for Arthritis. Gujarat Ayurved Univ. Publications, Jamnagar (a monograph 106 pages).

16. Anonymous (1934) In: Vaidya Rathina surukkam—360, p. 28 (Rangasamy Mudaliar and sons, A. ed.) Poomagal Vilas Press, Madras.

17. Anbalagan, K. (1983) Ph. D. Thesis. Madurai Kamaraj University, Madurai.

18. Maddock, J., Rees, P., Holly, F. and Aylward, M. (1975) Curr. Med. Kes. Opin. *3* : 286.

19. Arrigori—Martelli, E. (1977) *In*: Inflammations and anti—inflammatories, P. 205. Spectrum Publications, Inc., New York.

20. Higgs, G. P., Harvey, E. A., Ferreira, S. H. and Vane, J. R. (1976) *In*: Advances in Prostaglandin and Throboxane Research (Samuelsson, B. and Paoletti, R. eds) I. p. 105 Raven Press. Now York.

21. Anbalagan, K. and Sadique, J. (1983), Biochem. Med. (In press).

22. Somasundaram, S. and Sadique, J. (1982), Biochem. Med. 27 : 266.

23. Vane, J. R. (1972) In : Inflammations—Mechanism and control (lepow, I. H. and ward, P. H. eds), p 261 Academic press, New York and London.

24. Hazeena Begum, V. and Sadique J. (1983), Biochem. Pharmacol. (Submitted for publication).

# 30. திருக்குறட் சிதறல்

[அறிஞர் கு. திருமேனி]

திருக்குறளின் காலத்தை உறுதியாக வரையறுத்துக் கொண்டது போன்று நம் புலவர் குழு தொல்காப்பியம் போன்ற நூற்களின் காலத்தையும் அறுதியிட்டுவிட்டால் நல்லது. கால எல்லை ஏதாவது குறிப்பிட்ட ஓரிடத்தினைக் காட்டவேண்டும். அவ்விடம் ஆராய்ச்சி செய்வோர் தடுமாறி விழாத இடமாக இருந்தால் நன்று. 28ஆம் எண்ணுள்ள பாம்புக் கோட்டுப் பஞ்சாங்கத்தில் திருவள்ளுவர் யாண்டை '2015' என்று சேர்த்துள்ளனர். இஃது இனி காலத்தைப் பொறுத்து உறுதியான செய்தி. இதில் மாறுபட்டோரைப் புறவினத்தர் என்று ஒதுக்குவதா? அல்லது தக்கவாறு அவர்கள் மாறுபட்ட இடங்கட்கு விடை தந்து உண்மையை நிலைநாட்டுவதா? இதுபற்றி நமக்குக் கடமையொன்றுண்டென்று நினைக்கிறேன்.

திருக்குறள் முதல்நூலே என்ற கருத்தும், பல நூல்களிலுள்ள பல கருத்துகளின் தொகுப்பு என்ற கருத்தும், திருக்குறட் கருத்துகளே பல நூல்களிலும் பல மொழி நூல்களிலும் சிதறிக் கிடக்கின்றன என்ற கருத்தும் நிலவுகின்றன.

வியாசர் காலம் திருவள்ளுவர் காலத்திற்கு முன்னோ பின்னோ என்பது தெரியாது. வியாச பாரதத்தில் குறிப்பாகச் சாந்திபருவத்தில் திருக்குறட் கருத்துகள் அப்படி அப்படியே கொட்டிக்கிடக்கக் காணலாம். கொட்டிக் கிடப்பதைச் சுட்டிக்காட்டினாரும் உண்டு. வியாச பாரதம் வடமொழியின் பாற்பட்டது என்றாலும் கருத்துகளாலும் உவமை உருவகம் முதலியவற்றாலும் ஒன்றாகவே உள்ளன.

சாணக்கியர் காலம் திருக்குறளுக்கு முன்னோ பின்னோ தெரியாது. அவர்தம் பொருள் நூலில் திருக்குறட் கருத்துகள் அப்படி அப்படியே உதிர்ந்து சிதறிக் கிடக்கக் காணலாம். இவற்றைக் குறித்துச் சென்றாரும் உண்டு.

நாலடியார், சிந்தாமணி, நீலகேசி, சூளாமணி போன்ற சமண நூல்களில் திருக்குறட் கருத்துகளே தம் சமயக் கருத்துகள் போல நூல் எங்கணும் விளங்கக் காணலாம்.

தேவாரம், திவ்யப் பிரபந்தம் போன்ற சைவ வைணவ நூல்களிலும் திருக்குறட் கருத்துகள் சிதறிக் கிடக்கக் காணலாம்.

இந்த நூல்களின் சமயங்கள் என்னென்னவோ அவையெல்லாம் திருக்குறட் சமயங்களா? அல்லது எல்லாவற்றையும் உள்ளடக்கிய தமிழர் சமயமான திருக்குறட் சமயத்திலிருந்து அவை வேண்டியவாறு முகந்துகொண்டனவா? தமிழர் சமயத்திற்கு, என்றுமே தமிழர் சமயமென்றுதான் பெயருண்டா? வேறு ஏதேனும் பெயரிருந்து மாறிவிட்டதா?

நம் புலவர் குழுவில் இடம்பெற்ற பெருமக்கள் சைவர், வைணவர், முகமதியர், கிறித்தவர், தமிழ்ச் சமயத்தவர், சமயமற்றோர் என்ற பாகுபாட்டில் அடங்கியவராவர்.

இனத்தில்கூட ஐயர், பிள்ளை, சோழியர், முதலியார், கள்ளர், வன்னியர், தேசிகர், நகரத்தார் என்ற பாகுபாட்டினர் இடம் பெற்றுள்ளனர்.

இவ்வகைச் சமயத்தார்க்கும் இத்துணைச் சாதியார்க்கும் திருக்குறள் பொதுவானதா? பொதுவானது என்ற கோட்பாட்டில் இலங்குகின்றதா? புலவர் குழுவில் சமண சமயத்தவரும், புத்த சமயத்தவரும் இடம்பெற்றதாகத் தெரியவில்லை. புலவர் குழு திருக்குறட் கருத்தரங்கு ஒன்று நடத்தினால் பல செய்திகள் கிடைக்கும்.

திருக்குறளுக்குப் பலர் உரை வகுத்துள்ளனர். பலர் பல குறள்களுக்குப் பலவாறு உரை கூறியுள்ளனர். இன்னும் உரையாசிரியர்கள் தோன்றிக்கொண்டே இருக்கின்றனர். உண்மையுரை

எதுவென்று புரிந்துகொள்ள முடியவில்லை. என்றாலும் பரிமே லழகர் பல குறட்பாக்களுக்கு நமக்கு மாறுபட்ட உரை எழுதியிருந் தாலும் பெரும்பான்மைபற்றி அவருரையை நல்லவுரையாகக் கொள்ளலாம் என்ற கருத்தும் நம்மிடையேயுண்டு.

திருக்குறள் அனைத்திற்கும் உரை முழுதுணர்ந்தாராக உரை கூறியும் விளக்கியும் உள்ளார் பலராவர். ஆனால் திருக்குறள் சில வற்றிற்காவது ''உரை விளங்கவில்லை; வல்லார்வாய்க் கேட்டுணர்க'' என்று எழுதினாரோ கூறினாரோ உலகத்தில் இல்லை. காரணம் திருக்குறள் அவ்வளவு எளிய நூல் என்ற கருத்து அவர்கட்கு.

திருக்குறளில் பாயிரம் என்ற பெயரில் நான்கு அதிகாரங்கள் உள்ளன. பரிமேலழகரும் அவற்றைப் பாயிரமென்றே கூறுகின்றார். தொல்காப்பியப் பாயிரத்திற்கு விருத்தி உரைத்தது போன்று திருக் குறட் பாயிரத்திற்கு ஒன்று இல்லை. திருக்குறட் பாயிரம் பொதுப் பாயிரத்தைச் சேர்ந்ததா? அன்றிச் சிறப்புப் பாயிரத்தைச் சேர்ந்ததா? தெரியவில்லை. பரிமேலழகர் பாயிரத்தின் இயல்பு முதலியபற்றிக் கூறி விளக்கினாரல்லர். பாயிரத்தில் ஆக்கியோன் பெயர் வழி எல்லை, நூற்பெயர். யாப்பு, நுதலிய பொருள் கேட்போர், பயன் என்ற எண் பொருளில் ஏதாவது ஒன்றாயினும், நான்கு அதிகாரங் களிடத்து இடம்பெற்றிருக்க வேண்டுமே! இதுபற்றி ஐயப்பட்டு ஆராய்ந்தாரும் உண்டு. ஆனால் அவ்வாராய்ச்சி 'கொடிநிலை கந்தழி' என்ற தொல்காப்பிய நூற்பாவிற்குப் போய் முடிந்துவிட்டது. அந்த நூற்பாவும் விளங்காத ஒன்று.

நம்மவரிடத்தில் ஒரு நல்ல பழக்கமுண்டு. ஒருவர் ஒருரை கூறினால் அதனைப் புரிந்தோ புரியாமலோ 'நல்லவுரை நல்லவுரை' என்று பாராட்டிவிடுவது ஒரு நாகரிகம். பின்னர் அவ்வுரை ஒரு குழுவுரையாகி நாளடைவில் உண்மையுரையாகவும் ஆதலுண்டு. அவ்வுரையே வேறு ஒரு குழுவால் மறுக்கப்பெறுதலும் உண்டு.

திருக்குறள் பொதுமறையல்லவா? இப் பொதுமறையில்,

''கொல்லான் புலாலை மறுத்தானைக் கைகூப்பி
எல்லா உயிரும் தொழும்'' (அறத். 260)

இன்றும் பார்ப்பனர், வேளாளர், முதலியார் போன்ற இனத்தவருள் பலர் கொல்லுவதும் இல்லை, புலாலை உண்ணுவதும் இல்லை. இவர்களை உயிரினங்கள் கைகூப்பித் தொழுகின்றனவா? தொழுவது புலப்படவில்லையா? இக் குறளுக்குப் பொருள் வேறுண்டா? மயக்க மற இக்குறளைப் புரிந்துகொள்வது எவ்வுரை கொண்டு? இங்ஙனமே, கொன்றுண்பவர்க்குப் பொதுமறையிடத்துத் தொல்லை.

''வித்து மிடல்வேண்டுங் கொல்லோ விருந்தோம்பி
மிச்சில் மிசைவான் புலம்'' (அறத். 85)

''தெய்வம் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யு மழை'' (அறத். 55)

''ஆரா வியற்கை அவாநீப்பின் அந்நிலையே
பேரா வியற்கை தரும்'' (அறத். 370)

''உறுதோ றுயிர்தளிர்ப்பத் தீண்டலால் பேதைக்
கமிழ்தி னியன்றன தோள்'' (காமத். 1106)

''சுவைஒளி ஊறுஓசை நாற்றமென் றைந்தின்
வகைதெரிவான் கட்டே யுலகு'' (அறத். 27)

இவை புரிந்தது போன்று புரிந்துகொள்ள முடியாத குறள்கள். இவ்வாறு பல. பதவுரை சொல்லலாம். இவற்றிற்குப் பொருள் உணர்த்த முடியாது. உணர்த்த வல்லவர் உணர்வுடைய சான்றவராதல் வேண்டும்.

தொல்காப்பியம் 'வடவேங்கடம் தென்குமரி'' என்ற எல்லைக் குட்பட்ட தமிழ்கூறு நல்லுலகத்திற்கு இலக்கணம் கூறிய நூல். அது வழக்கையும் செய்யுளையும் அடிப்படையாகக் கொண்டது. தமிழர் சமய நூலாய திருக்குறளும் தமிழ்நாட்டில் தமிழரால் தமிழ் மக்கட்கு இயன்றது.

தொல்காப்பியர் தமிழகத்தை நானிலமாகப் பகுத்து அவ்வந் நிலங்களில் வாழும் மக்கட்கு.

''தெய்வம் உணாவே மாமரம் புள்பறை
செய்தி யாழின் பகுதியொடு தொகைஇ
அவ்வகை பிறவும் கருவென மொழிப'' (அகத். 20

தமிழ்மக்கட்குச் செய்த தொல்காப்பியத்திற்கும் திருக்குறளுக்கும் மாறுபாடுடைமையைக் காணலாம்.

பாலைநில மக்கட்கும், நெய்தல்நில மக்கட்கும் தொழிலும் வருவாயும் வாழ்க்கைக்குரிய பொருளும்பற்றிக் கூறும்போது பாலை நிலத்தார்க்கு ஆறலைத்தலும் ஆறலைத்த கொள்ளைப் பொருளும் உரிய பொருளாகும் என்பர் தொல்காப்பியர். நெய்தல்நில மக்கட்குத் தொழிலும் உண்பொருளும் வாழ்பொருளும் கூறும்போது கடல் வாழ் மீனினங்களைக் கொன்று வாழும் வலை வளப்பொருள் என்று கூறுகின்றார்.

வள்ளுவரோ, கள்ளாமை, கொல்லாமை, புலால் உண்ணாமை போன்ற அறங்களைக் கூறுகின்றார். வள்ளுவர் கூறும் இச் செய்திகளிற் சில புலவர் குழுவுக்கே மாறுபட்டுள்ளது. இவற்றை யெல்லாம் ஆராய்ந்து முடிவு கூறும் பணி நமக்கிருக்கின்றது.

நாம் இன்று சாதியில்லை, சமயமில்லையென்று பொதுமை பேசி மறைந்தொழுகுகின்றோம். தொல்காப்பியர் 'ஆயர் வேட்டுவர்'. 'அறுவகைப்பட்ட பார்ப்பனப் பக்கமும்' (புறத். 15), 'வேளாண் மாந் தர்' (மரபியல் 81), 'வைசிகன்' வேந்து விடுதொழில் (மரபியல் 82), அந்தணாளர்க்கு (மரபியல் 83) என்றெல்லாம் நால்வகை வருணத் தாரையும் அவரைச் சார்ந்த பலரையும் கூறுகின்றார். வள்ளுவரும் 'மறப்பினும்' (குறள் 134), 'அந்தணர் நூற்கும்' (குறள் 543) 'ஆப யன் குன்றும்' (குறள் 560) என்னும் மேற்குறித்த குறள்களில் பல இனத்தவர்களைக் கூறுகின்றார். இந்த இனப் பாகுபாடு தமிழகத்துட் பட்டதா அன்றி வேறிடத்தினின்றும் வந்ததா? ''மறையோர் தேஎத்து மன்றல் எட்டனுள்'' (தொல். களவியல் 1) என்ற இடத்தில் கூறப் பெறும் மறையோர் தேயம் வேறா ? அத் தேயம் எது ? வள்ளுவரும் தொல்காப்பியரும் நம்மவர்தாமா ? யாருக்குச் சொன்ன இலக்கண இலக்கியங்கள் இவை ? இக் குழப்பமெல்லாம் தெளியும் வகையில் திருக்குறளுக்கும் தொல்காப்பியத்திற்கும் விளக்கமுரைப்பார் உள ராயின் இரு நூலினையும் நம் வழிமுறையினர்க்கு விளக்கி வழி காட்டியவர்கள் ஆவோம்.

# 31. எது அறம்?

[பேராசிரியர் அ. மு. பரமசிவானந்தம்]

உலகில் உயிரினம் தோன்றிய நாள்தொட்டே வாழ்வியலும் தொடங்கிவிட்டது. உயிரினத்தின் உச்சியில் வாழும் இன்றைய மனிதன் அந்த வாழ்வினைப் பகுத்துப் பகுத்துப் பார்த்து அதை அறம், பொருள், இன்பம் என மூன்றாகப் பிரித்தான். அதிலும் அறத்துக்கு முதலிடம் கொடுத்து, அதன் வழியேதான் பிற பொருளும் இன்பமும் பெற இயலும் எனக் கண்டான். புறநானூறு இதைச் 'சிறப்புடை மரபில் பொருளும் இன்பமும், அறத்து வழிப்படூஉம் தோற்றம் போல' (புறம். 31) என விளக்கிக் காட்டுகிறது. எனவே வாழ்வியலுக்கும் அதில் பெறவேண்டிய பொருளுக்கும் இன்பத்துக்கும் அறமே அடிப்படையாகின்றது. ஆயினும் அந்த அறத்துக்கு விளக்கம் காணப்புகுவோமாயின் நாம் பல துறைகளில்—பல நெறிகளில் நுழைய வேண்டியுள்ளது. 'எது அறம்?' என்ற வினாவுக்கு விடைகாண வேண்டியுள்ளது. இயன்றவரை முயல்வோம்.

சீத்தலைச் சாத்தனார் அறத்தின் இலக்கணத்தினை,

"அறமெனப்படுவது யாதெனக் கேட்பின்
மறவாது இதுகேள் மன்னுயிர்க் கெல்லாம்
உண்டியும் உடையும் உறையுளும் அல்லது
கண்டது இல்'' (25 வரி 228-31)

என மணிமேகலையின் வாயிலாகவே சொல்லுகிறார். ஆனால் இந்த நூற்றாண்டில் வாழ்ந்த பாரதியாரோ,

"அன்ன சத்திரம் ஆயிரம் வைத்தல்
ஆல யம்பதி னாயிரம் நாட்டல்

அன்ன யாவினும் புண்ணியம் கோடி
ஆங்கோர் ஏழைக்கு எழுத்தறி வித்தல்''

என்று பாடினார். வள்ளுவரோ,

''பொய்யாமை பொய்யாமை ஆற்றின் அறம்பிற
செய்யாமை செய்யாமை நன்று'' (296)

என எல்லா அறத்துக்கும் மேலாகப் பொய்யாமையினைச் சுட்டிக் காட்டி, பின் அதற்கு மேலாக,

''ஒன்றாக நல்லது கொல்லாமை மற்றதன்
பின்சாரப் பொய்யாமை நன்று'' (323)

என்று பொய்யாமைக்கு மேலாகக் கொல்லாமையினைச் சொல்லு கிறார். எனவே எதை நாம் அறமெனக் கொள்வது எனத் தடுமாறு கிறோம். எனினும் வள்ளுவரும் பிறரும் தெளிந்த அறத்தினை நமக்குக் காட்ட மறக்கவில்லை என்பதையும் பின் காண்போம்.

அறம் என்ற சொல்லுக்கு, தருமம், புண்ணியம், தகுதி, சமயம், ஞானம், நோன்பு, இயமன் போன்ற பொருள்கள் இருப்பதாக அறி கிறோம். எல்லாச் சொற்களும் உற்று நோக்கின் உயிரொடு— அதன் வாழ்வோடு பொருந்திய நலம் காணும் வகையில்தான் அமை கின்றன என்பது தெளிவாகின்றது. வாழ்வின் அறத்தினைக் கண்டு அறம் வழங்குபவன் இயமன் ஆகின்றான்.

ஆங்கிலப் பேரகராதியாகிய Encyclopaedia Brittanicca, 'Charity' என்ற அறத்துக்கு நேரான ஆங்கிலச் சொல்லுக்குப் பல பக்கங்கள் விளக்கங்கள் தந்துள்ளது. நான் மேலே காட்டியபடி அதற்குள்ள பல்வேறு விளக்கங்களை அது சுட்டிக்காட்டி, நாடு தோறும், காலந்தொறும், சமுதாயந்தொறும், சமயந்தொறும் அந்த அறம் 'அறம்' பெறு பொருள்களையெல்லாம் விளக்கி, முடி வாகச் சமுதாய வாழ்வு தன்னிறைவு பெற்று இன்பத்தில் வாழச் செய்வது அறமாகலாமோ என்ற எண்ணத்தில் முடிவு தருகின்றது. பண்டைய வள்ளுவர் காலத்திய மேலை நாட்டு கிரேக்க, ரோம நாடுகளின் வழக்காறுகளையெல்லாம் அது விளக்கிக் காட்டுகிறது.

அவற்றுள் ஒரு சில மட்டும் இங்கே எடுத்துக்காட்ட நினைக்கின் றேன்.

## CHARITY

Few words have suffered greater changes either in meaning or in application than the word "Charity". It represents both a personal and a social endeavour to ameliorate the conditions which prevail in society. The endeavour should be founded on an intelligent examination of the factors that go to make up our social and industrial life and should be guided by a definite purpose. Most people have some sort of theory as to what is just and right in our relations with our fellowmen, but it is often so vague and undefined that its application is ineffective if not positively harmful. Most of the words used in Greek, Roman or Hebrew literature to signify good will are primarily words expressive of the affections, of the relations exising between parents and children or between husband and wife. Caritas or charity on the other hand had a somewhat different meaning and referred rather to the relatiou of the individual to those outside his family; in the first instance caritas signified a high price, thus dearness.

In the early Christian period almsgiving has this meaning applied to a wide range of actions and contracts. The word Caritas, charity or love, gradually assumes a higher meaning and represents an ideal social relation; e.g., in such phrases as "love

of man ". It has no necessary relation to relief or alms. It may mean a consideration shown for the welfare of others either individually or generally, although as a matter of fact charity has largely concerned itself with the help of the class usually called the poor, and with problems of distress. Relief need not, however, be an essential part of charity or charitable work ; it is only one method by which those who have the means at their disposal can come to the assistance of others. The history of charity is a history of many social and religious theories, influences and endeavours that have left their mark alike upon the popular and cultivated thought of the present day. Inconsistencies of charitable effort may be accounted for by the evolution of society itself, by the growth of the educated social instinct.

Charity and in its broadest sense—philanthrophy —is thus becoming an accepted part of social politics.

It will be readily understood that a history of charity would be a history of all the social and religious forces which have left their mark upon past generations in many countries. The growth of the habit of charity really represents a gradally educated social instinct. Every investigation into the conditions of social life has necessitated some sort of change in our view of charity, and legislation, as expressed in practical administration, has so removed the recipients of such charity from the sphere of what was formerly

understood by charitable action that no charity can now be considered without reference to public relief.

The Encyclopaedia Britannica
XIV Edition. *Vol. 5. Page. 248.*

இவைகளையெல்லாம் எண்ணும்போது 'எது அறம்?' என்ற தடுமாற்றம் நமக்கு ஏற்படுவது இயல்பேயாகும். ஆயினும் பல அறங்களைச் சுட்டிச் சுட்டிக்காட்டி, அவை இடந்தொறும், காலந்தொறும், சமுதாயந்தொறும் மாறுவனவாயினும், அவற்றுக் கெல்லாம் மேலாக உண்மையான—நிலைத்த—தெளிந்த—தேவை யான அறம் இது என்பதைச் சுட்டிக் காட்டாமல் நம்மை வள்ளுவர் திண்டாட வைக்கவில்லை. அதையும் பின் காண்போம்.

திருக்குறளை அறம், பொருள், இன்பம் என்று மூன்று பகுதிகளாகப் பிரித்து, முதற்பகுதிக்கு 'அற'மென்றே பெயரிட்டிருக் கிறார்கள். இதை வள்ளுவரோ அன்றிப் பின் வந்தவர்களோ பிரித்தார்களா என்ற ஆராய்ச்சி நமக்கு இங்கே தேவையில்லை. ஆனால் 'இல்லறம் துறவறம்' என்று இரண்டு அறங்களை முதல் பகுதியில் வள்ளுவர் வற்புறுத்துகிறார். 'அறம் எனப்பட்டதே இல்வாழ்க்கை' என்கிறார் அவர். அப்படியாயின் துறவறம் அறத்தின்பாற்பட்டதாகாதா என்ற ஐயம் எழலாம். ஆனால் துறவறவியலின் முதல் அதிகாரமாகிய அருளுடைமையில் 'அருளாதான் செய்யும் அறம்' என்ற தொடருக்குப் பரிமேலழகர் 'பிற அறங்களுக்கெல்லாம் அருளுடைமை மூலம் என்பது பெற்றாம்' என்று விளக்குகிறார். அதற்கு 'உயிர்கண்மாட்டு அருள் செய்யாதவன் செய்யும் அறம்' எனவும் பொருள் காணு கின்றார். எனவே துறவறத்தின் அடிப்படையாகிய அருளும் அறநெறிபற்றியே நிற்கின்றது என்பது தெளிவு. இதை நோக்கும் போது அறம் சமுதாயத்தினையும் அதனைச் சார்ந்த உயிர்களையும் பற்றியது என அமைகின்றது. இந்த அறத்தின் நிலையினைப் பின்னும் சில அதிகாரங்களால் விளக்குகிறார் வள்ளுவர். அத் துற வறத்தில் வருவனவே நாம் மேலே கண்ட பொய்யாமையும் கொல்லாமையும். எனவே 'அறன் எனப்பட்டதே இல்வாழ்க்கை'

என்று கூறியவர் இங்கே இப்படி மாறுபடுவாரா? அதிலும் வள்ளுவர் அவ்வாறு வழி தவறுவாரா? என எண்ண வேண்டியுள்ளது.

திருவள்ளுவர் பலவிடங்களில் அறத்தைச் சுட்டுகிறார்.

"சிற்றின்பம் வெஃகி அறனல்ல செய்யாரே
மற்றின்பம் வேண்டு பவர்" (220)

என்றும்,

"மறந்தும் பிறன்கேடு சூழற்க சூழின்
அறஞ் சூழும் சூழ்ந்தவன் கேடு" (204)

என்றும் இல்லறவியலில் பலவிடங்களில் அறத்தினைச் சுட்டுகிறார், மற்றும் மேல் துறவறவியலில் அருளோடு அறத்தினைப் பிணைத்தமை போன்றே இல்லறத்தில் அன்பொடு அறத்தினைப் பிணைக்கின்றார் 'அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை பண்பும் பயனும் அது' (45) 'அறத்திற்கே அன்பு சார்பென்ப அறியார் மறத்திற்கும் அஃதே துணை' (76) என்பன போன்றவை ஒரு சில. இவைபற்றிய விளக்கங்களெல்லாம் இங்கே நமக்குத் தேவையில்லை, ஆனால் இவற்றால் வள்ளுவர் முன்னுக்குப்பின் முரண்பட்டார் என்று கூற இயலாது என்பதையே நாம் எண்ணிப் பார்க்க வேண்டும். மக்களாகப் பிறந்தார் எந்தெந்த நெறிபற்றி வாழினும் அந்தந்த நெறிக்குரிய அறத்தின் வழியே நடக்க வேண்டும் என்பதையே அங்கங்கே அவர் வற்புறுத்துகிறார் என்பது நோக்கின் உண்மை விளங்கும். யாவராயினும் அவர் வாழ்வில் அறம் ஊடுருவிச் சென்று அவர் செயலுக்கேற்ப அவரை உயர்த்தவோ தாழ்த்தவோ அன்றி ஆக்கவோ அழிக்கவோ செய்யும் என்று எச்சரித்து, ஒவ்வொருவரையும் அறவாழ்வினை மேற்கொள்ளச் சொல்லுகிறார் வள்ளுவர். உண்மையில் அவனே தெய்வநெறி பற்றியவன் என்பதை விளக்கவே 'அறவாழி அந்தணர்' என்று இறைவனைக் குறிக்கிறார். மற்றோரிடத்தில் 'அறவோர் யார்?' என்ற வினாவினைத் தாமே எழுப்பி, 'அந்தணர் என்போர் அறவோர் மற்றெவ்வுயிர்க்கும் செந்தண்மை பூண்டொழுக லான்' (30) என்ற விடையால் விளக்கமும் தருகிறார். இக் குறள் அடுத்து வருகின்ற அறன் வலியுறுத்தலுக்கு உறுதுணையாக நின்று அறத்தை விளக்கு

கின்றது. இது நீத்தார் பெருமையின் இறுதிக் குறளாக வைக்கப் பெற்றுள்ளமையின் பரிமேலழகர் இந்த இலக்கணத்தினைத் துறவறத்தாருக்கு ஏற்றிக் கூறுகின்றார். அது பொருந்தாது. துறவு என்பதும் தவம் என்பதும் வள்ளுவம் வாய்மொழிப்படி 'உற்றநோய் நோன்றல் உயிர்க்கு உறுகண் செய்யா' நிலையில் அமைவன. எனவே அந்த அடிப்படையில் கண்டாலும் எவ்வுயிர்க்கும் செந்தண்மை பூணில் பொருந்தும் அதுவே அறமுமாகும்; மணக்குடவர் உரை அதற்குச் சற்றே ஏற்புடைத்தாக உள்ளது.

இவைமட்டுமின்றி பின் பொருட்பாலிலும் பலவிடங்களில் அறம்பற்றிச் சுட்டுகிறார். 'அறத்திற்கு ஆதியாய் நின்றது மன்னவன் கோல்' (543) என்று அறங்காக்க வேண்டியவன் அரசன் எனச் சுட்டுகிறார். 'பிறர் நாணத்தக்கது தான் நாணானாயின் அறம் நாணத்தக்க துடைத்து' (1018) என்ற குறளால் தன் சொல்லால்—தவறால் பிறர் நாணத்தக்கதைத் தான் நாணிச் செய்யாதிருப்பின் அதுவே சமுதாய நலமென்றும் அன்றி விஞ்சுவானாயின் அவனைக் கண்டு அறம் நாணும் என்று சுட்டி, அத்தகையார் செயலால் சமூகம் அழியும் என்பதையும் சுட்டுகிறார். இவ்வாறு பலவிடங்களில் உயிர் வாழ்வின் நாடியாக அறம் அமைந்துள்ளதை இன்னும் பலவிடங்களில் சுட்டுகிறார். விரிப்பிற் பெருகும். சமுதாயத்தில் உள்ள பல அறநெறிகளை 'அறநெறிச்சாரம்' போன்ற நூல்களில் காணலாம். அவை யாவும் வரையறுக்கப் பெற்றனவே.

வள்ளுவர் அறம் என்பதை எவ்வாறு விளக்குகிறார் என்று இனிக் காண்போம். மேலே இல்லறம் துறவறம் என்ற இரண்டிடத்தும் கண்ட குறட்பாக்களில், அவரவர் நிலையில் நின்று ஆற்ற வேண்டிய அறம்பற்றிக் குறித்தன யாவை எனக் கண்டோம். ஆயினும் 'அறன் எனப்பட்டதே இல்வாழ்க்கை' என்ற ஏகாரம் தந்து விதந்தது ஏனோ என்ற ஐயம் எழும். ஆம்; துறவறத்தான் தன்னைப் பற்றியே நினைத்து, தன் உயிரின் விடுதலையினையே விழைந்து, உலகைத் துறந்து, சமுதாயத்துக்கு வேறாக நின்று ஒதுங்கி வாழ்பவன். அவனைக் காட்டிலும் துன்ப இன்பங்களை இணைந்து ஏற்று, எல்லாரும் எல்லாமும் பெற்று வாழ, தானும் வாழும்

நிலையில் உள்ள இல்லறத்தான் ஏற்றமுடையவன்தானே? அதனாலே ஏகாரம் கொடுத்துப் பிரித்துக் காட்டியது தவறு அன்றே? அதனாலேயே இல்வாழ்க்கை என்னும் அதிகாரத்தில் அவ்வில்லறத்தான் மற்றவர்களுக்காக எவ்வெவ்வாறு உறுதி, தியாக வாழ்வினை மேற்கொண்டுள்ளான் எனக் குறிக்கின்றார். இக்குறளின் பிற்பகுதியில் வரும் 'அஃதும்' என்பதற்கு மற்றத் 'துறவறமோ' என வலிந்து பொருள் கொள்கின்றார் பரிமேலழகர். ஆயினும் மற்ற உரையாசிரியர்கள் அச்சொல்லை இல்லறத்துக்கே ஏற்றுகின்றனர்; அதுவே பொருத்தமானதும் ஆகும். அந்த இல்லறமும் பிறர் பழியாதிருக்குமானால்தான் நன்று என்பதே பொருள். எனவே 'அறம்' என்பது பிறர் பழியா வகையில், தம்மால் இயன்ற அளவு தியாகம் செய்யும் வழியில், வையம் வாழத் தாம் வாழ வேண்டிய வழியில் அமைய வேண்டுவது என்பது ஒருவாறு தெளிவு பெறுகின்றது.

இதனாலேயே பிற உயிர்களுக்கு ஏதந்தரும் பொய்யாமை, கொல்லாமை இரண்டினையும் அறத்தின் உச்சப் படிகளாக்கினார். வள்ளுவர் வாய்மை என்பதற்கும் இத்தகைய வகையிலேயே பொருள் கொள்வதைக் காணலாம். மற்றவர்களெல்லாம் 'உள்ளதை உள்ளபடியே சொல்வதே வாய்மை' என்று விளக்கம் தர, இவரோ 'வாய்மை எனப்படுவது யாதெனில் யாதொன்றும் தீமை இலாத சொலல்' (291) என விளக்குவர். யாருக்கும் தீதின்றி, தன்னையற்ற வேறு ஒருவருக்கு நன்மை பயக்கும் பொய்யும் வாய்மையாம் என்று இன்னும் ஒரு படி மேலே சென்று, 'பொய்மையும் வாய்மை இடத்த புரைதீர்ந்த நன்மை பயக்கும் எனின்' (292) என அடுத்து விளக்குகிறார். எனவே வள்ளுவர் வாய்மை என்றும் கொல்லாமை என்றும் குறித்தவற்றை உயர் அறமாகக் காட்டியது அதனாலேயாம். ஆக எந்த வகையாலும் யார்க்குந் தீங்கு செய்யாத ஒன்றையே அறம் என அவர் சுட்டுகிறார் எனக் கொள்ளல் வேண்டும்.

> ''எணைத்தானும் எஞ்ஞான்றும் யார்க்கும் மனத்தானாம்
> மாணா செய்யாமை தலை''

என்ற குறளையும் நோக்குக.

அப்படியானால் மேலே மணிமேகலை ஆசிரியர், பாரதியார் போன்றவர்கள் சுட்டியவை யாவும் அறமாகாவோ என்ற ஐயம் எழுதல் இயல்பு. அத்தகைய ஐயத்துக்கு இடமில்லை. அவற்றையும் வள்ளுவர் அறமாகவே கொள்ளுவர். அறத்தின் வகைகளைப் பலவாக்கி எண்ணிப் பார்க்கின்றார் அவர். ஆங்கிலப் பேரகராதி சுட்டியபடி தமிழிலும் இந்த 'அறம்' விரிந்த எல்லை இல்லாத பொருள்களைச் சுட்டி, அதனதன் அளவில் ஒவ்வொரு வகையில் சமுதாய வாழ்வுக்கு ஏற்றபடி அமைகின்றது. எனினும் அவற்றின் உச்சியில் முடிபினை—ஆங்கிலப் பேரகராதி காணாத முடிபினை—வள்ளுவர் சுட்டியுள்ளார், என்பதையே இங்கே இறுதியாக நாம் காண்போம்.

'கொல்லாமையினை வள்ளுவர் உயர்ந்த அறமாகக் கொள்ளுகிறாரே அது யாண்டும் பொருந்துமா என்ற வினா எழும். வடகோடியில் துருவப் பிரதேசத்தில் வாழும் ஒருவனுக்கு அங்குள்ள உயிர்வாழ் பொருளன்றி வேறு கிடையாதே; அவன் எப்படி அவற்றைக் கொன்று தின்னாது வாழ முடியும்? ஆகவே அது சிறந்ததாகத் தோன்றவில்லையே என்பர். அப்படியே பொய்யாமை, வாய்மை, வெகுளாமை முதலியவற்றைத் துறவறத்தில் வைத்தமைக்கு, அவை முற்றும் அன்றி ஒரோவழியே இல்லறத்தானுக்கு அமையும், எனவே துறவறத்தில் அவற்றை அமைத்தார் என்பர். இவை யாவும் நாம் மேலே கண்டபடி சமுதாய வாழ்வின் அடிப்படையில் அமைகின்றன எனக் கொண்டு, இவற்றிற்கு மேலாக வள்ளுவர் அறம் பற்றி எட்டிய முடிபினைக் காண்போம்.

> ''மறந்தும் பிறன்கேடு சூழற்க சூழின்
> அறம்சூழும் சூழ்ந்தவன் கேடு'' (204)

என்ற குறளின் வழியே அறத்தின் செயலை வற்புறுத்துகிறார். 'சூழற்க' என்ற சொல்லுக்கு 'எண்ணாதொழிக' என உரை காணுகிறார் பரிமேலழகர். ஆம்! எண்ணலும் செய்தலொடு ஒக்கும் என்ற உண்மையினை வள்ளுவரே பலவிடங்களில் வற்புறுத்துகிறார். எனவே மற்றவனுக்குக் கேடு நினைத்தாலே அறக்கடவுள் அதைப் பொறுக்காது தண்டிப்பான் என்றால், அறத்தின் செம்மையும் தெளிவும் நன்கு புலனாகின்றதன்றோ!

எனவே எங்கே மன. மொழி, மெய் ஆகிய மூவிடத்தும் உண்மை, வாய்மை, மெய்மை இருக்கிறதோ அங்கே அறக்கடவுளின் ஆதிக்கம் இருக்கும் என்பது தெளிவு. மேலும் இதன்வழி அறம் என்பது ஏதோ மற்றவர்களுக்கு—ஏழைகளுக்கு—பிறருக்குக் கொடுப்பது என்ற அளவில் நிற்கின்ற ஒன்று அன்று என்பதும், அது பலவகை பரிணமித்து, பலப்பலவகையில் கொள்வோர் கொள்வகையில் உயர்ந்து, அனைத்துக்கும் மேலாக நல்ல உளம், நல்ல உரை, நல்ல செயல் ஆகியவற்றில் அடங்கி, யாதும் யாரும் துன்புறா வாழ்வில் சமுதாயத்தை நடத்திச் செல்லும் ஒன்று என்பதும் தெளிதல் வேண்டும்.

இந்த நல்வாழ்வுக்கு அடிப்படை நல்ல உள்ளம்தானே! எனவே தான் வள்ளுவர் அறத்தின் அடித்தளமாக உள்ளத்தை அமைக்கின்றார். உள்ளத்தில் அழுக்குமூட, உலகறிய எண்ணான்கு அறமியற்றும் பல 'பெரியோர்கள்' வாழும் உலகுக்கு வள்ளுவர் அறம் புரியாததுதான். சுமைதாங்கி அமைத்து அதில் தன் பெயரைப் பொறித்துக்கொள்ளப் பெரும் பொருள் செலவிடும் மனிதனுக்கு வள்ளுவர் அறம் புரியாதது. வருமான வரியை மறைக்க வாரி வழங்கும் 'வள்ளல்'களுக்கும் வள்ளுவர் அறம் புரியாத ஒன்றுதான். ஆனால் வள்ளுவர் அவற்றைச் செய்ய வேண்டாம் என்று சொல்லவில்லை. அவர் மட்டுமன்றி எல்லா அறநெறியாளர்களும், சான்றோர்களும், சமயத்தலைவர்களும் எல்லா அறங்களையும் செய்யத்தான் சொல்லுகிறார்கள். ஆனால் அவ்வறச் செயல்கள் ஆரவாரமற்றவைகளாக இருக்க வேண்டும் என்பதே அவர் கருத்து. 'இடக் கை செய்வது வலக் கைக்குத் தெரியாது இருக்கட்டும்' என்ற ஏசுவின் பொன்மொழி அதுபற்றியதே. எனவே, மற்றவர்களுககுத் தரும் அறம் யாரும் அறியா வகையில் அமைய வேண்டுவதே! இதை இன்று சொன்னால், சொல்பவர் பயித்தியக்காரர்கள் எனப்படுவர். எனவேதான் வள்ளுவர் 'ஈகை' போன்ற அதிகாரங்களையும் அமைத்து, அதிலும் 'இலன் என்னும் எவ்வம் உரையாமை'யும் அமைத்து, உணர்வார் உணர்க என விட்டுச் சென்றார். ஆனால் அந்த அறங்களுக்கும் பிற எல்லா அறங்களுக்கும் மேலாக மனம் அமைய வேண்டியதைத் தான் வள்ளுவர் வற்புறுத்துகின்றார். 'மனமது செம்மையானால்

மந்திரம் செபிக்க வேண்டா' என்ற பொன்மொழி வாழ்வில் பின் பற்ற வேண்டிய ஒன்றல்லவா? ஊர்தொறும் சுற்றி இறைவனைப் பாடிப் பரவிய சுந்தரர்.

''தன்னில் ஆசறுசித்தமும் இன்றி தவமுயன்று அவ
மாயின பேசி
பின்னல் ஆர்சடைக் கட்டி என்பணிந்தால் பெரிதும்
நிந்துவது அரிது'' (7. 64. 7)

என்று பாடுகின்றார் என்றால் எல்லாவற்றைக் காட்டிலும் மேலானது—உயர்ந்தது—உச்ச அறமாவது தூய உள்ளம் உடைமை யன்றோ! 'மனத்தது மாசாக மாண்டார் நீராடி மறைந்தொழுகு மாந்தர் பலர் (278) என்று வள்ளுவரே இந்த அவலநிலையைச் சுட்டி. உலகம் போகும் போக்கினைக் கண்டிக்கவும். கண்டு கண்ணீர் வடித்து வருந்தவும் செய்கிறார் எனவே அறமெனப்படுவது கீழ்த்தளத்திலே பலவகையாக அமையினும். அவற்றையெல்லாம் உள்ளடக்கி. அவற்றின் எல்லைகளையெல்லாம் கடந்து. மேலாக, ஓங்கி உயர்ந்து நிற்பது மனம் தூய்மையாக நிற்கும் அறமேயாகும். இதையே அறன்வலியுறுத்தலில் வள்ளுவர்,

''மனத்துக்கண் மாசிலன் ஆதல் அனைத்து அறன்
ஆகுல நீர பிற'' 34)

என்கிறார். எப்படி மாசற்று இருப்பதை அறிவது எனப் பக்கத்தில் ஒருவன் கேட்டிருப்பான் போலும். உடனே அடுத்த குறளில் 'அழுக்காறு, அவா. வெகுளி, இன்னாச்சொல் நான்கும் இழுக்கா இயன்றது அறம்' (35) என்கிறார. ஆக, மாசாக, உள்ள இவை அனைத்தும் நீங்க, மனம் தூய்மையாக அமையும். அத் தூய்மை வழியே உண்மையும் வாய்மையும் மெய்மையும் மலரும். எனவே, இதைத் தெளிவாக்கி 'அனைத்து அறன்' எனவே வலியுறுத்திக் காட்டிவிட்டார்· 'ஐயா' தாங்கள் வேறு எதைஎதையோ அற மென்றீர்களோ' என்று கேட்டால் 'அவை ஆகுல நீர' என்றும் பதில் தந்து விட்டார் அவற்றை வேண்டாமென்று சொல்ல வில்லை. இதற்கு உரை காணவந்த பரிமேலழகர் ''பிறரறிதல் வேண்டிச் செய்கின்றனவாதலின் 'ஆகுல நீர என்றார்'' என நல்ல

விளக்கம் தந்துள்ளார். இதற்கு மேலும் விளக்கம் தேவை இல்லை அல்லவா !

வள்ளுவர் ஒரே பொருளைப்பற்றிப் பலவிடங்களில் விளக்கி னும் அவற்றைத் தரப்படுத்தி—முறையாக அடுக்கி, அவற்றின் உச்ச நிலையிலே உள்ள செம்மையினைக் காட்டும் நெறியினர் என் பதை அவர் குறளை நன்கு உணர்வார் அனைவரும் தெளிவர். தவம், வாய்மை, கல்வி, அறிவு முதலிய சொற்களுக்கும் அவர் காட்டும் விளக்கங்களும் இன்பம் அரசு, அமைச்சு முதலியவற்றின் தெளிந்த பொருள்களும் அவர் உள்ளங்காட்டும் ஒளி விளக்கங் களாகும். அவ்வாறே இந்த 'அறம்' என்னும் சொல்லுக்கும் பல திறப்பட்ட வகையில் பொருள் விளக்கங்காட்டி அவற்றின் இன்றி யமையா நிலைகளையும் உணர்த்தி, அவற்றிற்கு மேலாய மன மாசற்ற செவ்விய அறத்தையும் தெளியக் காட்டி, பிற எல்லா அறங்களோடு அந்த மாசற்ற மனம் ஒன்றினால்தான் அவையும் அறமாகும் என்றும் உணர்த்தினார். ஆம்! இன்று நாட்டிலும் உலகிலும் அந்த 'மாசற்ற அறம்' இல்லாத காரணத்தால்தான் எல்லாக் கொடுமைகளும் நிகழ்கின்றன. உலகினைக் கண்டு வாடி வருந்திய வள்ளலார் 'உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசுவார் உறவு கலவாமை வேண்டும்' என்று ஆண்டவனை வரம் வேண்டுகிறார். எனவே அறம் வையத்தை வாழ வைக்கும். அறம்—உயிரினத்தை ஒத்து நோக்கிப் புரக்கும் அறம் அவரவர் உள்ளத்தைத் தூயதாக்குவதேயாகும். அத் தூய உள்ளத்தில் அழுக்காறோ—அவாவோ—வெகுளியோ—அவற்றின்வழி வெடிக் கும் இன்னாச் சொல்லோ வருமா! அவை இன்றேல் வைய வாழ்வில் தீமையேது—செழுமையன்றோ திசைழும்! அத்தகைய நல்ல அறம் நாட்டில் முகிழ்க்கும் நாள் எந்நாளோ '



# 32. "வாழ்வு" ஒரு பூஞ்சோலை

[தமிழ்நாவலர், புலவர் சி. அரசப்பனார்]

உலக உயிரினங்களில் மக்கள் இனமே உயர்ந்தது: ஆறறிவு பெற்றது. அதன் அறிவு வளர்ச்சியே இன்று உலக நாகரிக வளர்ச்சியாக உயர்ந்திருக்கிறது, மக்கள் வாழ்வு உயர்வடையப் பல வழிமுறைகள் கையாளப்படுகின்றன. அவற்றில் சில மிகப் பழையனவாகவும் உள்ளன. சில புதியனவாகவும் உள்ளன சில நம் நாட்டில் தோன்றியன ; சில பிறநாடுகளில் தோன்றியன.

''வாழ்வு'' என்பது நீடிக்க நீடிக்க அறிவு வளருகின்றது ; அனுபவ அறிவில் தெளிவு ஏற்படுகின்றது. அதனால், எந்த நாட்டிலும் முதியவர்களுக்குப் பெருமை இருக்கிறது. எத்தனையோ சிக்கலான பிரச்சினைகளை வாழ்வில் ஒவ்வொரு மனிதனும் சந்தித்துத்தான் ஆக வேண்டும். பலர் பல வகைகளில் வெற்றி பெற்றிருப்பர். அவைகளை ''நூலாக'' எழுதி வைக்கும்போது அவற்றைப் படிக்கின்றவர் தம் பட்டறிவில் பட்டதுடன் ஒப்பிட்டுப் பார்க்க ஏதுவாகிறது. கல்வியும், அறிவும் துணையாகின்றன. பட்டறிவு மிகச் சிறந்ததாக இருந்தாலும் அது உடனுக்குடன் கிடைப்பதில்லை. தாமதமாகும். தாமதமானாலும், ஒருமுறை அடிபட்டவன் ; பலமுறை படித்தவற்றைவிட நினைவில் நிற்கின்றது அந்த 'அனுபவம்'.

எனவே, வாழ்வு நீளவும் அதை ஒழுங்காக வளர்த்துக் கொள்ளவும் பல வழிமுறைகள் இருக்கின்றன. அவற்றைப் பின்பற்றினால் காலச் செலவும், பொருட் செலவும் குறைவதுடன் பலவித இன்னல்களிலிருந்தும் விடுபடலாம்,

மற்ற உயிரினங்களைவிட மனிதனுக்கு இளமை அதிகம். நூறாண்டு மனிதனின் ஆயுள் என்றால், இருபது ஆண்டுகள் இளமைக் காலமாகின்றது! நூறாண்டு வாழும் யானைக்கு அவ் வளவு நீண்ட இளமை இருப்பதில்லை! பத்தாண்டுகளிலேயே முழு யானையாக வளர்ந்துவிடுகிறது!

மனிதன் பத்தாண்டுகளில் முழுமனிதனாக வளர்வது இல்லை, அதனால், இயற்கையிலேயே மனிதனின் நீண்ட இளமைக்குக் காரணம் இருக்க வேண்டும். ஐந்தில் ஒரு பாகமாக இருக்கின்ற இளமையை—இருபதாண்டுகளை யார் யார் நன்றாகப் பயன் படுத்திக்கொள்கிறார்களோ அவர்களே நீண்ட நாள் வாழவும், அந்த வாழ்வில் பெரும்புகழ் அடையவும் வாய்ப்பேற்படுகிறது.

இளமையில் நல்ல கல்வி, நல்ல கலைவளம், நல்ல உடல் நலம் ஏற்படத்தக்க பயிற்சியைத் தாய், தந்தை, பள்ளி, கல்லூரி, அரசாங்கம் தர வேண்டும்.

''ஈன்று புறந்தருதல் என்தலைக் கடனே
சான்றோன் ஆக்குதல் தந்தைக்குக் கடனே
நன்னடை நல்கல் வேந்தர்க்குக் கடனே ''

என்று புறநானூறு கூறுகின்றது. நல்ல தாய் முழுப் பிள்ளையைக் குறையின்றிப் பெற்றுத் தந்து தன் கடமையை நிறைவேற்றி விடு கின்றாள். தந்தை தன் மகனைச் ''சான்றோன்'' ஆக்க வேண்டும். அதற்கு அம் மக்களுக்குக் கல்வி, அறிவு, ஒழுக்கம், வாய்மை, அன்பு, பண்பு அத்தனையும் கற்பிக்க வேண்டும். நல்ல கல்வியைத் தனிமனிதனே தந்துவிட முடியுமா? அதற்கு அரசாங்கம் உதவ வேண்டும். நல்ல அறிவை மக்களுக்குத் தந்தையே கொடுத்துவிட முடியுமா? நண்பர்கள் உதவ வேண்டும்; அரசாங்கம் உதவ வேண்டும். நல்ல பிள்ளையாக இருந்தாலும் புதியனவற்றை அறிந்துகொள்ள முயற்சி இருக்க வேண்டும். முயற்சியும், உழைப்பும் ஒப்பிட்டுப் பார்த்தே ஒவ்வொருவருக்கும் மிகுதியாகும்.

நாட்டில் யாவரும் உழைத்தால் அவனும் உழைப்பான். அப்படி இல்லாமல் சிலரே உழைக்கின்றனர். அதிலும் உடல்

உழைப்பு அற்ற பலர் நலமாக வசதியாக வாழுகின்றனர். ஓயாமல் உழைக்கின்ற பலர் உண்ண உணவும், உடுத்த நல்ல உடையும், இருக்க வசதியான இல்லமும்கூட இல்லாமல் இருக்கின்றனர். இதைக் கண்ணால் காணுகின்ற மக்கள்—கற்ற இளைஞர்கள் குறுக்கு வழி தேடி உயரப் பார்க்கின்றனர்!

"அதிஷ்டச் சீட்டு வாங்கலாமா? குதிரைப்பந்தயம் விடலாமா? மதுபானக் கடைகளை நடத்தலாமா? அதிகவட்டிக்குக் கொடுத்து ஏழைகளின் அறியாமைகளைப் பயன்படுத்திக்கொண்டு பெரும் பொருள் திரட்டலாமா?" என்று சிந்திக்கின்றனர். அரசாங்கமும் இத்தகைய நேர்மையான உழைப்பை விரும்பாதவர்களுக்கே உதவுகின்றது; சமுதாயமும் எப்படியாவது செல்வம் பெற வேண்டும் என்ற தீயவழிக்கே உரமூட்டுகின்றது

அதனால் இன்றைய அமைப்பில் எந்தத் தந்தையும் தன் மகனைச் சான்றோனாய் ஆக்க முடியாது?

அரசாங்கம் மதுக்கடையைத் திறந்துவிட்டுத் திரைப் படங்களில் ஐம்பெருங்குற்றமும் செய்கிறவன் பெருஞ் செல்வத்தோடும், பெரும் புகழோடும் இருப்பதைக் காட்டும்போது அறியாமை மிகுந்த மக்கள், மது மயக்கத்தில் ஈடுபட்ட மக்கள் செம்மையாக வாழுவரா?

நன்னடையை அரசு தர வேண்டும். வாழ்வு நடமாடும் நிழல் தான்!

"கற்க கசடற" என்பதை அரசு அமைக்க வேண்டும்.

"நிற்க அதற்குத் தக" என்பதையும் அரசு நடத்திக்காட்ட வேண்டும். சட்டம் செய்வது அரசுதானே. அதைச் செவ்வையாக நடத்த வேண்டியதும் அரசுதான்.

"பொய் சொல்லாதே,
திருடாதே,
சூது ஆடாதே,
கொள்ளை அடிக்காதே,
கொலை செய்யாதே"

என்று அரசு சொல்வதுடன் தவறு இழைப்பவர்களுக்குக் கடுந் தண்டனை வழங்க வேண்டும். கடுந்தண்டனையால் குற்றம் செய்தவர் திருந்துவார். இதைக் காணும் சபலபுத்தி உடையவர்கள் குற்றம் செய்யத் துணியார். இன்றைய உலகில் குற்றம் புரிந்தவர்களுக்குக் கடுந்தண்டனே இன்மையால் இன்று மெல்லியலாராகிய பெண்களும் இளைஞராகிய கல்வி ஆளர்களும் கொலை, கொள்ளை போன்ற பெருங்குற்றம் செய்கின்றனர்

''குடி குடியைக் கெடுக்கும்'' என்று எழுதி வைத்துவிட்டு, மதுபானக் கடைகளை எங்கும் திறந்து வைத்து அரசாங்கமே வாணிபம் செய்வது எவ்வளவு கேலிக் கூத்து. படிப்பதைவிட, கேட்பதைவிட, நடப்பதைத் தானே நம் மனம் பின்பற்றும் என்று உளநூல் கொள்கையைக் கூட ஆட்சி அறியவில்லையே!

குடியால், சூதால் எத்தனை கொலை, கொள்ளை தினம் வளர்ந்து வருகிறது? எனவே ''நன்னடைநல்கல்'' இன்றும் அரசு பொறுப்பே.

இந்த ஐந்து குற்றம் மட்டும் செய்யாதிருந்தால் போதுமா?

நம்மில் பலருக்கு அழுக்காறு, அவா, வெகுளி, இன்னாச் சொல் இயல்பாக இருக்கின்றதே ஏன்? திருவள்ளுவர்தாம் மனத்தில் ஏற்படும் குற்றத்தைக் கண்டு போக்க வழி கூறியவர்.

ஒருவருடன் ஒருவரை ஒப்பிட்டுப் பார்க்கும்போது அவரின் உழைப்பும் நேர்மையும் தெரிய வேண்டுமே ஒழிய, அவரின் உயர்வு மட்டும் தெரியும்போது பொறாமை தோன்றுகின்றது. அறியாத் தனத்தால் கோபம் உண்டாகின்றது. அறிவு நிறைந்தால் பண்பு வரும். கோபம் போகும். கோபம் மூண்ட பிறகு கடுஞ்சொல் வருகின்றது. இனிய சொல்லும், பயனுடைய சொல்லும் நம்மிடம் இருப்பு அதிகமானால் கடுஞ்சொல்லும், கொடுஞ்சொல்லும் பயனிலாச் சொல்லும் பறந்தோடும்.

எனவே, உழைப்பு, நேர்மை, கல்வி, அறிவு, நல்ல நட்பு, பெரிய சிந்தனை, சிறந்த வழிபாடு, நல்ல நூல்களின் துணை ஏற்படும் போது சால்பான வாழ்வு அமைகிறது.

எண்ணம் சரியாக ஓடும்போது சொற்கள் நன்றாக அமையும். எண்ணமும், சொல்லும் நன்றாக அமைந்தால் செயல் நன்றாக அமையும். அச் செயல்களால் பொருளும், இன்பமும், புகழும் உண்டாகும். வறுமையால் பலர் கெடுகிறார்கள். வறுமையைப் போக்க மெய்யாக உழைக்க வேண்டும்; அறிவோடு உழைக்க வேண்டும்; ஒன்றுபட்டு உழைக்க வேண்டும்.

'மானம் குலம் கல்வி, அழிக்கும் பசி என்பதை உணர்ந்து முதலில் வறுமையை விரட்டி, வளமையைத் தேக்க வேண்டும். செல்வம் வேண்டும் என்பதற்காக வாழ்நாள் முழுவதும் செல்வம் தேடுவதிலேயே காலத்தைக் கழித்து இன்பத்தையும், புகழையும் இழக்கக் கூடாது செல்வத்தைப் பெறுவது மட்டும் போதாது. அதைப் பேணிக் காக்கவும் வேண்டும். வளரும் செல்வத்தை அற வழிக்கும் வகுக்க வேண்டும்.

"உண்பன நாழி உடுப்பன நான்கு முழம்" என்ற எளிய வாழ்வை மேற்கொள்ள வேண்டும். "எண்பது கோடி நினைந் தெண்ணுவன" என்ற இழிநிலைக்கு மனத்தை விடக்கூடாது. அதற்காகத்தான் படிப்படியாக மனத்தை "இலக்கிய மனமாக" உயர்த்த வேண்டும். மேடு பள்ளம் அற்ற, உயர்வு தாழ்வு அற்ற மனமாகப் பண்படுத்த வேண்டும். அறநூல்களைக் கற்க வேண்டும். சான்றோர்களுடன் பழக வேண்டும். நற்செயல் புரிந்துகொண்டே இருக்க வேண்டும். பகை எந்த வடிவத்திலும் நம் மனத்தில் புக விடக் கூடாது. நாம் தீமை செய்ய வேண்டும் என்பது கூட வேண்டியதில்லை. நம்முடல் வளத்தைக் கண்டுகூட நம்முடைய வெண்மை உடையைக் கண்டு கூடப் பொறாமை கொண்டு—பகை கொண்டு தீங்கிழைக்கிறவர்கள் சமூகத்தில் இருக்கத்தான் செய்வர்!

"ஒருவனை ஒருவன் அடுதலும் தொலைதலும்
புதுவதன்று உலகத் தியற்கை"

என்று இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே ஓர் அறிஞர் கூறினார். அதனால், பகையை அழிக்க எளிமையாக வாழ்வது ஒரு வழி. அல்லது வலிமையாக வாழ்வது ஒரு வழி. இந்த

இரண்டிற்கும் மேலாக உதவி வாழ்வது மிகச் சிறந்த வழியாகும். ஈதலும், விருந்தும் இதற்காக ஏற்பட்ட அறமே ஆகும்.

இளமையை நன்றாகச் செலவழிக்காதவர்கள் உடல்நலம் குன்றி இருப்பர். முழுக் கல்வி அறிவு அற்றிருபபர். நல்லொழுக்கம் அற்றிருப்பர். திடமான கொள்கைகளோ குறிககோளோ இருக்காது. அடிக்கடி நோய்வரும். உடல் நோயுடன் மனநோயும் சேர்ந்து கொண்டால் வேறு அழிவுகளே தேவையில்லை.

உடன்பிறந்தவர்களும் சுற்றத்தாரும் உதவமுடியுமோ? ஆகாது. மாமலையிலுள்ள மருந்துபோன்ற சிலர்—சான்றோர் உதவலாம். அம் மருந்தால் பிணி நேரலாம். செல்வம் நிறைய உடையவரும், கல்வி அறிவு நிறைய உடையவரும் ஏன் நோயடைகின்றனர்? ஏழைகள் நோயடைவது இயற்கை.

அறியாதவர்கள் பிணியுறுவது இயல்பு. கல்வியும், செல்வமும் உடையவர் நோயிலிருந்து விலகலாம். ஆனல், நாட்டுநிலை அப்படி இல்லையே? ஏன்? இந்தக் கல்வியாளரும் பெருஞ் செல்வரும் உடல் உழைப்பை விரும்பவில்லை. உடல் உழைப்பு எந்த வயதிலும் இருக்கவேண்டும். உழைப்பே நோய் போக்கும் நல்ல மருந்து!

உண்ணாமல் இருக்க இயலாது. ஆனால் உண்ட உணவு செரிக்க உழைக்க வேண்டாமா? நீண்ட வாழ்வு நிறைஞானம் தரும். நிறைஞானம் பிறவிப் பிணியையே ஒழிக்கும்.

காற்றில் ஆடும் வேப்பங்கன்று நாள் ஆக ஆக வயிரம் பொருந்திய மரமாக மாறி ஆண் யானை கட்டக் கட்டுத் தறியாக ஆவதில்லையா? அதேபோல் மெல்லிய உடல் உடையவரும், மனம் உடையவரும் உழைப்பால் வலிமை பெறலாம்!

நிழலைக்கண்டு அஞ்சிய காந்தியடிகள் உலகம் முழுதும் கொடி கட்டி ஆண்ட ஆங்கிலேயரை—வெள்ளையனே வெளியேறு—என்று முழங்கவில்லையா? முதலில் உடல் உழைப்பை விரும்பவேண்டும். உடல் உழைப்பைச் செய்கிறவர்களை உண்மையில் மதிக்கவேண்டும்.

அறிஞர்கள் உடல் உழைப்பை விரும்பி மேற்கொள்ளவேண்டும். உடல் உழைப்பில் வாழ்கின்றவர்கள் சிறிது நேரமாவது படிக்க வேண்டும். நல்லனவற்றைச் சிந்திக்கவேண்டும். உலகம் முழுதும் மண்டிக் கிடக்கும் இயற்கையைத் துய்க்கவேண்டும். இயற்கை யழகைக் காண எங்கும் தேடி ஓடவேண்டியதில்லை. நம்மூருக்கு அருகில் ஓடும் அருவியும் ஆறும், மரமும், செடியும் கொடியும் பூத்துக் குலுங்கும் அழகு எங்குதான் இல்லை. செங்கதிரும் வெண் மதியும் மின்னி அழகூட்டும் விண்மீன்களும் நிறம்மாறி மாறி அசையும் முகில் கூட்டமும் சிதறும் மழைத்துளியும், சில்லென வீசும் தென்றலும், பசுமையாகக் காட்சியளிக்கும் பசிய நெற்பயிரும் வாழையும் கரும்பும் இனிய காட்சிகளைத் தினமும் நல்குகின்றன. அவை வற்றாத பெருஞ்செல்வங்கள்.

வானுற ஓங்கிய மலைகளும் விரிந்து பரந்து கிடக்கும் அலை கடலும் கொள்ளை இன்பம் வேளைதொறும் தருவன. அவற்றைக் காணாதவர் குருடர் அல்லவா? அவ்வொலி கேளாதவர் செவிடர் அல்லவா? அவற்றை நினைந்து இன்புறாதவர் ஆறறிவுடையவரா? இன்பம் திளைப்பவரா !

தினமும் காணும் இயற்கை இன்பத்தை,

"உலகம் உவப்ப வலனேர்பு திரிதரு
பலர்புகழ் ஞாயிறு கடல்கண் டாஅங்கு
ஓவற இமைக்கும் சேண்விளங் கவிரொளி"

என்று நக்கீரர் பாடினார்.

"தங்கம் உருக்கித் தழல்குறைத்துத் தேனாக்கி
எங்கும் புதுக்கியதோர் இங்கிதமோ ?"

என்று கவிஞர் பாரதியார் பாடினார்.

இவர்கள் பாடிய இயற்கையழகு இன்றும் காணும் காட்சி யாகவே உள்ளது. இவற்றில் நமக்குப் பங்கு உண்டா ?

செடியும் கொடியும் சேமித்து வாழ்வதை அறிந்து நாமும் மித்து வைக்கச் சிக்கனமாக வாழவேண்டும். தாவரங்கள் பூத்துக்

குலுங்கி மணம் பரப்புவது போல நாமும் புகழுடன் வாழவேண்டும். தாவரங்கள் கனி தந்து பயன்படுதல் போல நாமும் பயன்பட வேண்டும்.

இவை யாவும் பயன்பட :

''இன்பம் பெருக்கி இருள் அகற்றி எஞ்ஞான்றும்
துன்பம் தொடர்பறுத்துச் சோதியாய்—அன்பமைத்துச்
சீரார் பெருந்துறையான் என்னுடைய சிந்தையே
ஊராகக் கொண்டான் உவந்து''

என்ற நிலை வருமானால் யாவும் கைகூடும். வாழ்வு—ஒரு பூஞ் சோலையாக மலர என்றும் முயற்சி—உழைப்புநீர் சொரிய வேண்டும்.

———

# 33. கதிரின் கதிர்

[பேராசிரியர் அறிஞர் ந. சஞ்சீவி]

சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ்ப் பேரகராதியில் 'கதிர்' தொடர்பான சொற்கள் வருமாறு :

1

1. கத்தக் கதித்தல் - ('கதி' என்ற சொல்லின் இரட்டிப்பு) நிரம்ப மிகுதல்.

2. கதகதெனல் - 1. சூடாதற் குறிப்பு; 2. கொதி வருதல் பற்றிய குறிப்பு.

3. கதம் [ (கதவு - 1. பற்றுதல்; 2. உரிமைக்கு மேல் பற்றுதல்; 3. செறுக்குதல்; 4. கலங்குதல்; 5. எதிரொலித்தல் (பிரதிபலித்தல்)]

1. சினம் (கோபம்) ; 2. பஞ்சம்; 3. பாம்பு.

4. அ. கதவு[1] - (சார்த்தும்) கதவு
ஆ. கதவு[2]-தல்-சினத்தல்,
இ. கதவு[3] - சினம் (கோபம்)

5. கதழ்-தல் [கதவு - பார்க்க 4. அ, ஆ, இ]

1. கோபித்தல் 2. பிளத்தல் 3, விரைதல் 4. உக்கிரமாதல் 5. மிகுதல்.

6. கதழ்வு - 1. விரைவு 2. உக்கிரமம் 3. மிகுதி 4. பெருமை 5. ஒப்பு.

7. கதழ்வுறுதல் - அச்சத்தால் கலங்கிக் கூச்சலிடுதல்

8. கதறு - உரக்க அழுதல்; விலங்கு முதலியன கத்தல்

## 2

9. கதி[1]த்தல் - கோபித்தல்

10. கதி[2] - த்தல் - சொல்லுதல்

11. கதி[3] - 1. நடை 2. வழி 3. விரைவு 4. புகலிடம் 5. வீடு 6. குதிரை நடை 7. உயிரெடுக்கும் பிறப்பு நிலைகள் 8. ஒருவர் நிலை 9. ஆற்றல் (சக்தி) 10. இயல்பு 11. ஆகூழ் (அதிட்டம்) 12. படலம் 13. தத்துவம் 14. சாதனம்

12. கதி[4]-த்தல் - 1. விரைதல் 2. நடத்தல் 3. எழுதல் 4. பருத்தல் 5. நற்கதி அடைதல் 6. மிகுதல் 7. கடத்தல் 8. அறிதல்

13. கதிக்க - 1. நேராக 2. கனமாக

14. கதித்த விலை - 1. உயர் விலை 2. அநியாய விலை

15. கதிப்பு - இறுகல்

16. கதிப்பொருத்தம் - செய்யுள் முதல்மொழிப் பொருத்தங்களுள் ஒன்று

17. கதிமை - பருமை

18. கதி மோட்சம் - பரிகாரம், தப்பும் வழி

19. கதியற்றவன் - மிக வறியவன்,

## 3

1. கதிர். 1. கிரணம் - Ray of light 2. ஒளி Beam, gleam light 3. வெயில் Sun light 4. கதிரவன் அல்லது மதியம் Sun or moon 5. பயிர்க்கதிர் Ear of grain, spear of grass 6. நூல் நூற்கும் கருவி spinner's spindle 7. பார்க்க கதிர்க்கோல், 8. spoke of a wheel, radius of a circle சக்கரத்தின் ஆரக்கால் [ஈண்டு மட்டும் ஆங்கில இணைச் சொற்கள் தரப்பட்ட காரணம் 5 ஆம் பகுதியிலுள்ள ஆங்கில மூலச் சொற்களின் தமிழ்ப் பொருளோடு ஒப்பு நோக்க]

2. கதிர்-த்தல் - 1. பிரகாசித்தல் 2. வெளிப்படுதல் 3. மிகுதல் 4, இறுமாத்தல்,

3. கதிர்க்கட்டு - அரி (நெல்) கட்டு

4. கதிர்க்கடவுள் - சூரியன்

5. கதிர்க்கம்பி - கதிர்க்கோல்

6. கதிர்க்காம்பு - பயிர்க்கதிரின் தாள்

7. கதிர்க்குஞ்சம் - மனை முகப்பை அழகு செய்யும் முதலறுவடைக் கதிர்க்கொத்து

8. கதிர்க்குடலை - மணிபிடியாதகதிர்

9. கதிர்க்கோல் - 1. நூல் நூற்கும் கருவி. 2. தட்டார் கருவி வகை

10. கதிர் காமம் - தென்னிலங்கையில் ஒரு முருகன் கோவில்

11. கதிர்ச் சாலோகம் - இரும்புக் கம்பிகளை உடைய சாளரம்

12. கதிர்ச்சிலை - சூரியகாந்தம்

13. கதிர்செய்தல் - ஒளி விடுதல்

14. கதிர்த் தாக்கம் - கதிர் முதிர்ந்து சாய்கை

15. கதிர்த் தானியம் - கதிரில்தோன்றும் நெல் முதலிய தானியம்

16. கதிர் நாள் - உத்தரம்

17. கதிர்ப்பகை - 1. இராகு கேதுக்கள் 2. கதிரவன் கண்டு மூடும் அல்லி

18. கதிர்ப் பயிர் - இளங்கதிர்த் தானியம்

19. கதிர்ப்பாரி - கதிரவன் தோன்றியதும் மலரும் (பாரி மனைவி, தாமரை)

20. கதிர்ப்பாளை - ஆண்பனையின் பாளை

21. கதிர்ப்பு - பிரகாசம்

22. கதிர்ப்புல் - புல்வகை

23. கதிர்ப்போர் - கதிர்க்குவியல்

24. கதிர் பொறுக்குதல் - புன்செய் கதிர் அறுத்தல்

25. கதிர் மகன்-1. யமன், 2. சனி, 3. சுக்கிரீவன், 4. கன்னன்

26. கதிர்மணி விளக்கம் - கதிரேசச் செட்டியார் (திருவாசக விளக்க நூலின் பெயர்)

27. கதிர்முத்து - ஆணிமுத்து

28. கதிர்வட்டம் - சூரியன்

29. கதிர் வாங்குதல் - கதிர்ஈனுதல்

30. கதிர்வால் - பயிர்க்கதிரின் நுனி

31. கதிர் விடுதல் - 1 ஒளி வீசுதல், 2. கதிர் வாங்குதல்

32. கதிர் வீசு-தல் - கதிர் விடுதல்

33. கதிரடித்தல் - போரடித்தல்

34. கதிரம் - 1. அம்பு. 2. காசுக்கட்டி

35. கதிரம்[2] - கருங்காலி

36. கதிரவன் - சூரியன் (மக்கட்பெயருள் ஆடவர் பெயர்)

37. கதிரவன் புதல்வி - யமுனை (ஆறு)

38. கதிர்வேல் - முருகன் பெயர்களுள் ஒன்று

39. கதிராந்தலை - நெல்லின் முற்றிய கதிர்ப்பருவம

40. கதிரின்(னு)தல் - கதிர் வாங்குதல்

41. கதிரெடுப்பு-கதிர்க்கட்டைக் களத்துக்குக்கொண்டுபோகை

42. கதிரெழுதுகள் - சூரிய கிரணத்தெழும் தூளாகிய ஒரு நுட்ப அளவு

*43. கதிரேசன் - பண்டிதமணி கதிரேசன் செட்டியார் பெயர் போன்று ஆட்வர் பெயர்

44. கதிரை - கதிர்காமம்

45. கதிரோன் - சூரியன்.

*[உடுக்குறி பெற்ற சொற்கள் சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்ப் பேரகராதியில் இடம் பெறாதன]

## 4

மேற்கண்ட பட்டியல் பயன்: தமிழ்ச்சொல் வளவகை காட்டல். இது போன்ற வேறு சில சொற்களின் வீறுகாட்டும் பட்டியல்களும் இதற்குமுன் இக்கட்டுரையாளரால் எழுதப்பட்டுள்ளன. இப் பட்டியல் நோக்கம் முத்தமிழ்க்காவலர் கதிர்விழாவை ஒட்டி - 'கதிர்' என்ற சொல்லடிப்படையிலேயே அவர்தம் பண்பும் பயனும் பாராட்டிப் போற்றல். உடன்பாட்டு, எதிர்மறை நிலைகளில் 'கதிர்' என்ற சொல்லும் அதனடியான வேறு சொற்களும் தரும் பொருள்கள் முத்தமிழ்க் காவலர்க்குப் பொருந்தல் பூரிப்புக்குரியது

கதிர், கதிர்த்தல் என்ற சொற்களின் பொருள்களுள் சிறந்தது ஒளி. இதனடிப்படையில் - இதன் தோற்றம், பயன் தன்மை அடிப் படைகளில் உவம உருவகமாக எழுந்தனவே பிற பொருள்கள். கதிர் என்னும் பெயர்ச்சொல்லினும் கதிர்த்தல் என்னும் வினைச்சொல் நிலையில் தரும் பொருள்கள் முத்தமிழ்க் காவலரையும் அவர் போன் றாரையும் எடுத்துக்காட்டாக நினைவூட்டல் இயற்கை. 1. 2, பத்தி களில் வரும் சொற்களின் வேராய் விளங்கும் கதி, கதம், கதவு, கதழ், கதறு என்ற சொற்கட்கும் கத (ம், வு, ழ், து), கதி என்ற சொல்லே [கத என்பதே] அடி வேர்ச்சொல்லோ என்று எண்ணும் போது வெம்மை, வலிமை வேர்ப் பயனாய் விளங்கல் வியப்பும் மகிழ்வும் தருவதாகும். முத்தமிழ்க் காவலர் போன்றார் புகழ் மொய்ம்புக்கு இந்த வெம்மையும் வலிமையுமே காரணங்கள் அன்றோ ? இவை யெல்லாமும் 'கதிர்' காட்டும் கதியே ; விண்கதிர்கள் இல்லையேல் மண்கதிர்களும் இல்லையே. எவ்வகை மலர்தலும் கதிரின் பயன் தானே ;

## 5

இனி ஆங்கிலத்தில் (சென்னைப் பல்கலைக்கழக அ. சிதம்பரநாதன் செட்டியார்—தமிழ் ஆங்கிலம் - தமிழ்ச் சொற்களஞ்சியம்: 1. கதிர் (பயிர்) 2. கதிர் (ஒளி) க்கு இணையான மூன்று ஆங்கிலச் சொற்களுக்குத் தந்துள்ள பொருள்களுள் பொருந்திய பொருள்களை ஒப்பிட்டுச் சுவையும் பயனும் காணலாம்.

Corn' ,n பயிர்; விதை: தானியம், கதிர்மணி; கூலத் தொகுதி... Corn in Egypt, பொங்குவளம் Corn-baby, n முற்கால நிலவளத் தெய்வ மரபில் அறுவடை இறுதியில் எடுக்கப்படும் கூலமணிகளாலான பொம்மை வடிவம். Gleam, n. மினுமினுப்பு, பளிச்சிடுதல், மெல்லிய ஒளிக்கதிர்க்கற்றை; தடம், சாயல், இடைப்பட்டுத் தோன்றும் பண்பின் மென்கூறு; V. மங்கலாக ஒளி வீசு, மின்னு; பளிச்சிடு. ray, n. ஒளிக்கதிர், கிரணம், கதிர்வரை நேர்கோடு, ஒளிக்கற்றை, ... வெப்பக்கதிர்; ஆற்றலலைக்கதிர்; சிற்றொளி சிறிதளவு அறிவு விளக்கம்; அறிவு விளக்கத் தொடக்கம்; அறிவொளி; மகிழ்ச்சிக்கூறு; (தாவ) கொத்துமலரின் ஓரப்பகுதி (வில.) உடுமீன் வகையில் கிளையுறுப்பு. கதிர்வீசு; ஒளிகால; நம்பிக்கைச் சுடர்விடு. எண்ண அலை தோன்ற; (செய்,) வீசு, வீசச்செய்; ... சாதாரண ஒளி புக மாட்டாத பல பொருள்களை ஊடுருவிச் செல்லும் கதிர்கள்.

ஆங்கிலம் தமிழ் ஆகிய இரு மொழிகளில் உள்ள ஒரே பொருளுடைய சொற்களை ஒப்பு நோக்கல் பலவகைப் பயன் தரும், குறிப்பாகத் தமிழில் 'கதிர்' இருபெருஞ் சுடரைக் குறித்தல் போல் ஆங்கிலத்தில் ஒளியின் தொடர்பு இருத்தல் கருதத் தக்கது, சிறப்பாகச் சொற்பொருள் வளர்ச்சி என்பது ஒரு மொழி பேசும் மக்கள் அம் மொழியைப் பல்துறைகளிலும் பயன்படுத்துவதால் ஏற்படும் வளர்ச்சி என்பது தெற்றென விளங்கும்,

## 6

தமிழகப் புலவர் குழுவின் தலைவர் டாக்டர் வ. சுப, மாணிக்கம், மாணிக்கமும் கதிர் வீசும்! அவர்தம் ஆசிரியர் பண்டிதமணி கதிரேசச் செட்டியார்! அவர்தம் ஒளியோ பேரொளி! அவரியற்றிய திருவாசக விளக்கத்தின் பெயரே கதிர்மணி விளக்கம்! அதன் காரணமாக 'வள்ளுவம்' கண்ட மாணிக்கத்தமிழ் வ• சுப• மாணிக்கம் தம் மனைக்கு வைத்துள்ள பெயர் 'கதிரகம்' கதிர்போற்றும் புலவர் தலைமையில் புரவலர் போற்றும் புரவலர் முத்தமிழ்க் காவலர் கதிர் மலர் மணம் பரப்பல் இயற்கை: இன்பம்!

